# வள்ளுவர் வாழ்த்து

கோவை. இளஞ்சேரன்







—ஜீவி—

நினைவில்
நீங்காது
நிற்கின்றனர்.

*கவிஞர் கோவை. இளஞ்சேரனார் கதை வடிவம் தந்து உரையாடலில் பிணைத்துப் புதியதோர் பாங்கினில் உருவாக்கியிருப்பது இந்த நூலின் தனிச்சிறப்பு.*

*இதன்கண் அமையப்பெற்ற மண மக்களைக் கற்பனைப் படைப்புகளாக எண்ண முடியவில்லை. வள்ளுவரின் வாய்மொழியைக் கேட்கும் பேறு பெற்ற அவர்கள் நினைவில் நீங்காது நிற்கின்றனர். 'மலரினும் மெல்லிய ததனின் செவ்வி தலைப்படுவார் சிலரைப்' பலராக்க எண்ணும் முயற்சியை எவ்வளவு பாராட்டினும் தகும்.*

*இதன் எளிமையைப் புகழ்வதா; நடையழகைச் சுவைப்பதா; கருத் தோவியமாக்கிக் காட்டும் திறமையினைப் போற்றுவதா; ஆசிரியரின் தொண்டுள்ளத்தினை வாழ்த்துவதா எனத் திகைத்து நிற்கின்றோம்.*

**வே. சரோஜனி.**
**ஓ. கி. வேணுகோபால்.**
சென்னை.

# வள்ளுவர் வாழ்த்து

கவிஞர்
கோவை. இளஞ்சேரன்



கலைக்குடில்
வெளியீடு
நாகப்பட்டினம்

வள்ளுவர்
வாழ்த்து.



''நோக்காக்கால் தான் நோக்கி மெல்ல நகும்''

# பதிப்புரை

திருக்குறள் எனப்படும் முப்பால் வாழ்வினைச் செம்மை செய்ய எழுந்த நூல். அதன் பெருமையும் ஆழமும் நிறைவாகப் பேசப்படுகின்றன. அந்நூற் கருத்து வாழ்வின் வழிகாட்டியாகக் கொள்ளப்பட்டுக் கடைப்பிடிக்கப்படுவதும் நிறைவாக அமையின் மக்களினம் செம்மாந்து திகழும்.

அத்திகழ்வுக்குத் திருக்குறளின் கருத்துக்கள் எளிமையாக்கப்பட வேண்டும். இந்நூல் அவ்வகையிலமைந்தது; வள்ளுவப் பெருந்தகையாரின் வாய்மொழியாக, உரையாடல் வகையில் அமைந்தது.

எளிமை இனிமையொடு சுவை கூட்டி இந்நூலைக் கவிஞர் கோவை. இளஞ்சேரனார் எழுதி வழங்கியுள்ளார். கவிஞர் திருக்குறளை ஊன்றிப் பயின்று சுவைத்தவர். வாழ்வில் கடைப்பிடித்து மகிழ்பவர். அம்மகிழ்ச்சி நிறைவொடு உலக மக்கள், சிறப்பாகத் தமிழினம் வாழ வேண்டுமெனக் கருதுபவர். அதற்குரிய தொண்டின் ஒரு முனையாக அமைய இதனை உருவாக்கி அளித்துள்ளார்.

கலைக்குடியின் முதல் வெளியீடாகக் கவிஞரது "கோவை. இளஞ்சேரன் கவிதைகள்" வெளிவந்தது. அக் கவிதைகளின் இரண்டாவது பதிப்பு விரைவில் வெளிவரவேண்டிய அளவிற்குத் தமிழ்ப் பெருமக்களின் பேராதரவு துணை நின்றது. "வள்ளுவர் வாழ்த்"தின் இரண்டாவதுபதிப்பாகிய இஃது கலைக்குடியின் இரண்டாவது வெளியீடு. இதனையும் ஏற்றுப் போற்றிப் பயன்கொள்ள வேண்டுமெனத் தமிழ்ப் பெருமக்களைப் பெரிதும் வேண்டுகிறேன்.

மாரியப்பா ஏசன்சி உரிமையாளர் திரு. ஆ. நாராயணசாமி அவர்கள் இஃது வெளிவரப் பெரிதும் உதவினார்கள். சென்னை திரு. இரா. க. முருகன் அவர்கள் முழுப் பொறுப்பையும் ஏற்று உருவாக்கினார்கள். சென்னை குமரன் அச்சகத்தார் விரைந்து அச்சேற்றித் தந்தார்கள். அட்டை ஓவியத்தை நாகை 'ஜீவி' அவர்கள் செவ்வையாகத் தீட்டித் தந்தார்கள். என் உளமார்ந்த நன்றி இவர்கட்கு உரித்தாகுக.

வணக்கம்.

**சானகி இளஞ்சேரன்**

# முன்னுரை

வணக்கம். மகிழ்ச்சிக்குரிய காட்சியோடு இந்த நூலில் புகுவீர்கள். திருவள்ளுவர் வாழ்த்துகிறார்; மண மக்கள் மகிழ்கின்றனர். தொடர்கின்ற அவர்களது உரையாடல் உங்களை உடன் அழைத்துச் செல்லும். அக் காட்சி கற்பனையேயாயினும் அடிப்படை உண்மை கொண்டதென்பதை உள்ளத்தின் ஒரு மூலை சொல்லிக் கொண்டேயிருக்க வேண்டும்.

உரத்த குரலில் பேசுவதுபோல் தடித்த எழுத்தில் அமைந்த பகுதிகள் உங்களுடன் பேசும். அங்கங்கே அமைந்த உடுக்குறி உங்களைக் கீழே அழைத்துச் சென்று உரிய குறளைக் காட்டும். குறளில் இட்டுக் காட்டப்பட்டுள்ள நிறுத்துக் குறிகள் பொருள் தெளி வோடு பயிலத் துணை புரியும். யாப்பு சிதையாமல் வரை யறுக்கப்பட்ட சீர்கள் ஓசைத் தெளிவோடு படிக்கச் செய் யும். மீண்டும் மேலே செல்வீர்கள்.

காமத்துப்பாலின் முப்பத்தைந்து குறட்பாக்களால் பின்னப்பட்ட 'வாழ்வாங்கு வாழ்க' பகுதியை இன்பத் தினவோடு கடப்பீர்கள். தொடர்ந்து இல்லற இயலின் இருபது அதிகாரங்கள் ஏற்ற தலைப்புக்களுடன் அடுத் தடுத்து உங்களை உணர்வோடு வரவேற்கும். இருநூற்று நாற்பத்து நான்கு குறட்பாக்களின் தெளிவான கருத் தைப் பெற்றவர்களாய் நீங்கள் நூலினின்றும் வெளி யேறுவதை எண்ணி நான் மகிழலாம் என்று நம்பு கிறேன்.

நூலின் கருத்தோட்டத்தைக் காட்டிவிட்டேனாயினும் மேலும் ஒரு செய்தி குறிக்கிறேன். பண்பட்ட வாழ்வியல்

கண்ட தமிழர் சமுதாயத்தின் மேம்பட்ட வாழ்வியல் நூல் திருக்குறள் எனப்படும் முப்பால். ஒரு முழு வாழ்வியல் நூலுக்கு எழவேண்டிய அளவு விளக்க நூல்கள் முப்பாலுக்கு எழுந்தன என்று கூறமுடியாது. இந்நூல் அவ்வகையில் ஒருவகையாக நடைபோடும் நூல்.

எனது ஆசிரியப் பெருந்தகை டாக்டர் சி. இலக்குவனர் உளமுவந்த அணிந்துரை ஒன்றால் இந்நூலுக்குத் தனி அழகேற்றிச் சிறப்பித்துள்ளார்கள். அவர்கட்கென் உளமார்ந்த நன்றி கூறி மகிழ்கின்றேன்.

இந்நூலின் முதற்பதிப்பை நாகை இமயப் பதிப்பகத்தார் வெளியிட்டார்கள். இவ்விரண்டாம் பதிப்பு கலைக்குடில் வெளியீடாக வெளிவருகின்றது. இரு பதிப்பகத்தார்க்கும் என் உளமார்ந்த நன்றி கூறி மகிழ்கின்றேன்.

அன்பர்கள் இனி நூலுக்குள் புகலாம். நீங்கள் பெறும் உணர்ச்சிகளைச் சொல்லாது போனாலும் நூலைப் பற்றிய உங்கள் கருத்தை எனக்கறிவிப்பீர்கள் என்று எதிர்பார்த்திருப்பேன். வணக்கம்.

அன்பன்,
**கோவை. இளஞ்சேரன்.**

'' கலைக்குடில் ''
நாகப்பட்டினம்.

## படைப்பு

என்னைத் தமிழ்வழி
ஏணியில் ஏற்றினர்;
முன்னர்ப் பிறந்தவர்;
முன்னர் மறைந்தவர்;
அண்ணனர் கோவைசீர்க்
குஞ்சித பாதனர்க்
கிந்நூல் படைத்தென
தின்னுளந் தேறுமால்,

கோவை. இளஞ்சேரன்.

*டாக்டர் சி. இலக்குவனார்*

எம். ஏ., எம். ஓ. எல்., பிஎச். டி.,

வழங்கிய

## அணிந்துரை.

உலகத்தார் உள்ளிருள் நீக்கும் ஒளி விளக்காம் திருக்குறளுக்கு உரைகளும் விளக்கங்களும் பல்கிப் பெருகி ஊற்றுப் பெருக்கென வெளிவந்துகொண் டிருக்கின்றன. அவற்றுள் புதுமை பெற்றிலங்குவன சிலவே. அவற்றுள் ஒன்று 'வள்ளுவர் வாழ்த்து' எனும் இனிய நூலாகும்.

இதனை யாத்துள்ள புலவர் **கோவை. இளஞ்சேரன்** யாரும் மேற்கொள்ளாத முறையை மேற்கொண்டு மணமக்களுக்கு வள்ளுவர் பெருமானே வாழ்த்துவது போல் திருக்குறட்பாக்களைத் தெளிவுற விளக்கிச் செல்லும் நயம் மிக மிகப் பாராட்டற்குரியது.

''இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு'' என ஒல்காப் பெருமைத் தொல்காப்பியர் உரைத் தாங்கு இன்பத்தில் தொடங்குவது எவரும் விரும்பத் தக்கதாகும்.

புதுமையும் இனிமையும் பொருந்த, தேனுட் பொதிந்துள்ள மருந்து போல் திருக்குறளறத்தை விளக்கியுள்ள புலவர் இளஞ்சேரன் இன்றமிழ்த் திறனைப் போற்றுதும்.

தமிழுலகம் வள்ளுவர் வாழ்த்தினைப் பெற்றுப் பல்லாற்றானும் உயர்வு பெறுவதாக. 'கற்றபின் நிற்க அதற்குத் தக' எனும் வள்ளுவர் வாழ்த்தை மறவாது ஒழுகும் நாளே வையகம் இன்புற்று வாழும் நாள் ஆகும்.

'வள்ளுவர் வாழ்த்'தால் வையகம் வாழ்க! வண் தமிழ் செழிக்க! புலவர் இளஞ்சேரன் புகழ் ஓங்குக!

16-5-'67, மதுரை. *சி. இலக்குவன்.*

## வாழ்வாங்கு வாழ்க !

### கனிமலர்ப் பரிசு

'மணமக்காள் வாழ்க! வாழும் வகையறிந்து வாழ்க! * வையத்து வாழும் வகையறிந்த வாழ்வால், வானுறையும் தெய்வமாக மதிக்கப்படுவீர்'—என்று வாழ்த்தினர் திருவள்ளுவப் பெருந்தகையார்.

அவர் திருமுன்பு தலை வணங்கி நின்ற மணமக்கள் மனம் மகிழ்ந்தனர்; முகம் மலர்ந்தனர். நாணத்தால் அடிபட்டுக் கவிழ்ந்திருந்த அந்தக் குமரியின் தலை தானே நிமிர்ந்தது. கனிவான குரல்தந்த தமிழ்த்தந்தையின் முகங்கண்டு வணங்க அவளுக்கு அத்துணைப் பேரவா. நிமிர்ந்த நிமிர்ப்பில் மின்னலிட்டது அவளது பொன்னொளித் தாமரை முகம். அதை வாய்ப்பாகக் கொண்டு அவளது பேரழகை இமையெனும் கைகளால் அள்ளிச் சுவைத்தான் அந்தக் காளை. எங்கோ ஒதுங்கியிருந்த நாணம் அவள் தலையில் அடித்ததோ என்னவோ பொருளில்லாத புன்னகையோடு மீண்டும் தலைகுனிந்தாள். இதை இடைவேளையாகக் கொண்டு ஏட்டிலும்

* வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன், வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்.

எழுத்தாணியிலும் நாட்டத்தைச் செலுத்திய வள்ளுவச் செம்மல் அண்மையிலிருந்த இருக்கையைக் காட்டினர்; அவர்களும் தட்ட இயலாமல் அமர்ந்தனர்.

'மகளே, இந்தக் கனியை எம் பரிசாகக் கொள்க!' என்று ஓர் ஏட்டை நீட்டினர். வள்ளுவச் செம்மலார் கையால் பரிசு பெறும் துடிப்போடு குமரி ஏட்டைக் கையேந்திப் பெற்ருள். ஏடும், ஏட்டில் எழுத்தும் இருந்தனவன்றிக் கனியைக் கண்டாளில்லை. அவளது முகக் குறி வாயிலாக, அவளது சிந்தனையை உணர்ந்த வள்ளுவர் புன்முறுவல் பூத்தார்.

'மகளே, கனியெங்கே என்று பார்க்கிருயோ? அது விந்தையான கனி; விரைவில் கண்களுக்குப் புலப்படாது. அது விதையில்லாத வியப்பான கனி; அது போன்ற கனி உலகில் வேறெங்கும் கிடையாது. அதை நீ பெற வேண்டுமானல் பெறுவதற்கு முன் அதன் சுவையை உணரவேண்டும். நீ எந்த அளவுக்கு அந்தக் கனியின் சுவையை உணர்கிருயோ அந்த அளவுக்கு அஃதும் இனிக்கும். 'உணவே, நீ என்னை விரும்புகிருயா?' என்று கேட்டு நாம் உண்ணுவதில்லை. உண்ணப்படும் உணவுக்கு நம்மேல் விருப்பமிருக்க வேண்டுவதில்லை. ஆனல், இந்தக் கனி அத்தகைய உணவுப்பண்டமன்று. நீ எந்த அளவுக்கு அந்தக் கனியைச் சுவைக்க விரும்புகிருயோ அந்த அளவுக்கு அந்தக் கனியும் உன்னை விரும்பவேண்டும். அந்த அளவு அதன் விருப்பத்தைப் பெற்ருல்தான் நீ அந்தக் கனியைப் பெறுவாய். அதனல் இன்ப வாழ்வையே பெற்றவளாவாய். காண்க, மகளே அந்தக் கனியை!'—என்பன போன்ற செய்திகளையெல்லாம் உள்ளடக்கி மிளிர்ந்தது அவரது அந்தப் புன்முறுவல்.

குமரி கையிலேந்திய ஏட்டை நோக்கினள். 'கனி' எழுத்துருவத்தில் அந்த ஏட்டில் இருப்பதைக்கண்டாள். அவ்வேட்டிலுள்ள சொற்களையெல்லாம் படித்து நிமிர்ந்தாள்.

'ஆம், மகளே, * தம்மால் காதலிக்கப்படும் கணவர் அதே அளவு தம்மையும் காதலிக்க வேண்டும். அத்தகைய கணவரைப் பெற்றவரே இன்பச் சுவை என்னும் விதையில்லாத கனியைப் பெற்றவராவார். நீயும் பெறுக; பெற்றுத் தடையின்றி இன்புறுக!'—என்றார் வள்ளுவர்.

அண்டையிலிருந்த அத்தானை ஓரக்கண்ணால் பார்த்தாள் நங்கை. 'கண்டுகொண்டாயே கனியை' என்றது வள்ளுவரது பார்வை. மகிழ்ந்து பொங்கினான் அந்தக் காளை. அந்த மகிழ்ச்சியினிடையே தனக்குமொரு பரிசு கிடைக்கும் என்ற எதிர்நோக்கு மிருந்தது. இடை நேரமின்றி, 'மகனே, இந்த மலரை என் பரிசாகக் கொள்க' என்று ஏட்டை நீட்டினார் தந்தை வள்ளுவர். சற்று முன் மனைவிபெற்ற பட்டறிவு மணாளனுக்கு இல்லாமலோ போகும்? மலரொன்று இருக்கும்; எடுத்து மோக்கலாம் என்று எதிர்பார்க்கவில்லை அவன். ஆயினும், 'மலர்' என்ற சொல்லாவது இருக்கலாம் என்று ஏட்டைப் பார்த்தான்.

அதேபோதில் வள்ளுவத் தந்தையார் தன் சுட்டு விரலை அந்த ஏட்டின் ஒரு சொல்லிலே நீட்டிக் குறிப்புக் காட்டினார். அந்தக் குறிப்பிலே, 'மகனே, மலரைத் தானே பார்க்கிறாய். அந்த மலர் மிக மென்மையானது. அதைவிட மென்மையான மலரே இல்லை. கூர்ந்து

---

* தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர், பெற்றாரே
காமத்துக் காழில் கனி.

கருத்தைச் செலுத்திஞல் நீயே அந்த மலரை வாழ்த்து வாய். அதுதான்-அத்தகைய மலர்தான் உனக்குப் பரிசாகும்'-என்ற பொருளிருந்தது. அரைகுறைச் சிரிப்புடன் மகன் தந்தையை நோக்கினுன்.

'மலர்களிலே மென்மையானது அனிச்சம். மோப்பக் குழைவதன்ருே அனிச்சம்! அத்தகைய மலரையும் காம்பு களையாமல் உன் மனைவி தலையிலே சூடிஞல் நீ பொறுப் பாயோ ?—'அந்தோ *அனிச்ச மலரைக் காம்பு களையா மல் சூடுகின்ருளே! அது பெரும் சுமையாகுமே! அதனை அவளது நுண்ணிய இடை தாங்குமோ? தாங்க முடியாது முறியும் இடைக்கு மணப்பறை முழங்காதே: சாப்பறை யன்ருே கொட்டும்'—என்று கலங்கிப் போவாயே! அது மட்டுமோ, 'தூவி' என்பது அன்னத்தின் மெல்லிய பஞ்சிறகு. அதைவிட மெல்லியது அனிச்ச மலர். இத் தகைய **அனிச்சத்திலும், அன்னத்தின் தூவியிலும் மாதர் கால்வைக்க நேர்ந்தால் நெருஞ்சியின் முற்றிய முள்ளாக அன்ருே குத்தும். தலையோடும், இடை யோடும், காலோடும் இவ்வாறு பொருத்திப் பார்ப்பா யாஞல் அனிச்ச மலரைவிட மென்மையான மலர் இன்ன தென்பதை அறிந்திருப்பாயே. இவ்வாறு தலையாலும், இடையாலும், தாளாலும் மென்மையென்ருல் உள்ளத் தாலும், மொழியாலும், செயலாலும் அந்த மலரின் மென்மை எத்தகையதென்பதை யாம் கூறவேண்டுமோ? அந்த மென்மையான பரிசன்ருே யாம் உனக்கு அறி விக்கும் பரிசு. மகனே, அந்தப் பரிசாம் மலரைக்காண்க!

* அனிச்சபூக் கால்களையாள் பெய்தாள் நுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை.

** அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம்.

பறிக்காமல், மோவாமல் மணம் கொள்க '—என்றெல்லாம் வள்ளுவர் வாய்விட்டுக் கூறினரல்லர். அவர் இடையிடையே கொடுத்த இரண்டு மூன்று ஏடுகள் இவ்வாறெல்லாம் அறிவித்தன.

அந்தக்காளை தன் பக்கலில் இருந்த பத்தரைமாற்றுப் பொற்சிலையைப் பார்த்தான். கொத்துமல்லிகையாயிற்று அவன்முகம். கையில் இருந்த முதல் ஏட்டைப் பார்த்தான். அவனுக்காக வள்ளுவர் பேசினர் :

*"*அனிச்ச மலரே, நீ மலர்களிலெல்லாம் மெல்லிய தன்மையை உடையை! நீ வாழ்க! அதனுல் நீ அகந்தை கொள்ளாதே அனிச்சமே! ஏனெனில் நின்னைவிட மென்மையான தன்மையை உடையவள் என்னுல் காதலிக்கப் படுபவள்—என்று உணர்கின்ருயன்ரே மகனே; இந்த உணர்ச்சிதான் எம் பரிசாம் மலர்*" என்ருர்.

மணமகன் எழுந்து நின்று கைகுவித்து அந்த அன்புத் தந்தையை வணங்கினன்.

"ஆம் தந்தையே உணர்ந்தேன். பெண்கள் மெல்லியலார். அனிச்சப் பூவினும் மெல்லியலார். அத்தகைய மெல்லியலார் உள்ளம் எத்தகைய மென்மையது என்பதை உணர்ந்தேன். அதற்கேற்ப வன்மை நீக்கி மென்மையை மேற்கொள்வேன். மனைவியாகப் பெற்ற இவளை மலர்ப் பரிசாகக் கொள்வேன். நானும் அவளுக்குக் கனிப்பரிசாக விளங்குவேன். 'எங்கள் வாழ்வில் ஒருவருக்கொருவர் பரிசாய் நின்று உங்கள் வாழ்த்தால் மேம்பாட்டை அடைவோம்' என்று உறுதி கூறு

* நன்னீரை வாழி அனிச்சமே; நின்னினும்
மென்னீரள் யாம்வீழ் பவள்.

கின்றேன்"—என்று உள்ளந் திறந்து பேசினுன்; அமர்ந்தான்.

## வியப்பான கள்

'மகனே, உன் எண்ணம் சிறந்தது. *ஒன்றை அடைய எண்ணியவர் அவ்வெண்ணத்திலே அசையாத உறுதி பெறுவராயின் எண்ணிய இன்பங்களை எண்ணிய படியே பெறுவர்.

நீவிரும் பெறுக! உங்கள் வெற்றிக்குத் துணை நிற்பவை பல. அவற்றுள் நீவிர் முதற்கண் உணர வேண்டுவன சில. சிலவற்றுள்ளும் சிறந்து நிற்பது நீங்கள் ஒருவருக்கொருவர் கொள்ளும் ஒத்த அன்பு காதல். அதைத் தொடர்ந்து வருவது, அக்காதல் வழி வரும் அன்பு வேட்கை—காமம்.

காமம் என்பது விந்தையான ஒன்று. அதனை ஒரு புதுமையான மலர் என்னலாம்; வியப்பான கள் என்ன லாம்; வேடிக்கையான தீ என்னலாம். மலராக மணத் தைப் பரப்பும்; அஃதே கள்ளாகிக் களிப்பையும், மயக் கத்தையும் தரும்; அஃதே தீயாகவும் அனற்றும் விந்தையது.

அனிச்சமாகவும், அனிச்சத்தோடு பழகும் அருங் கனியாகவும் அமைந்த மணமக்களே! உங்களது **அன்பு வேட்கையாம் காமம் மலரைவிட மென்மையானது. அக்

* எண்ணிய எண்ணியாங் கெய்துப, எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்.

** மலரினும் மெல்லிது காமம்; சிலரதன்
செவ்வி தலைப்படு வார்.

காமத்தின் மென்மையையும் பக்குவத்தையும் உணர்ந்து அதற்கேற்ப ஒழுகி அதன் பயனைத் துய்ப்பவர் சிலரே யாவர். அம்மலரை நுகரும் சிலரில் நீங்களும் அமைய வேண்டுமன்றோ ?

மலர், தேனை வெளிப்படுத்துவதை அறிவீர்கள். அந்த இயற்கைத் தேனைச் செயற்கையில் சமைத்தெடுப்பதுவே கள்ளாகும். புதுமை மலராம் காமமும் ஒரு வகைக் கள்ளே யாகும். கள்ளை அளவோடு அருந்தினால் களிப்பைத்தரும். காமமும் ஒத்த அன்போடமைந்தால் களிப்பைத் தரும். இவ்வகையில் காமமும், கள்ளும் ஒத்தவையே. ஆனால், காமத்திற்குக் கள்ளிற்கில்லாத வியத்தகு திறன் உண்டு. கள்ளைக் கண்ணால் மட்டும் கண்டு களிப்படைய முடியாது. களிப்பைப் பெற அதை உண்ணவேண்டும். உண்டால்தான் அது களிப்பைத் தரும். காமமெனும் தேனோ, கண்ணால் காணப்படும் அளவிலேயே மகிழ்வைத் தருவது. கண்ணாலேயே அதைச் சுவைக்கலாம்.

ஆகவே, *சமைக்கப்பட்ட தேன் தன்னை உண்டவர்க்கே மகிழ்வைத் தருமேயன்றிக் காமத்தைப்போலத் தன்னைக் கண்டார்க்கு மகிழ்வைத்தரும் திறமுடையதன்று.

கண்ணளவில் மட்டுமன்று, கருத்தளவிலும் காமஞ் சிறந்தது. **முன்னர்ப் பெற்ற மகிழ்வை நினைத்துப்பார்த்

* உண்டார்கண் அல்ல தடுநறாக் காமம்போல்
கண்டார் மகிழ்செய்த லின்று.

** உள்ளினும் தீராப் பெருமகிழ் செய்தலால்
கள்ளினும் காமம் இனிது.

தாலும், அந்த நினைப்பிலேயே பெருமகிழ்வை உண்டாக்கு வது காமம், கள் இவ்வாறு உண்டாக்காது. ஆகையால் கள்ளைவிடக் காமம் இனியதுமாகும்,

காமம் கண்ணுக்கும் கருத்துக்கும் தனித்தனியே மட்டுமன்று; ஒரே நேரத்தில் இரண்டிற்கும் மகிழ்வைத் தருவதுமாகும். *காமம் நினைப்பிலேயே களிப்பூறச் செய்யும்; காண்பதிலேயே மகிழ்ச்சியை மலர்த்தும். இத் தன்மைகள் கள்ளுக்கில்லை; காமத்திற்குத்தானுண்டு.

கண்ணிற்குப் புலப்படும் கள் கண்ணிற்கு விருந்தை அளிக்காமையும், கண்ணிற்கு புலப்படாத உள்ளுணர்ச்சி யாம் காமம் கண்ணிற்குப் புதுமையை அளிப்பதும் வேடிக்கையன்றோ ? இந்த வியப்புக் கள்ளாம் காமம் உள்ளத்திற்கும், கண்ணிற்குமாக இருவகைப் பயனைத் தருவது. கள்ளோ, நாச்சுவையால் ஒரே பயனை மட்டும் தருவது. ஆகவே, காமம் பெற்றோர் கள்ளை நாட வேண்டியதுமில்லையன்றோ !

### வேடிக்கையான தீ

மலராக மணந்தும், தேனாகச் சுவைத்தும் மிளிரும் காமம் தீயாகவும் அனற்றும்தன்மையது. தீயோ நெருங் கினால் அனற்றும்; நீங்கினால் அனற்றாது. ஆனால் காமம் என்னும் தீயோ இதற்கு மாறானது. இத்தீயில் சிக்கி உன்னைப்போன்ற குமரனொருவன் புலம்பியது என் நினை வில் நிழலாடுகிறது.

குன்றன்ன தோளுடையான் ஒரு காளையும், மலரன்ன கண்ணுடையாள் ஒரு குமரியும் ஒரு பால்

* உள்ளக் களித்தலும், காண மகிழ்தலும்
கள்ளுக்கில்; காமத்திற் குண்டு.

அமர்ந்திருந்தனர். எது காரணமாகவோ அவன் அவளை விட்டு நகர்ந்தான். நகர்ந்த அளவில் அவன் தீயால் பற்றப்பட்டவன் போன்று துடித்துப் போனான். சட்டென்று மீண்டும் வந்து அவளை நெருங்கினான். நெருங்கியதும் மலர்ப் பொய்கையில் குளித்தவன் போன்று குளிர்ந்து மகிழ்ந்தான். அவனுக்கு இந்தச் சுவை வியப்பளித்தது; சிந்தித்தான் :

*‘நீங்கினால் சுட்டுத் தீய்க்கின்றது! நெருங்கினால் குளிர்வித்து இன்புறுத்துகின்றது! இத்தகைய விந்தைத் தீயை எங்கிருந்து பெற்றாள் இவள்?’ என்று புலம்பினான்.

‘ஆம், ஆம். **தீயைத் தொட்டால்தான் அது சுடும், அல்லாது விட்டால் சுடுமோ? நீவிர் பிரியுங்கால் ஏற்படும் காமத் தீயோ விட்டு நீங்கினால் சுடுகிறதே! சுடுவதில் பெயர்பெற்றிருக்கும் தீ இக்காமத்தின் முன் வலியற்றுப் போகிறதே!’ என்று அவன் புலம்பலுக்கு எதிர்ப்புலம்பல் வைத்தாள் அப்பூவை. மணமக்காள், நீங்களும் புலம்பாதீர்கள்!’-என்றுமுடித்தார் வள்ளுவர்.

இதுபோதில் அவன் தன்னருகில் பெண்ணுருவில் இருந்த தன் சொத்தைப் பார்த்தான்; சொக்கிப் போனான். அவள் ஆணுருவில் கிடைத்த புதையலைப் பார்த்தாள் ; பூரித்துப் போனாள்.

இதுகண்டுமகிழ்ந்த வள்ளுவர் நகைத்தார். அவரது நகைப்பிலே நாகரிகமான நகைச்சுவை மிளிர்ந்தது.

---

* நீங்கின் தெறூஉம் குறுகுங்கால் தண்ணென்னும்
தீயாண்டுப் பெற்றாள் இவள்!

** தொடிற்சுடின் அல்லது காமநோய் போல
விடிற்சுடல் ஆற்றுமோ தீ!

**காவடியும் காமமும்**

இன்பத் தென்றலிலே திளைத்துக் கொண்டிருந்த அவர்கள் தம் உணர்விற்கு வந்தனர். அவன் எதையோ அறிய அவாக் கொண்டான்; உடல், உள்ளம், உரை யாவற்றையும் செப்பஞ்செய்து கொண்டான்; பேசினான் :

'' தந்தையே காமத்தின் பக்குவம் அறிந்து இன்பம் காண்பவர்கள் சிலரே என்றீர்கள். வாழ்வின் குறிக்கோளும் பயனும் இன்பமேயாகும். வாழ்வில் இன்பமே பெறுதல் வேண்டும் என்பதில் எவரும் மாறிநிற்பதில்லை. வாழ்வில் புகும் எல்லாருமே இன்பம் பெறுதல் வேண்டுமென்றே விரும்புகின்றனர். இவ்வாறிருக்கச் சிலரே அவ்வின்பத்தைப் பெற்றுப் பலர் பெறாது போவதேன்? உங்கள் வாழ்த்தால் அச்சிலருள் புக இருக்கும் நாங்கள் அதற்குரிய விளக்கத்தைப் பெற விரும்புகின்றோம். எங்கள் வாழ்விற்கு உங்கள் பொன்னுரை நல்ல வழி காட்டியாக அமையும். அந்தப் பலர் செய்த தவறென்ன? சிலர் கைக்கொண்ட நெறி யாது ?''

'மகனே, வினவ வேண்டியதை வினவினாய். நீவிர் வாழ்க! குமரா, ஒரு பெரும் சுமைக்கட்டு இருப்பதாக வைத்துக்கொள். அதைத் துன்பமின்றிச் சுமந்து செல்ல என்ன செய்யலாம் ?'

'' தலையில் சுமக்கக் கூடிய எளிமை உடையதானால் தலையால் சுமக்கலாம். அல்லது தோளில் சுமக்கக்கூடிய தானால் பொதுமக்கள் பயன்படுத்தும் ''காவடி'' என்னும் '' கா '' வைப் பயன்படுத்தலாம். சுமை பகிரக்கூடியதாக இருப்பின் அதை இரு சமபங்காகப் பகிர்தல் வேண்டும் பின் காவின் இரு பக்கங்களிலும் அவற்றை இட்டு

காவின் சரியான நடுவிடத்தைத் தோளில் வைத்துச் சுமந்து செல்லலாம்; எளிதாக அமையும்.''

'ஏன் சுமையைச் சரிபங்காக்க வேண்டும்? கூடுதல், குறைதல் இருந்தாலென்ன?

"கூடுதல் குறையாக இருப்பின் ஒரு பக்கம் இழுக்கும்; ஒரு பக்கம் உயர்த்தும். இதனுல் சுமக்க இயலாத தோடு தோளில் அமைந்த காவும் சரியும்; சுமைப் பொருளும் வீணுகும்"

'சமபங்கு ஆக்கப்படுவதோடு காவையும் நடுவிடம் பார்த்து அமைக்க வேண்டுமோ?'

"நடுவிடம் பார்த்துத் தூக்காது போனுல் சுமையின் ஏற்றத் தாழ்வால் நடக்க இயலாது. முன்னும் பின்னுமாகக் காலில் மோதும். சுமப்பவர் கீழே விழ நேரிடும். சுமைப் பொருளும் வீணுகும்.

'சுமையைக் கூடுதல் குறையாகக் காவிலமைத்து அதற்கேற்பக் காவையும் நடுவிடம் அல்லாமல் அதிகச் சுமையுள்ள பக்கத்தைத் தோளின் பக்கத்திலும், சுமையில்லாப் பக்கத்தைத் தொலேவிலும் வைத்துத் தூக்கிச் செல்லலாமே!'

"செல்லலாம். இதனுல் எளிமை யிராது. கையின் வலிமையும் தேவைப்படும். பொருளும் சமமாய், இடமும் நடுவாய் அமையின் கையின் துணையில்லாமல்கூட தோள் எளிதில் தாங்கிச் செல்லும்."

'ஆகையால்...'

"ஆகையால், காவால் சுமக்குங்கால் இருபக்கத்தாலும், இருபக்கச் சுமையாலும் சமமான நிலே அமைவதே இனிது."

'ஏன்...காவின் ஒரு பக்கத்திலேயே சுமைக்கட்டை ஒன்ருகவே பொருத்தித் தூக்கினுல் என்ன ?'

மகன் நகைத்தான் : "அந்தோ ! மிகக் கொடுமையான முடிவைத் தரும்."

'ஆம், கொடுமைதான். இந்தச் சுமக்கும் இனிமையைப் பெற எத்துணை முன்னேற்பாடுகள் செய்யவேண்டி நேர்கின்றன. இன்ப வாழ்வு என்பதோ இதை நோக்க எத்துணைப் பெரிது ! அவ்வாழ்வில் அமையும் இன்பச் சுமையை ஏற்கவேண்டுமாயின் எத்துணை முன்னேற்பாடுகளைச் செய்யவேண்டும் மகனே!'

"ஆம் தந்தையே, சுமையைத் தூக்குவதென்பது பொழுது போக்கா என்ன? பொறுப்பு வேண்டும் ; ஊக்கம் வேண்டும் ; உரம் வேண்டும்."

'காமத்தால் அடையவேண்டிய பயனை எய்த இத்துணையும்வேண்டியனவே. எல்லாவற்றையும்விடக் காதலர் இருவரது அன்புவேட்கையும் ஒத்தனவாக அமைதல் வேண்டும். இருவரும் ஒருவரை ஒருவர் பக்குவமறிந்து சம நிலையில் விரும்ப வேண்டும். இவ்வாறு அன்றி * ஒருவர் பக்கத்தே மட்டும் காமம் இடம்பெறுமாயின் அக் காமம் துன்பத்தையே தரும். அவ்வாறின்றிக் காவைப் போல் இருவர் பக்கமும் சமமான வேட்கை இடம்பெறுமாயின் சுமை எளிதாவதுபோன்று காமமும் இனிதாகும்' என்ருர் அன்புத் தந்தை.

"தந்தையே ஒத்த அன்பும், ஏற்றத்தாழ்வில்லாத காமமுமே வாழ்வில் இன்பத்தை நிலைக்கச் செய்வனவாகும். காமம் என்பது ஒரு பொழுதுபோக்குக்குரிய

* ஒருதலையான் இன்னுது காமம்; காப்போல
இருதலை யானும் இனிது.

தன்று. ஆணும், பெண்ணும் பொழுதுபோக்குக் கருவிகளுமல்லர். காவிலே சுமையை அமைப்பது பொழுதுபோக்காகாது. அதுபோன்று காதல் வாழ்வில் ஒத்த பொறுப்புணர்ச்சி இன்றியமையாதது என்பதை உணர்ந்தேன்" என்ருன் மகன்.

'மகனே, இதனை உணராதவர் பலர். அதனுல்தான் காமத்தின் பக்குவ நிலையையும், மென்மையையும் உணர்ந்து பயன்துய்த்தவர் சிலராய் உளர். சிலரில் இருவராம் நீவிர் உடலும் உயிருமாய் நட்புக் கொண்டு வாழ்க!'

உடலாய்-உயிராய் வாழ்க!

'மகனே, உடல் என்பது இயக்கமில்லாத பிண்டம். உயிரோ இயங்கவைத்து இயங்கும் இயக்கம். உடல் என்று தனித்து இயங்குவது ஒன்று இல்லை. உயிரும் தனித்தியங்குவதில்லை. உடலோடு சேர்ந்தால்தான் உயிர் பயன் தரும். உயிரில்லாத உடலோ பிணம். உடலோடு பொருந்தாத உயிரோ வெற்ருவி. உயிரின் றேல் உடலில்லை; உடலின்றேல் உயிருக்குத் தன்மை யில்லை.

உடலில் ஒரு சிறு பகுதிக்குத் துன்பம் என்ருல் 'ஆ' என்று தன்னை அறியாமல் புலம்ப வைக்கிறது உயிர். உயிருக்கு ஊறு என்ருல் உடல் சோர்ந்து காய்ந்து அழி கிறது. உடல் வளத்தோடு வாழ்ந்துவரின் உயிரும் வளத்தோடு நீடிக்கும். உயிர் வளம்பெற்றது என்ருல் உடலும் பூரிக்கும். இன்பத்திலும் துன்பத்திலும் இன்றி யமையா நட்புக்கொள்கின்றன இரண்டும். இரண்டும் இரண்டல்ல ஒன்றே என்னும்படி இயைந்த நட்புக்

கொள்கின்றன. உடம்போடு உயிர் இயைந்து ஒளிர்கின்றது. உயிரிடையே உடம்பு மிளிர்கின்றது. இது போல் அவளோடு நீ ஒளிர வேண்டும்; உன்னிடையே அவள் மிளிரவேண்டும். நான் இடும் சொற்களைக் கவனிக்க: அவளோடு என்றேன்; உன் இடையே என்றேன். அவள் உடன் நிகழ்ச்சிக் குரியவள்; நீ அந்நிகழ்ச்சிக்கு அடிப்படையானவன். மகனே, * உடம்போடு உயிருக்கு இடையே பொருந்தியுள்ள இயற்கையான இயைபு எத்தகையதோ, அதுபோன்று இந்தமடந்தையோடு என்னிடையே இயைந்துள்ளது அன்புப் பிணைப்பு என்று நீ முதற்கண் உணர்க!' என்றார் வள்ளுவர்.

## வைகுந்தம் விரும்பாத கண்ணன்

கேட்ட மகனது முகக்குறி அவனது புத்துணர்வைக் காட்டியது. அவன் நேற்றுவரை குமரன். இன்று இல்லத்தலைவன் பதவிக்கு உயர்ந்திருக்கிறான். காளை என்று திரிந்தவன் கணவன் என்ற பட்டத்தைச் சூடியிருக்கிறான். அவன் கணவன் என்பதையும் கணவன் மனைவிக்கு எத்தகையவன் என்பதையும் நினைவுபடுத்த எண்ணினார் வள்ளுவர்.

'மகனே, உன்னைப்போன்ற மைந்தன் ஒருவனை இதுபோது உனது கருத்தில் நிறுத்தலாமென்று கருதுகிறேன். உன் மனையாளைப்போல அழகுள்ளவளை மணந்தான் அவன். அவளது தளிர்மேனியும், முத்துப் பல்லும், குவளைக் கண்ணும், அமிழ்தின் இயன்ற தோளும், மதிமுகமும், பனிமொழியும், மனைமாட்சியும்

* உடம்பொ டுயிரிடை என்னமற் றன்ன
மடந்தையொ டெம்மிடை நட்பு.

அவனை அவள் வயத்தனுக்கின. இவற்றையெல்லாம் விட அவளது நெற்றியழகு அவனைக் கவர்ந்தது. அவளது நெற்றி எழிலை விரும்பினன் என்பதோடு நெற்றி எழிலால் அடிபட்டுவீழ்ந்தான் என்றும்கூறலாம். அதனல் அவளைக் குறிப்பிடும் வாய்ப்பு ஏற்படும் போதெல்லாம் 'திருநுதல்' என்றே குறிப்பிடுவான்.

அவன் ஒருநாள் அமர்ந்து ஏதோ ஆழ்ந்து சிந்தித்துக் கொண்டிருந்தான். இடையிடையே முகம் மலர்ந்தான். கன்னங்கள் பூரித்தன. பூரிப்போடு 'பாவையே' என்றழைத்தான். அங்குப் பாவையுமில்லை, பாவையின் நிழலுமில்லை. மீண்டும், 'ஏ, பாவையே! கண்ணுள்ளேயிருக்கும் கருமணியின் பாவையே' என்ருன். அப்போதுதான் அவன் தன் கண்ணேடு பேசுகிருன் என்பது தெளிவாயிற்று. தொடர்ந்தான்: 'கருவிழியுள் அமைந்துள்ள என் கண் பாவையே, நீ போ! நீ இருக்கும் இடத்தை விட்டு நீங்கிப் போ! விரைவில் சென்றுவிடு! அந்த இடம் எனக்குத் தேவைப்படுகிறது. அவ்விடத்திலே உன்னிலும் சிறந்த ஒன்றை வைக்க வேண்டும். அவ்விடத்தைத் தவிர மற்றெந்த இடமும் நான் வைக்க விரும்பும் பொருளுக்குத் தகுதியுடையது ஆகாது. ஆகவே சென்றுவிடு! பாவையே, உன் இடத்திலும் ஒரு பாவையைத்தான் வைக்க இருக்கிறேன்; அந்தப்பாவை எத்துணை அழகினள் தெரியுமா? என்னல் அத்துணை அழகையும் விளக்க இயலாது. அவளது நெற்றியழகொன்றே எனது விருப்பத்தை யெல்லாம் கவர்ந்து என்னை வீழ்த்தியும் விட்டது என்ருல் நான் எவ்வாறு பிற அழகுகளை விளக்குவேன். அவளுக்குத்தான் நீ இருக்கும் இடம் தேவை. அந்த அழகிய நெற்றியை உடையவளை என்னிடையே பதித்துக் கொள்ள இடம் தேடினேன். நீ இருக்கும் இடந்தான் தகுதியென்று

கண்டேன். அதிலும் ஒருவகைப் பொருத்தம் உண்டு. நீ தானே அவளை எனக்குக் காட்டிக் கொடுத்தாய். காட்டிக் கொடுத்த நீ எனக்கு வேண்டாம் போ' என்று அறிவு கலங்கியவன் நிலையில் பேசினான்.

கண் பேசுவதை உணராது; சொன்னால்செல்லாது சென்றாலும் அந்தஇடத்தில் இவன் விரும்பும்பாவையை வைக்கமுடியாது. இவைகளையெல்லாம் அவன் அறியாத பேதையல்லன். ஆனாலும் தன் மனைவியைப் பற்றிக் கொண்டிருந்த மாறாத காதல் அவ்வாறு பேசச்செய்தது.

அதனால்தான், * 'எனது கண்ணிலமைந்த கருமணியுள் அமைந்த பாவையே! நீ அவ்விடத்தினின்றும் சென்றுவிடு; என் உள்ளங்கவர்ந்த அழகிய நெற்றியை உடைய என் மனைவியைத் தங்குவிக்க வேறு இடம் இல்லை' என்று கூறியவாறே மகிழ்ந்தான்.

இந்நேரத்தில் ஒரு வைணவத் துறவி அவ்வழியே வந்தார். அவனது பூரிப்பைக் கண்டு நகைத்தார். 'என்ன பிள்ளாய்! தனியே பேசி மகிழ்கிறாய்! முகம் பொன்மலர்க் காடு என்னுமாப்போலே திகழ்கிறதே! அத்துணை இனிமை கொள்ள என்ன கண்டாயப்பா!' என்றார்.

'இனியவை யாவற்றிலும் இனியதுஎதுவோ அதைவிட இனியது நான்கண்டது. நீவிர் மிக இனியதென்று எதை நினைக்கிறீர்? உள்ளந்திறந்து கூறும். பின்னர் நான் கண்ட இனியதை அறிவிக்கிறேன். சீர்தூக்கிப் பார்ப்போம்!' என்றான்.

* கருமணியிற் பாவாய், நீ போதாய்; யாம் வீழும்
திருநுதற் கில்லை யிடம்.

'அப்படியோ! எனக்கினியதா? தாமரை போன்ற கண்ணையுடைய எம்பிரான் திருமாலது வைகுந்த உலகத்தை அடைவதுதான் எனக்கினியது. அதனைவிட இனியது வேறு யாருக்குத்தான் ஏது?'—என்றார்.

அவன் நகைத்தான்: 'அது இனியதா? அத்துணை இனியதா? தாமரைக் கண்ணன் திருமாலது வைகுந்த உலகமோ இனிது? *தம்மால் விரும்பப்படும் அன்பு மனையாளது மெத்தென்ற தோள்களோடு துயில்வதை விட அந்தத் தாமரைக் கண்ணன் உலகு இனியதோ?' என்றான்.

முதியவர் என்ன சொல்வார்? தம் இளமைப் பருவத்தை எண்ணியவாறே பேசாது மீண்டார்.

'மகனே, மனையாளைக் கண்ணினும் சிறந்தவளாகக் கருதிய கணவனைக் கண்டாயா? சிறந்த உறுப்பான கண்ணினிடத்திலன்றோ அவளை வைத்துக் காணவும் பேசவும் விரும்பினான். அவளைக் கொண்டன்றோ உலகையே காணவும் விரும்பினான்! அதுமட்டுமோ அவளோடு உளமொத்துப் பிரியாது வாழ்வதே பேரின்பம் என்றும் கொண்டான். பருவத்திற்கேற்ற உணர்வு கொண்ட பக்குவமான கணவன் அவன். நீயும் அந்தக் கணவனாக வாழ்க! அந்தக் கண்ணைப் பெற்று வாழ்க! அந்தக் கண்ணனாக வாழ்க!'—என்றார் வள்ளுவர்.

அவளுக்குக் கண்ணனாக அமைந்தவனை நாமும் இனிக் கண்ணன் என்றே குறிப்போம்.

என்ன செய்வான் அந்தக் கண்ணன். தன் கண் பாவையை நோக்குவானா; பக்கத்திலுள்ள பொன்

* தாம்வீழ்வார் மென்றோள் துயிலின் இனிதுகொல்;
தாமரைக் கண்ணான் உலகு.

பாவையை நோக்குவாளு? பெண் பாவையைத்தான் பார்க்கத் துடித்தான்! பாவையைப் பார்க்குமுன் பாவையின் பண்பையன்றோ உணரவேண்டும், என்று அறிவுறுத்த எண்ணினாரோ என்னவோ, வள்ளுவர் தொடர்ந்தார்:

## மணற்கேணி மனையாள்

'கண்ணா, கண்ணாகவும், பேரின்பமாகவும் இருக்கும் மனையாளது உள்ளப் பண்பை உணர்வதே மணாளனுக்கு மாண்பு. மனையாளின் உள்ளப் பண்பை அறிவது என்பது ஒருவகைக் கல்வியாகும். கற்கக் கற்க அறிவைப் பெறலாம். அவ்வறிவால் வாழ்வில் மேம்பாட்டைப் பெறலாம். பழகப்பழக மனையாளது உள்ளப் பண்பை உணரலாம். அவ்வுணர்வால் வாழ்வின் புத்தின்பத்தைப் பெறலாம். ஒருவகையில், மனையாளது உள்ளத்தை ஒரு மணற்கேணி என்று சொல்லலாம். பொதுவாகக் கல்விக்கும் மணற் கேணிக்கும் பலவகையில் ஒத்த தன்மைகள் உண்டு. **மணலின்கண் ணமைந்த கேணியின் நீர் தோண்டிய அளவிற்கேற்ப ஊறிப் பெருகும். அதுபோலவே நூற்களைக் கற்கும் அளவிற்கேற்ப அறிவு வளரும். கண்ணா நீ நன்கு கற்றுத் தேர்ந்தவன். மணற்கேணியின் தன்மைகளாக நீ அறிந்தவை யாவை? சொல்க!'

"தந்தையே, மணற்கேணி பலநுண்ணிய நீரூற்றுக்களைக் கொண்டது. கைவைத்த அளவில் நீர் ஊறும்; தொடர்ந்து ஊறும். ஊறஊறத் தோண்டவேண்டும்

* தொட்டனைத் தூறும் மணற்கேணி; மாந்தர்க்குக் கற்றனைத் தூறும் அறிவு,

என்ற அவாவும் எழும். தோண்டத் தோண்ட ஆழம் ஏற்படும். ஆழம் செல்லச் செல்ல ஊற்றுப் பெருக்கு மிகும். ஊறுகின்ற நீர்க்கும் ஒரு புதுமை உண்டு. ஆனல் மேலும் ஊறும் நீரை நோக்க அப்புதுமை மறைந்து அந்நீர் பழையதாகிவிடும்.''

'இது போன்ற கல்வியறிவு எத்தகையது என்பதையும் உணர்ந்திருப்பாயே கண்ணு!'

''தந்தையே, கல்விக்கு நேர் இயைபான மணற் கேணியைத் தாங்கள் உவமை கூறிய பின்னர் மிகத் தெளிவாக உணர்ந்தேன். கல்வியென்பதும் தோண்டுதல் போன்று அறிவைக் கல்லுவதுதானே. அக்கல்வியும் பல நுணுக்கக் கருத்துக்களைக் கொண்டது. கற்கத் தொடங்கிய அளவில் கருத்து ஊறும்; கருத்தும்வளரும். வளரவளரக் கற்க வேண்டும் என்ற விருப்பம் எழும். கற்கக் கற்க ஆழ்ந்த அறிவு மிளிரும். ஆழ்ந்து செல்லச் செல்ல அறிவுப் பெருக்கம் ஏற்படும். ஏற்படும் அறிவுக்கும் ஒருபுதுமை உண்டு. ஆனல் கிடைக்கும் அறிவை நோக்கக்கிடைத்த அறிவு பழையது; கிடைக்க வேண்டிய அறிவு புதியது''

'கண்ணு, இந்தக் கல்வியறிவிலும் ஒரு வியப்பான உண்மை புலப்படும். ஒன்றைக் கற்றபின்னர்தான் அதன் கருத்தை அறியலாம். கற்பதற்கு முன்னர் அக் கருத்துப் பற்றிய அறியாமைதான் உண்டு. கருத்தை அறிந்த பின்னரோ—'அந்தோ அவ்வறிவைப் பெருத பேதையாக இருந்தோமே'—என்ற எண்ணம் எழும். கற்றுக் கற்று அறிய அறியத்தான் அதுவரை கொண்டிருந்த அறியாமை தென்படும்; நீங்கும்.

மனையாளின் உள்ளத்தை உணர்வதும் இவ்வகைக் கல்வியேயாகும். அவளோடு பழகினல்தான் அவளோடு

பிறந்த பண்பு புலப்படும். பழகப் பழகப் புதுமையான பண்புகளை அறியலாம்; அவளது உள்ளத்தை உணரலாம்; இன்பத்தையும் பெறலாம். அறியப்பட்ட பண்பும், உணரப்பட்ட உள்ளமும், பெற்ற இன்பமும் பெற இருப்பவைகளை நோக்கப் பழையவை. பழகும்வரை அவற்றை அறியவோ, உணரவோ, பெறவோ இயலாது. பழகிய பின்னரோ—'அந்தோ இவளதுபண்புகளையும், உள்ளத்தையும். இவளால் பெறும் இன்பத்தையும் இதுநாள் வரை பெருது போனேமே என்ற இல்லாமை புலப்படும். அதனல் அன்பு வேட்கையாம் காமம் சிறக்கும்.

ஆகையால் கண்ணு, *நூற்களைக் கற்றுக் கற்று, நுண்மையாகச் சிந்தித்துச் சிந்தித்து, உண்மைகளை அறிய அறியத் தம்அறியாமையைக் கண்டுகொள்வது போன்றதே மனையாள்பால் பயிலப்பயிலப் பண்புகளை அறிவதும், பழகப்பழக உள்ளத்தை உணர்வதும், கூடக் கூடக் களிப்பினைப் பெறுவதுமாகிய காமம். இவ்வகையில் மனையாளாம் சேயிழை இன்பத் தொடர்பால் கல்வி போன்றும் அத்தொடர்பாற் மணற்கேணி போன்றும் அமைபவளாவாள். இத்தகைய பெருந்தகவான எண்ணம் உன்னிடையே நிலவல் வேண்டும். அப்பயிற்சி மிகல் வேண்டும். அப்பயிற்சிதான் உன்னை அந்தச் சிலரில் அமர்த்தும்'—என்னும் அறிவுரையோடு ஒரு புகழ் முடியையும் கண்ணனின் மனையாளுக்குச் சூட்டினர், வள்ளுவப் பேரறிஞர்.

அந்தப் புகழ் முடியைத்தாங்காத அவளது மென்மைத் தலை தாழ்ந்தது. முடிதாங்கிய அத்தலையையும்

* அறிதோ றறியாமை கண்டற்றல், காமம்
செறிதோறும் சேயிழை மாட்டு.

தாங்கவியலாது அவளது எழிற்கழுத்தும் தளர்ந்தது. புகழ்ச்சியை ஏற்கத் தொடங்கிய உடனே நாணம் முனைந்தெழுந்து ஆட்சி செய்தல் நற்குடிப் பெண்களது இயல்பன்றோ? தளர்ந்த கழுத்தையும் தாழ்ந்த தலையையும் நிமிர்த்துத் தூக்க, 'மகளே, ஒரு மனையாளை உனக்கும் அறிமுகப்படுத்தாமலோ விடுவேன்'—என்றவள்ளுவரது குரலோசையால்தான் முடிந்தது. நிமிர்ந்தாள் மங்கை; அமர்ந்து நோக்கினாள். கனிந்து பேசினார் தந்தை:

## சுடுசோறுண்ணாத சேயிழை

'மகளே, மலரன்ன கண்ணாளொருத்திக்குக் கண்ணன்ன கேள்வன் ஒருவன் அமைந்தான். இருவரும் ஒன்றிய காதலொடு மகிழ்ந்து வாழ்ந்தனர். ஒருநாள் காலை அவன் பணி ஒன்று கருதிப் புறத்தே சென்றான். அவன் பிரிவு அவளுக்குத் தாங்க இயலாததாயிருந்தும் அவனது கடமை தன்னால் தடைப்படுதல் கூடாதென அமைந்திருந்தாள். அவனும் உடலால் பிரிந்தானேயன்றி உள்ளத்தாலும், காட்சியாலும் அவளைவிட்டு நீங்கினானல்லன். அவன் புறத்தே செல்லும்போது செய்துகொண்ட ஒப்பனை செறிந்த அழகு அவளது கண்ணை விட்டு அகலவில்லை. கண்ணில் நின்றதோடு கண்வழியே சென்று உள்ளத்திலும் உறைந்தது. ஆகவே, கண்ணுள்ளே கலந்து நின்றான்; நெஞ்சத்துள்ளே நிறைந்திருந்தான். எவ்வாறு அவளுக்குப் பிரிவு தென்படும்.

அவன் காலையில் சென்றான். அந்நேரத்தில் அரும்பிப் பகலெல்லாம் முகையாகி மாலையில் மலருவதன்றோ காமம். அதை நோயாக்கிவிடாமலும், நோயாக்கிக்

கொள்ளாமலும், மாலையில் வருவதாகக் கூறிச்சென்ருன். அந்த நினைவு முடுக்கத்தில், இதோ வரப்போகிருர்; இப்போது வந்துவிடுவார் என்ற துடிப்போடு இருந்தாள். ஓடினுள்; நீராடினுள்; புதிய ஒப்பனைகள் செய்து கொண்டாள். கண்ணுக்கு அஞ்சனம் தீட்ட முனைந்தாள். அஞ்சனக் கோலை கையிலெடுத்தாள்; மையிலே தோய்த்தாள்; இமையண்டை கோலைக் கொண்டு சென்ருள்; கை அப்படியே நின்றது. இமைகள் குவிந்து ஒன்றினுல் தானே மையிடலாம். என்ன நினைத்தாளோ விழித்த விழி இமைக்காமல், உயர்த்திய கை தாழ்த்தாமல் சிலையாகிவிட்டாள்.

அந்த நிலையில் அடுக்களையிலிருந்து வந்த தோழி 'என்னேடி சமழ்ந்து விட்டாய்! ஏன் மையிட்டுக் கொள்ளவில்லையா?'—என்ருள்.

'இல்லை'

'ஏன்?'

'மை தீட்டமாட்டேன்'

'ஏனடி?'

'மறைந்து விடுவார்'

'மறைவாரா? எப்பொழுது வந்தார்?'

'எப்பொழுது போனுர்? அவர்தான் கண்ணுள்ளேயே நிற்கிருரே!'

'என்னேடி உளறுகிருய்?'

'உளறவில்லையடி நான்; உள்ளதைச் சொல்கிறேன். அவர் உருவந்தான் என் கண்ணுள்ளே

நிலைத்து விட்டதே! * என் அன்பே உருவான அவர் என் காட்சியினின்றும் நீங்காமல் என் கண்ணுள்ளே உள்ளார். கண்ணை மூடினால் கண்ணை மூடுகிற அந்த இமை நேரமும் மறைந்து விடுவாரன்றோ—அதை முன்கூட்டியே உணர்ந்து கொண்டேன்—அதனால் கண்ணுக்கு மைதீட்ட மாட்டேன்'—என்று அஞ்சனக் கோலையும் கை நழுவ விட்டாள்.

அந்தப் பண்புள்ள தோழி நெஞ்சத்துள்ளேயே நகைத்துக்கொண்டு 'ஆம், ஆம். எழுதாதே, எழுதினால் மறைந்துதான் விடுவார். அஃதோடு இமைக்கும்போது இமைகள் அவர் உடலில் தாக்குமல்லவா! அதனால்உடல் நொந்து போனாலும் போவார்'—என்று பொறுப்பான குரலை வரவழைத்துக் கொண்டு சொன்னாள்.

அவளோ அஞ்சனக்கோலைக் கையிலெத்துக் கொண்டே, 'இல்லையடி இல்லை, எழுதலாம். கண்ணுள்ளே உள்ள அவர் இமைப்பதால் போய்விட மாட்டார். அவரை உள்ளே வைத்துத்தானே இமையை மூடுவேன். கண்ணுள்ளேயே இமைப் பாதுகாவலுடன் இருப்பார்; போகமாட்டார். தவருக எண்ணிவிட்டேன்; எழுதலாம்.'

'சரி, எழுது. எனக்கென்ன எழுது. அந்த ஐயாவின் உடலெல்லாம் மை பட்டுக் கருப்பையா ஆகட்டும்' என்று நகைக்காமல் சொன்னாள் தோழி.

'போடி பைத்தியக்காரி, உனக்குத் தெரிந்தது அவ்வளவுதான். மைபடும் அளவு பருப்பொருளாக

* கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணும்
எழுதேம் கரப்பாக் கறிந்து.

அவர் என் கண்ணுள்ளே இல்லையடி. நுண்பொருளாக உள்ளவரடி. *என் அன்புருவானவர் அவர். ஆகையால் இமைப்பதால் கண்ணிடத்தினின்றும் போய்விட மாட்டார். இமைப்பதால் இமைபட்டுத் துன்புறவும் மாட்டார். அத் துணை நுண்ணியவர் அவர். உனக்கெப்படித் தெரியும்? தெரியாது போடி.'

'சரி எழுது; விரைவில் எழுது; உணவு வேளை யாயிற்று. எழுதிக் கொண்டு இருவருமாகவே வருக! ஆனல், நான் ஓர் உண்கலத்தில்தான் உணவு படைத் திருப்பேன்' என்று சொல்லிச் சென்ருள். சென்றவள் பக்குவமான சுவையோடும் பதமான சூட்டோடும் உணவு படைத்தாள். அவளும் வந்து அமர்ந்தாள்; உணவிலே கைவைத்தாள்; உணவை எடுத்தாள். கை தாங்கும் சூட்டோடு இருந்தது. வாயண்டைக் கொண்டு சென்ருள். திடீரென முகத்தில் ஒரு மாற்றம் ஏற்பட்டது. உணவு வாயிற் சேறவில்லை. கை சோர உண்கலத்தில் வீழ்ந்தது உணவு. ஏதோ பேரச்சம் கொண்டவள் போல் அகல விழித்தாள்.

அந்நிலைகண்ட தோழியும் அஞ்சிப் போனுள். 'ஏன் பதமான சூடாகத்தானே படைத்தேன்; அதையா தாங்க முடியவில்லை?'—என்று துடித்துக் கேட்டாள்.

'கைக்கும் வாய்க்கும் பக்குவமான சூடுதான், இருந் தாலும் அச்சமாக இருக்கிறது.

'எதற்கு?'

'நெஞ்சு தாங்கும் சூடன்று இச்சூடு. ஆகையால் சூடான இச் சோற்றை உண்ண அஞ்சினேன்'

* கண்ணுள்ளின் போகார்; இமைப்பின் பருவரார்;
நுண்ணியரெம் காத லவர்.

'சூட்டுக்கொரு சுவை உண்டே! சுவைக்காகவா அஞ்சுகிருய்?' என்ருள் தோழி.

'இல்லை, இல்லை. *என் அன்புருவானவர் என் நெஞ்சத்தை விட்டு நீங்காமல் நெஞ்சத்துள்ளே நிறைந்துள்ளார். இந்த வெம்மையான சோற்றை உண்டால் என் நெஞ்சுள்ளே இருக்கும் அவரைச் சுட்டுவிடுமென்று அஞ்சுகிறேன்' என்ருள் அந்த மலரன்ன கண்ணுள்.

தோழி நகைக்கவில்லை; மாருக உள்ளம் பூரித்தாள். அவன்மேல் அவளுக்குள்ள அன்புப் பிணைப்பைப் பாராட்டிக் கொண்டாள்.

'மகளே, மணுளனை நெஞ்சிற் பதித்தவளை நினைவிற்கொள்க! கண்ணுள்ளே வைத்ததன் கருத்தை அறிந்தாயா? கணவன் என்ருல் அவன் கண்ணன்ருே? அதனுல்தான் கண் அவனுக—கண் + அவன்—கணவனுகக் கொண்டாள். அவள் கண்ணை நீயும் பெறுக; பெற்றுக் கண்ணம்மாவாகுக!' என்று நிகழ்ச்சி பொதிந்த கருத்துரை வழங்கினுர் வள்ளுவர். அவளுக்குக் கண்ணம்மா என்பதை நாமும் காரணப் பெயராகக் கொள்ளுவோம்.

கேட்ட குமரியாம் கண்ணம்மா மையிடாமலே இருக்கவா விரும்புவாள்? அல்லது சுடு சோற்றைத் தின்னக் கூடாது என்று முடிவு கட்டுவாளா? அவ்வளவு கருத்துக் குருடியல்லள் இந்தப் பெண்ணம்மா.—ஒரு மனையாள் சுவைக்க வேண்டியதெல்லாம் மணுளனது அன்பையே; காணவேண்டிய தெல்லாம் கணவனது அழகையே. எந்தப் பிற காட்சியையும் அவனைக் கண்ணுகக் கொண்டு காண்பதுவே இன்பம். நெஞ்சத்

* நெஞ்சத்தார் காத லவராக, வெய்துண்டல்
அஞ்சுதும் வேபாக் கறிந்து.

தெல்லாம் அவனை நிறைக்க வேண்டும். அதுதான் உண்மையான அன்புப் பிணைப்பு என்பவைகளைச் சட்டென்று உணர்ந்து கொண்டவளாய், 'அவ்வாறே ஆனேன் தந்தையே'—என்று மெல்லிசை தந்தாள் அதற்கே அவள் முகம் பவளக் காடாய்ச் சிவந்தது.

கண்ணம்மா கொண்ட நாணத்தை மாற்றக் கண்ணன் விரும்பினான்: "தந்தையே, இவள் தங்கள் பால் செவி கொடுக்கும்போதே கொஞ்சம் அச்சமும் கொண்டனள் போலும்! தாங்கள் அறிமுகப்படுத்திய மனைவியிடையே ஏற்பட்ட பிரிவு நிகழ்ச்சி இவளைச் சிறிதளவு தைத்துவிட்டது போலும்"—என்றான்.

கண்ணம்மா பதில் தந்தாள்: "ஆம் உடலைவிட்டு உயிர் பிரியலாமோ?"

"பிரிந்தாலென்ன உடனே மீள்வதுதானே" என்றான் அவன்.

தொடர்ந்தாள்: "பிரிந்தவுயிர் மீண்டதாக உலகறிந்ததில்லையே"

தொடர்ந்தான்: "இது மீளும் உயிர்"

"மீளும்வரை உயிரோடிருக்கும் உடலன்று இது"

"கனவில் உயிர் சென்று மீண்டு வருவதும், உடல் அது வரை அமைதியுடனிருப்பதும் தினமும் நிகழ்வது தானே"

"ஆம்! உணர்வற்ற உடம்பாகத்தான் தூங்கும். துஞ்சினரும் செத்தாரின் வேறல்லர் அன்றோ"—என்று வென்றாள்.

இந்த இளவட்டங்களின் அன்பு உரையாடலைக் கேட்டு வள்ளுவரும் முகம் மலர்ந்தார்.

**தேய்ந்த விரல்**

'மக்காள், பிரிவு என்பது கொடுமையானதுதான். ஆனால் பிரிந்தவன் பிரியப்பட்டவளது நிலையை உணர்ந்தவனாகவேண்டும். குறித்த காலத்தில் மீளும் உறுதிப்பாட்டோடு பிரிய வேண்டும். இவ்வாருயின் பிரிவு கொடுமையானதன்று; இயல்பானது — இன்றியமையாதது மாகும்.

பிரிவு இருவரையும் வாட்டுவதானாலும் இல்லத்தே தனித்திருப்பவளுக்கே மிகுதியான துன்பம் தரும். பிரிந்தார் என்று சொல்வதற்கு முன்னரே அவளது உடலில் பசப்புப் பரவிவிடும் என்றால் அவள் எவ்வாறு அந்தப் பிரிவைத் தாங்குவாள்? அதிலும் மணாளன் மிகத் தொலைவில் சென்றுவிட்டால் இன்னும் எத்துணைத் துன்பம்?—சென்ற தூரம் தொலைவாயிற்றே; மீளத் தொடங்கினாலும் கடக்க நாளாகுமே; இடையே எதிர்பாராத இடையூறு நேருமோ. உரிய காலத்தே வருவாரோ—என்ற கவலைகள் வாட்டும். கவலையை அடைந்தோர்க்குப் பொழுதும் கழியாது. பொழுதே போகாது என்றால் நாள் எவ்வாறு நகரும்? *மிகத் தொலைவான இடத்தே சென்ற காதலர் மீளும் நாளை எண்ணி, எண்ணி ஏங்குகின்றவர்க்கு ஒருநாள் ஏழு நாள் என்ன, எண்ணிக்கையற்ற நாளாக அன்றோ தோன்றும்!

உரிய காலத்தில் வந்துவிடுவாரென்ற நம்பிக்கை ஒரு பக்கத்தே தாங்கிப் பிடிக்கும். வரமாட்டாரோ என்ற ஐயம் மறுபக்கம் தாழ்த்திப் பார்க்கும். குறித்த காலத்துக்கு முன்னரே வந்தாலும் வந்து விடுவார் என்ற வீண்

* ஒருநாள் எழுநாள்போல் செல்லும்; சேண் சென்றார்
வருநாள்வைத் தேங்கு பவர்க்கு.

அவா அவள் உடலை வாயிற்படிக்கே இழுத்து வரும். சென்ற வழிமேல் விழிவைத்துப் பார்க்கச்செய்யும். பார்த்துப் பார்த்துக் கண்கள் சோர்வுற்றுப் போகும். அதனால் நுணுக்கமான தொலைக்காட்சிகளைக் காண முடியாமல் கண் புகைப் பார்வையைப் பெறும். வருகையைக் காணாது போனால்—'எப்படி வருவார்? போய் எத்தனை நாட்களாயின?'—என்று நாளை எண்ணிப் பார்க்கச் சொல்லும். மனத்திற்குள்ளேயோ, வாய்விட்டோ எண்ணினால் உள்ளம் பெற்றுள்ள தடுமாற்றத்தால் எண்ணிக்கை விட்டுப் போகும். அதனால் வண்ணக் கட்டியை எடுத்துச் சுவரிலாவது கதவிலாவது ஒரு நாளைக்கு ஒரு கோடு என்று கோடிட்டு அக் கோடுகளை நாழிகைக்குப்பலமுறை எண்ணிப்பார்க்கச் செய்யும். அத்தோடு விரல்களை வரிசையாகக் கட்டை விரலால் ஒற்றி ஒற்றிஒன்று, இரண்டு, மூன்று, நான்கு; ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு; ஒன்று இரண்டு, மூன்று, நான்கு-என்று மீண்டும் மீண்டும் நாட்களை எண்ணிப் பார்க்கும் அவா எழும். இவ்வாறு சுவரிலும், விரல்களிலுமாக இமைக்கொருமுறை ஒற்றினால் அந்த விரல்கள் என்ன ஆகும்? *காதலர் மீள்வார் என்று எதிர்நோக்கும் பார்வையால் கண்களும் ஒளியற்றுப் பார்வை மங்கிப்போனவையாகும். பிரிந்து சென்ற நாட்களை ஒற்றி ஒற்றி எண்ணிக்கை இடுவதால விரல்களும் தேய்ந்தனவாகும். அந்தோ! மணாளனைப் பிரிந்த மனையாள் நிலை இரங்கத்தக்கதாகும்.

## உடைந்தபின் ஒட்டுறவு இல்லை

இந்த இரங்கத்தக்க நிலைகளை எல்லாம் பிரிபவன் நினைத்துப் பார்க்க வேண்டும். செல்லும் வினைமுடித்து

* வாளற்றுப் புற்கென்ற கண்ணும், அவர்சென்ற நாளொற்றித் தேய்ந்த விரல்.

மீளும் நாளைச் சரியாகக் கணக்கிட்டுக் குறிக்க வேண்டும். குறித்த நாள் தவருமல் மீள்வதற்குத் தக்கபடி வினை செய்தல் வேண்டும். அந்தக் காலம் தவறினல் என்ன நிகழும்? கண் ஒளி மங்கிய அவள்—விரல் தேய்ந்த அவள் தன் உள்ளத்தைமட்டும் எந்நிலையில் வைத்திருப்பாள்? அவள் உள்ளம் அவளைக்கேட்காமலே உடைந்து போகுமே. உடைந்த உள்ளம் உயிரையும் ஒழுகவிடுமே. *'உள்ளம் உடைந்து அவள் உயிரையும் இழந்துவிடுமிடத்து அதன் பின் பிரிந்த என்னை மீளப் பெறுவதனுல் அவளுக்குத்தான் என்ன பயன்? மீண்டுபோய் அவளை அடைவதால் எனக்குத்தான் என்ன பயன்? அதன் பின் உடலால் இருவரும் கூடுவதால் எவருக்குத்தான் என்ன பயன்?—என்பவைகளை எல்லாம் நீ நினைந்து நோக்க வேண்டும் கண்ணு.'

'கண்ணம்மா, பிரிவு இயல்பானது என்று நீயும் பொறுக்கவேண்டும். அதற்காக உள்ளம் உடைந்து உயிரிழந்து பயனற்று அழியக் கூடாது, பணிகருதிப் பிரிதல் உலக இயல்பு; இல்லறக் கடமையுமாகும். உலக இயல்பின் மாற்றங்களால், சென்றவருக்கு இடையூறு ஏற்படுவதுண்டு. அவ்விடையூறுகளால் சொன்ன உறுதிமொழியிலிருந்து மணளன் தவற நேர்வதுமுண்டு. ஆயினும் அஃது தவருகாது. அஃது ஒரு சருக்கல், அஃது ஏற்கத்தக்க ஒன்றுமாகும். ஏற்கத்தகாத தவற்றையும் மணளன் செய்ய நேரலாம். **என்னைக் கொண்டவர் எனது நலனைப் பாதுகாவாது, தன் விருப்பத்

* பெறினென்னும்; பெற்றக்கால் என்னும்; உறினென்னும்;
உள்ளம் உடைந்துக்கக் கால்.

** பேணது பெட்பவே செய்யினும், கொண்கனைக்
காணு தமையல கண்.

திற்கு உகந்தனவே செய்து தவறிழைப்பினும் அவரைக் காணுது என் கண்கள் அமைதியுறவில்லேயே ; அலேகின் றனவே—என்கின்ற பெண்ணே அன்புப்பிணேப்பிற்குரிய மனேயாளாவாள்.

எத்துணேப் பெருந்தவற்றை மணுளன் செய்தாலும் அவன் இல்லாத போதுதான் தவறுகளே எண்ணிக் குறைப்படவேண்டும். பிரிந்து சென்றவன் பரிந்து மீளுங் கால் அவனேக் கண்டவுடன் தவறுகண்டு குறைப்பட்ட உள்ளம் மாறிவிடவேண்டும். அஃதன்றிப் பணிமுடித்துப் பனிமொழி கேட்டுப் பூரிப்போம் என்று வருகின்ற மணுள னுக்கு வன்முகங் காட்டுதல் நன்ருகாது. எவ்வகைத் தவற்றை மணுளன் இழைத்திருப்பினும், *அவரைக் காணுதபோது தவறல்லா நல்லனவற்றைக் கண்டே னில்லே; அவரை என் முன்னே காணும் போதோ அத் தவறுகள் யாவற்றையும் அடியோடு கண்டேனில்லேயே— என்னும் பெருந்தன்மையான உள்ளம், பெண்மகளி டத்தே பிறக்க வேண்டும்.

மணுளன் ஓர் அமிழ்தம்

மனேயாளிடத்தே இந்த உள்ளம் நிலேப்பதற்கு மேலாக இந்த உள்ளத்தை உணரும் பண்பு மணுள னிடத்தில் நிலேக்க வேண்டும். பெண்மகளது பெருந் தன்மையை ஏற்கும் தகுதி படைத்தவனுக ஆண்மகன் ஆகவேண்டும். அப்பொழுதுதான் அவள் உள்ளம் உடையாது; அழியாது. அவள் உள்ளத்திற்கும் அதன் மூலம் அவளுக்கும் அமிழ்தமாகி வாழ்வளித்தவன்

* காணுங்கால் காணேன் தவருய; காணுக்கால் காணேன் தவறல் லவை.

ஆவான். ஒரு வகையில் நோக்கினால் மணாளன் மனைவிக்கு அமிழ்தமே ஆவான். 'கண்ணு, அமிழ்தத்தைப் பற்றி அறிந்திருப்பாயே !'

"ஆம் தந்தையே, உண்டாரை நெடுங்காலம் வாழ வைப்பது: பாற்கடலிலிருந்து தேவர்களா......"

'கண்ணு, அது நீ கதையிலே கேள்வியுற்ற அமிழ்தம். கண்ணால் காணப்படும் அமிழ்தத்தை நீ அறிந்ததில்லையா? வானத்து மழையில்லாமல் உலகு உண்டோ? உலகத்து உயிர்கள் உண்டோ? *வான்மழை இடையறாது பெய்கிறது. பெய்யவே உலகத்து உயிர்கள் தொடர்ந்து பல்கிப் பெருகி வாழ்கின்றன. அதனால், அந்த மழைதான் உலகத்து உயிர்கட்கு அமிழ்தம் என்று உணரத் தக்கதாகும். உலகத்து உயிர்கள் எல்லாம் அந்த வானத்தை நோக்கியல்லவா வாழ்பவை; மனையாளும் மணாளனது அன்பை நோக்கியே வாழ்பவள் அல்லளோ! விசும்பினின்று ஒரு துளி வீழாது போனால் பசும்புல்லும் தலைகாட்டி வாழ முடியாதே; அவனது அன்பு துளியளவு குறைந்தாலும் அவளது பெண்மை அழிந்து போகுமே, மக்கள் உயிர்க்கும் மழைதான் இன்றியமையாதது ; அவளுக்கும் அவன்தான் இன்றியமையாதவன். மக்களது உணவை உருவாக்குவதும், உணவாகவே உதவுவதும் மழையே; அவளது வாழ்வை உருவாக்குபவனும், வாழ்வாகவே அமைபவனும் அவனே. வானம் மழையை வழங்காமல் பொய்த்துப் போனால் உலகைச் சூழ்ந்து விரிந்து கிடக்கும் கடல் நீர், மழைபோற் பயன்படுமா ? மழைத்துளி பெறாத உயிர்களைப் பசியல்லவோ வாட்டும். அதுபோல் அவனது அன்பில்லாமல் எத்துணைச் சுற்ற

* வானின் றுலகம் வழங்கி வருதலான்
தானமிழ்தம் என்றுணரற் பாற்று.

மும் உறவினரும் உலகினரும் கடல்போல் அவளைச் சூழ்ந்திருந்தாலும் அவனைப்போல் நலந்தருவாரா? அவர்கள் இடையே இருப்பினும் தனிமை என்னும் பசியால் தாக்கப்பட்டன்றோ தவிப்பாள். மழை உரிய காலத்திற் பெய்யாமலும் அளவுக்கு மீறிப் பெய்தும் உயிர்களைக் கெடுப்பதும் உண்டு; கெட்டவர்க்கு உரிய காலத்தில் அளவோடு பெய்து துணை செய்து வாழ் விப்பதும் உண்டு. உடன் இருந்து அன்பு காட்டாமல் கெடுத்திடும் அவனே உரிய காலத்தில் அன்பு காட்டி உயிர்த்துணையாய் நிற்பான்.

இவ்வாறு அமிழ்தமாகின்ற மணாளன் பிரியுங்கால் மனையாள் தன்மேல் கொண்டுள்ள ஆராக் காதலை அறிய வேண்டும். அந்த அளவு ஆராக் காதலைத் தான் கொள்ளவும் வேண்டும். பிரிந்து சென்றாலும் பருவம் அறிந்து கூடி அளவறிந்து மகிழ்ச்சியூட்ட வேண்டும். வரவை விரும்பி, அந்த விருப்பப்பெருக்கு ஒன்றாலேயே வாழ்பவள் மனையாள். அவ்விருப்பத்திற்கேற்ப அன்புப் பெருக்கை நல்க வேண்டியவன் மணாளன். * *அவ்வாறு தன்மேல் ஆராக்காதல் கொண்டுள்ள மகளிர்க்கு அன்னாரது காதலர் செய்யும் அன்புப் பெருக்காகிய அருள், மழையை எதிர் நோக்கி வாழும் மக்களுயிர்க்கு உரிய காலத்தில் அளவோடு பெய்யும் மழையைப் போன்றதாகும்.*

உயிர்கட்கு அமிழ்தமாகிய மழைபோல் மனையாட்கு மணாளன் அமைவதை நோக்கி 'மணாளனே அமிழ்தம்' என்றால் உனக்கு 'ஆம்' என்று சொல்லத் தோன்றுகிற தன்றோ கண்ணே! கண்ணம்மாவிற்குக் கண்ணன் அமிழ் தம் என்றால் நீங்கள் இருவரும் மறுத்தாவிடுவீர்கள்,—

* வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால், வீழ்வார்க்கு வீழ்வார் அளிக்கும் அளி.

என்று கூறி நகைத்தார் வள்ளுவர். அமிழ்தத்தை உண்ணவா அயர்ந்து போவார்கள் அவர்கள்?

"ஆம் தந்தையே. இவர் எனக்கு வாழ்வளிக்கின்ற அமிழ்தம்" என்றாள் கண்ணம்மா.

"இவள் எனக்குச் சுவை அளிக்கின்ற அமிழ்தம்" என்று முத்திரை வைத்த கண்ணன் மேலும் தொடர்ந்தான்:

"தந்தையே, பிரிவில்லாத வாழ்வு நல்லதுதான். ஆனால், பிரிவு இன்றியமையாததாகிவிட்டது. ஆகையால், பிணக்கில்லாத வாழ்வையாவது அமைத்துக் கொள்ளலாம் என்பதைக் கண்ணம்மாதான் முடிவுகட்ட வேண்டும்" —என்றான்.

## கருக்காயை உண்பரோ?

'கண்ணா, நான்தான் முடிவுகட்ட வேண்டும். மகனே, பிரிவும், பிணக்கும் இல்லாத வாழ்வு வாழ்வன்று. பிரிந்திருக்கும்போது சென்று சேரவேண்டும் என்ற ஆர்வம் எழும். சேர்ந்தவுடன் பிரிவுத்துன்பம் அறவே மறக்கப்படும்; மறைந்துபோகும். பிரிந்திருந்தகாலத்துக் கழிந்திருந்த மகிழ்வை யெல்லாம் சேர்த்துச் சேர்ந்திருக்குங் காலத்தே துய்த்துவிட வேண்டும் என்ற பேரவா எழும். குறைகளை யெல்லாம் மறந்து எல்லையிலாக் களிப்பெய்துவர் மனையறத்தார். அப்போது எய்தும் எல்லையிலாக் களிப்பை மனையாள் உணரும் போது,— 'இத்துணைக் களிப்பையும் எய்தவிடாமல் பிரிந்து சில நாட்களை வீணே கழிக்கச் செய்தாரே. அந்த நாட்களில் என் இளமை அழகு அழியும்படி ஆக்கி

னாரே. என் கண் உழந்து உழந்து உள்நீர் அற்றுப் போயின; மேனிமேல் பசப்புப் பரவியது; மதியைப் பார்த்துப் புலம்ப வைத்தார்; தோளின் தொல்கவின் வாடிற்று; நெஞ்சம் கலங்கிற்றே; இவர்தான் அவ்வாறு செய்தவர். இவ்வாறெல்லாம் செய்தவர் இதோ என் கண் முன்னே நிற்கிறாரே'—என்றெல்லாம் எண்ணம் எழாமலா போகும்? 'இவருடனும் இத்துணை நேரம் குலவிப் பேசினோமே' என்ற சிறு பிணக்கு ஊடே எழுவது இயல்பன்றோ?

அவ்வாறு இடையே—ஊடே எழுவதுதான் ஊடல். இவ்வூடல் தோன்றிச் சிறிது நேரம் நிலைத்துப் பின் நீங்கிவிடுவது. அது மேலும் சிறிது நேரம் நீடித்தால் அது பெரும் பிணக்கு. அந்தப் பெரும் பிணக்கு மணாளனுக்குத் துன்பத்தைத் தரும். அதனால் அவன் அதனைத் துனி என்பான். இவையிரண்டும்—ஊடலும் துனியும், கூடிவாழ்வார்க்கு இன்றியமையாதன வாகும். யாண்டும் மகிழ்ச்சியே மலர்ந்து, களிப்பே கனிந்து நின்றால், அது கனிந்து அழிந்த பழத்தைச் சுவைப்பது போலாகும். உண்பதற்குக் கனிந்து அழிந்தபழமும் உகந்ததன்று; சாறு ஊறாத இளங்காயாம்பிஞ்சும் தகுந்ததன்று. *பெரும் பிணக்காம் துனிஇல்லாத காமம் கனிந்து அழிந்த பழம் போன்றதாகும். சிறு பிணக்காகிய ஊடல் இல்லாத காமம் முற்றாத இளங்காய் போன்றதாகும்.

கனிந்த பழமாம் அழுகலையும், இளங்காயாம் கருக்காயையும் உண்போருக்குத்தான் பிணக்கில்லாத வாழ்வு இனிக்கும். கனியையும், கருக்காயையும் நீக்கிப் பக்குவமான பழத்தை உண்போரே தகுதியறிந்தவர்.

* துனியும் புலவியும் இல்லாயின், காமம்
கனியும் கருக்காயும் அற்று.

பக்குவமான பழந்தானே என்று மேலும் மேலும் இடையருது உண்டு கொண்டேபோனுல் அவரது தகுதி நிலைத்திருக்குமோ? உணவில் காட்டும் பொறுப்பன்றே உடலைக் காக்கும்! உண்ண வேண்டும்; அளவறிந்து உண்ண வேண்டும். அளவறிந்து உணவைக் கொள் பவன்தான், தான் பெற்றஉடலை நன்னிலையில் வைக்கும் நிலையறிந்தவன். தேவைப்படும்போதுதான் உண்ண வேண்டும். அதிலும் நாவைக் கட்டுப்படுத்தி உண்ண வேண்டும். இவ்வாறு உண்பதுதான் இனிக்கும். அதன் பின்னரும் உண்ண வேண்டுமாயின் உண்ட உணவு செரிக்க வேண்டும். மீண்டும் உணவு இனிதாகல் வேண்டுமானுல் உண்ட உணவு செரித்தால்தானே முடியும்? ஆகவே **உணவை உண்ணுவதைவிட உண்ட உணவு செரித்து உளவு சுத்தாவதுதான் இனிது. அது போன்றே மனையாளோடு மணாளன் சேர்ந்து களிப்பதைவிட அக்களிப்பு சுவைப்படுமாறு ஊடல் இடையே ஏற்படுதல் தான் காமத்திற்கு இனிது.**

'கண்ணு, உணவுக்குச் செரித்தல் இன்றியமை யாதது போலக் காமத்திற்கும் ஊடல் இன்றியமை யாதது. பிரிவிற்கு அமைந்த இயல்பும், இன்றியமையா மையும் பிணக்குக்கும் பொருந்தும். ஆகையால் பிணக்குக் கொள்வோரைக் கண்டு தானும் பிணங்கிக் கொள்ளக் கூடாது.'

## உப்பும் ஊடலும்

'கண்ணம்மா! பிணக்குக்கு இன்றியமையாமையும், இயல்பும் பொருந்தியது போலவே வரையறையும்

* உணலினும் உண்ட தறலினது; காமம்
புணர்தலின் ஊடல் இனிது.

அமைய வேண்டும். எந்த அளவு மணாளனோடு சி_, பிணக்குக் கொள்ளவேண்டும்; எந்தத் தன்மை உடையவ ரிடம் கொள்ள வேண்டும் என்ற வரையறையும் உண்டு. பெண்கள் அவ்வரையறைகளைத் தம் வாழ்வின் ஓட்டத் தில் தாமே உணர வேண்டும்.

'கண்ணம்மா, நீயும் உணரும் திறன் படைத்தவள் உனக்கு உணவு சமைக்கும் திறம் உண்டன்றோ ?'

'' ஆம், ஓரளவு உண்டு தந்தையே !"

'சமையற் சுவைக்கு மிகமிக இன்றியமையாதது எது ?'

கண்ணம்மா சிறிது சிந்தித்து '' உப்பின் அளவு தந்தையே !''

'தகுதியாகக் கூறினாய் மகளே ! உப்பில்லாமல் உணவு சுவைப்பதில்லை ; உப்பு அளவில் குறைந்தாலும் மிகுந்தாலும் சுவை கெடும் ; அளவோடு அமைந்திட வேண்டும். அளவறிந்து உப்பிடும் பெண்ணே மனை மாட்சியின் ஒரு பகுதித் திறனைப் பெற்றுவிடுகிறாள் ! இந்த உப்பிடும் வரையறையைத்தான் ஊடலிலும் கொள்ள வேண்டும். அளவான ஊடல் அன்பு வாழ்க்கையை இன்பமுடையதாக்கும் ; சுவையுடைய தாக்கும். **உப்பைச் சிறிது மிகுதியாக இட்டால் உணவின் சுவை கெடும்; அவ்வாறே ஊடலைச் சற்று நீட்டித்தால் அன்பு வாழ்க்கையின் இன்பம் கெடும்.**

## நிழல்நீர் இனிது

உப்பின் துளியளவு மிகுதியும் உவர்ப்பன்றோ கண்ணம்மா ? ஊடலின் அளவும் அத்தகைய வரை

* உப்பமைந் தற்றால் புலவி; அதுசிறிது
மிக்கற்றால் நீள விடல்.

யறையை உடையது. ஊடலுக்கு ஏற்ற உவமையா யமைந்த உப்பு, நீரின் உறைவுதானே! ஆகையால் நீருக்குள்ள தன்மை உப்புக்குள் உறைந்து கிடக்கு மன்றோ! நீரிலிருந்துதானே உப்பு உருப் பெற்றது. எனவே, அந்நீரின் தன்மைகள் உப்பினை ஒத்த ஊடலுக்கும் பொருந்தும்.

நீரின் இயற்கை தண்மை யாகும். தண்ணிய நீரே நன்மை தருவது. நீரின் தண்மை செங்கதிரால் வெம்மை யாகுமானல் அந்தவெந்நீர் அத்துணை நன்மை உடையதன்று; இன்னமையையும் தரும். அதனல்தான் இயற்கையமைப்புக்கள் நீரின் தண்மையைக் காப்பாற் றும் வகையில் உள்ளன. கேணி, ஊருணி, குளம். ஆறு முதலியவற்றின் கரையிலே மரங்கள் தழைத்து வளர்ந்து அவற்றின் தண்மையைக் காக்கின்றன. எனவேதான், நீர் இயற்கையில் தண்மையுற்றுப் பருகிட நன்மையும், பயனும், வேட்கைத் தணிப்பும் தருகின்றது.

ஊடலை இவ்வகை நீரென்றல் பொருந்தும். ஊடல் அளவோடு அமைவதே நல்லதென்று கண்டோம். அது மேலும் இனியதாவது அதனை ஏற்கும் மணாளனது அன்பைப் பொறுத்ததாகும். மணாளன் நிறைந்த அன்பினனாக—மனையாளது பிணக்கிலும் ஒரு மகிழ்வைக் கொள்பவனாக—அப்பிணக்கும் அவள் தன்மேல் கொண் டிருக்கும் அன்பின் நிறைவை உள்ளடக்கியதே என்று உணர்பவனாக அமைய வேண்டும். அந்தகையோ னிடத்தே கொள்ளும் ஊடல்தான் இனிமை தரும். *நீரும் நிழலின்கண் அமைந்ததானல் இனியதாகும். அது போல் ஊடலும் நிறைந்த அன்புடையார் மாட்டுத்தான்

* நீரும் நிழல தினிதே; புலவியும்
வீழுநர் கண்ணே இனிது.

இனிமை பயப்பதாகும். நிறைந்த அன்பில்லாரிடத்துக் கொள்ளப்படும் ஊடல் அன்புப் பிணைப்பை அறுக்கவும் அறுக்கும்.

மேலும் நுணுக்கமாகச் சிந்தித்தால் நிழலது நீரெல்லாம் இனிமையைத் தருவதன்று என்பது புலப்படும். *நிழலின்கண் அமைந்த நீரும் தன்பாலமைந்த நச்சுத் தன்மையால் துன்பத்தைத் தருவதானால் கொடியதேயாகும். அதுபோல அன்புகொண்டு பழகும் உறவினரது இயற்குணம் துன்பத்தைத் தருவதானால் அவரது உறவும் தீமையானதாகும் அன்றோ! இந்தப்பொது விதியைக்கொண்டு நோக்கினால் நிழல் நீரின் தண்மையையும் சிந்தித்து ஏற்றற்குரியது என்பது விளங்கும். அதனால், இன்ப முதிர்வால் அன்பு குன்றாத் தோற்றமளிக்கும் மனையாளிடத்து இயல்பான தீய தன்மைகள் முளைத்து எழலாம் என்பதை ஆராய்ந்து காணல்வேண்டும். அதன் பின்னரே ஊடல் நன்மை பயக்குமா, தீமை பயக்குமா என்ற முடிவைக் காணல் வேண்டும்.

## வெள்ளத்தில் பாய்வரோ ?

இவற்றையெல்லாம் அறியாமல், இவற்றிற்கேற்ப ஒழுகாமல் ஊடல் நன்றே என்று நுனிப்புல் முடிவைக் கொள்ளுதல் தீது. ஆற்றில் நீர் நிறைந்து ஓடுவதைப் பார்த்து, ஓடுவது நீர்தானே; இதில் குதித்தால் அடிபடாது என்றுகருதிக் குதிப்பவருண்டோ? நீர்ப்பெருக்கு இழுத்துக்கொண்டு செல்லும் தன்மையது என்று உணர்வர். உணர்ந்ததும் அதில் பாய்ந்து அழிபவரில்லை!

* நிழல்நீரும் இன்னாத; இன்னா; தமர்நீரும்
இன்னாவாம் இன்னா செயின்.

அவ்வாறு அறிந்து வைத்தும் நினையாது குதிக்கும் இயல்புதான், மணாளன் மனமறியாது ஊடுவதும். நற் பண்பு நீர்ப்பெருக்கென ஓடும் உள்ளத்தனை – செய்கை யனை மணாளனே அதன் ஆழமும் சுழற்சியும் போன்ற குணத் திரிபுகளும் உடையவனாகிறான்! *இழுத்துச் செல்லும் வெள்ளப் பெருக்கு என்று அறிந்தும் அதில் பாய்பவர் நீராடும் மகிழ்வை எய்துவரோ? அஃதே போல இவருடன் இந்நிலையில் ஊடுவதால் உரிய பயனைப் பெறல் இயலாது என்பதை அறிந்தும் ஊடுவதால் பயன் என்ன? நீங்காத் துன்பமே யன்றோ விளையும்?

கண்ணம்மா, ஊடலைப்பற்றி அறியத் தொடங்கி, ஊடல் உப்புப் போன்றது என்று கண்டோம். அந்த ஊடல், நீரைப் போன்றது என்றும் கண்டோம். அதனைத் தொடர்ந்து ஊடலை ஏற்றுக் கொள்ளத்தக்க மணாளனை நீரோடு பொருத்திப் பார்த்தோம்.

நீரோ தான் சேரும் இடத்திற்கு ஏற்ற தன்மை களைப் பெறும். நீர் உப்போடு சேரின் உப்பின் தன்மை யைப் பெறும். உவர் மண்ணோடு சேர்ந்து அதிலிருந்து ஊறும்நீர் உவர்ப்பைத் தரும். செம்மண்ணோடு கலக்கும் நீர் செந்நிறத்தைப் பெறும். செம்புலத்தில் ஊறும் நீர் செஞ்சுவையைத் தரும். இவ்வாறு **நிலத்தின் இயல் பால் நீர் தன் நிறத்திலும் சுவையிலும் திரிந்து தான் சேர்ந்த நிலத்தின் தன்மையை உடையது ஆகும். அது போலவே மக்களுக்கு அமையும் அறிவுத் தன்மையும்

* உய்த்தல் அறிந்து புனல்பாய் பவரேபோல்
பொய்த்தல் அறிந்தென் புலந்து.

** நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும்; மாந்தர்க்
கினத்தியல்ப தாகும் அறிவு.

அவர்கள் சேர்ந்து பழகும் சேர்க்கையின் தன்மையைக் கொண்டே அமையும்.

## புலவிக்குத் தோற்ற புத்தேள் நாடு

நிலத்தியல்பால் நீர் அமைவது போல மனையாளது இயல்பால் மணாளனது இயல்பும் அமையக் காணலாம்; நல்ல நீர்மையை மனையாள் மணாளனுக்கு உண்டாக்கக் கூடும். அவ்வாறு, மணாளனை நன்னிலையில் அமைத்து அவன் உள்ளமறிந்து ஊடுவதே ஊடல்; அதிலேதான் இருவருக்கும் இன்பம் உண்டாகும். அவ்வின்பத்தைப் பெற மனைவி செம்மை நிலமாகவும், மணாளன் அதிற் சேரும் நீராகவும் அமைதல் வேண்டும். அதற்கு மணாளனை நிலத்தோடு நீர் இயைந்த தன்மையன் என்னலாம். அத்தகையவனிடத்தே ஊடுதல் ஈடில்லாத இன்பத்தைத் தருவதாகும். அவ்வூடலைச் செய்பவர், தாம் அவ்வூடலால் பெறும் இன்பத்தை அளவிட்டுக் கூற முடியாமல், *நிலத்தோடு நீர் கலப்பது போல் என் உள்ளத்தோடு உள்ளங் கலந்த காதலரிடத்து ஊடுவது போன்ற இன்பம், புதுப் புது இன்பங்களை விளைவிக்கும் புத்தேள் நாட்டிலும் கிடைக்குமோ — அங்கு உண்டோ — என்றன்றோ கூறுவர்.

தலைவி தரும் இன்பத்தினும் தாமரைக் கண்ணான் உலகு தரும் இன்பம் இனிதோ?—என்று கேட்ட மணாளனோடு போட்டியிடும் மனையாளாகவன்றோ ஆக்கிவிடும் இந்த ஊடல்.

* புலத்தலின் புத்தேள்நா டுண்டோ; நிலத்தொடு நீரியைந் தன்னா ரகத்து.

ஆகையால், கண்ணம்மா! அளவறிந்து ஊட வேண்டும். நிறைந்த அன்பின் நிலைமையறிந்து ஊட வேண்டும். அல்லது நிறைந்த அன்பு கொள்வதற்கான நிலைமையை அவரிடம் உண்டாக்கிக் கொண்டு ஊட வேண்டும். அதனால் இத்தரையிலேயே புத்தேள் நாட்டின்பத்தை அடைய வேண்டும். இத்தகைய வரையறையும், இன்றியமையா இயல்புகளும் கொண்ட ஊடலுக்கு இன்னும் சான்று தந்து விளக்கவோ வேண்டும்?'

''எனக்குச் சான்று போதும் தந்தையே! அதிகமான சான்றுகளைத் தாங்கள் அறிவித்ததால் எல்லாப் பொறுப்பும் எனக்கே எனறெண்ணி, 'இவர்' என்னைக் குறும்பாகப் பார்க்கிறார்''—என்றாள் கண்ணம்மா.

## வஞ்சிக் கொடியும் வள்ளிக் கொடியும்

கண்ணம்மா, பொல்லாதவனல்லன் கண்ணன். பொறுப்புணர்ச்சி இல்லாமை மனுளனது தன்மைக்கே பகை என்பதை உணர்ந்தவன். மகளே, ஒரு கொடி நீர் பெறுமல் காய்ந்து தளர்ந்து கிடப்பதை உன் கண்ணன் காண நேர்ந்தால் உள்ளம் கனிந்து உருகுவானன்றோ? அதற்கு உடனே நிழல் தந்து, நீர்ஊற்றி, கொழுகொம்பமைத்து உயிரூட்ட முயல்வானு; அஃதன்றி அக் கொடியை அடியோடு அறுத்து வீசி எறிவானு? வீசியெறியும் அத்தகு பொல்லாங்குள்ளவனல்லன் உன் கண்ணன். அது ஒரு கொலைத் தொழில் என்பதை உணர்ந்தவன். ஊடி நிற்கும் வஞ்சிக்கொடியாள், வாடி நிற்கும் வள்ளிக்கொடி போன்றவள் அல்லளோ? அவளும் அன்புக்காக ஏங்கிக் கிடப்பவள்; கொடியும் நீருக்காகத் தளர்ந்து கிடப்பது; அவளுக்கும் இன்மொழி

கூறி அன்பணைப்புத் தந்து அருள் செய்தன்றோ மகிழ்ச்சி யூட்ட வேண்டும். அவ்வாறன்றித் *தன்பால் ஊடல் கொண்டவரை உணராதிருக்குந் தன்மை, நீரில்லாமல் வாடிய கொடியை அடியோடு அரிந்து போடுவது போலா கும். அந்தக் கொலையைச் செய்யும் கொடியவனல்லன் உன் கண்ணன். ஊடலை உணர்பவன்' அதை நீக்கு பவன்.

கண்ணு, ஊடலை உணர்தல் என்றால் அந்த ஊடலை அது ஊடல் என்று அறிந்து கொள்வதன்று. அந்த ஊடல் எக்காரணத்தால் ஏற்பட்டது என்று அறிவது மட்டுமன்று. அவ்வூடல் மீண்டும் கூடலைப் பெறும் நோக்கத்தது என்பதை உள்ளத்தில் பதிக்க வேண்டும். அதற்கேற்ப அன்புப் பெருக்கை அளித்து அவளது உள்ளத்து ஆர்வத்தை நிறைவேற்ற வேண்டும். அது தான் ஊடல் உணர்த்தல் எனப்படும். அதற்குக் கடமைப்பட்டவன் மணாளன்.

மேலும் கூறினால், 'மனையாள் என்மாட்டு ஊடப் பெற்றேனே' என்று மணாளன் களிக்க வேண்டும். ஊட லுக்கு அத்தகைய சிறப்பும் உண்டு **மலர் போன்ற கண்ணையுடைய மனையாளது நெஞ்சத்தே மலரும் ஊடல் மிகச் சிறப்பு வாய்ந்தது. அச் சிறப்பு நல்ல பண்புள்ள சிறந்த மணாளனுக்கு ஒரு அணியாகும்—அழகாகும். கண்ணு, நீயும் அந்த அணியை அணிக! அணிந்து இன்ப நிறைவால் அழகு பெறுக!'—என்றார் வள்ளுவர்.

* ஊடி யவரை உணராமை. வாடிய
வள்ளி முதலரிந் தற்று.

** நலத்தகை நல்லவர்க் கேஎர், புலத்தகை
பூவன்ன கண்ணு ரகத்து.

கண்ணம்மா, கண்ணனுக்குக் குறுவிழிப் பார்வையோடு சிறுநகை நல்கினள்.

அது கண்ட கண்ணன், "தந்தையே, வெற்றி தன் பக்கம் தங்கிவிட்டதாக எண்ணி என் கண்ணம்மா தன் மகிழ்ச்சியை வாய்வழியே வழிய விடுகிருள். அந்த வெற்றியில் எனக்கும் பங்கு உண்டு என்பதை அவள் அறியவில்லை"—என்று கூறி அவள் நல்கியவைகளைத் திருப்பி ஏவினன்.

## தோற்றவர்க்கே வெற்றி

இவ்விருவர்க்கும் மேல்நிலை பெற்றவரான வள்ளுவர் அவர்களது நிலையைச் சமன் செய்ய எண்ணினர்: 'மக்காள், வெற்றியில் பங்குபெற நினைப்பதும், வெற்றியில் பங்கு தந்து உதவுவதும் மனையறத்திற்கு வேண்டற்பாலனவே. ஊடலும் வெற்றியைத் தரும் ஒரு சிறு போர் தானே! ஆனல் ஊடற்போர் ஒரு புதுமையான வெற்றியைத் தருவது. ஊடற் களத்தில் போரைத் தூண்டுபவன் மணாளன்; தொடுப்பவள் மனையாள்; முடிப்பவன் மணாளன். பிரிவு என்னும் பூசலால் அவன் தூண்டுவான்; பிணக்கு என்னும் படையால் அவள் தாக்குவாள்; அத்தாக்குதலை எதிர்க்காமல் ஏற்று மகிழ்வான் அவன். ஏற்று மகிழ்வதால் தாக்குதல் வலிமையற்றுப் போகும். அதனல் அவள் தோற்றுப்போவாள். ஊடல் தோற்ருல் கூடல் நேரும். தாக்கிப் பெற எதிர்பார்த்த இன்பம் கிட்டும். ஆகையால் தோற்றவள், பெற்ற பயனல் வெற்றி பெற்றவள் ஆவாள். அஃதேபோல் தாக்குதலாம் ஊடலைத் தாங்க முடியாமலும், தீர்க்க முடியாமலும் மணாளன் வருந்தினல் அவன் தோற்றவனவான். அதனலும் அவன் பெறுவது இன்பமாம். இவ்வகையிலும் வெற்றியின் பயனைத் துய்ப்பவனவான். ஆகையால்

* ஊடற் களத்திலே தோற்றவர்தான் வெற்றி பெற்றவ ராவார். அவ்வெற்றியின் உண்மையும், சுவையும் கூடிக் களிப்புறும் போது தான் காணப்படும்.

ஆகையால், ** காமத்திற்கு இன்பத் தூண்டு கோலாய் அமைவது ஊடல், ஒத்த அன்பினராய் ஊடல் நீங்கிக் கூடித் தழுவப் பெற்றால் அது அந்த ஊடலுக்கு இன்பமாய் அமையும். காமமும் ஊடலும் இவ்வாறு ஒன்றுக்கொன்று இன்பம் நல்கிக்கொள்ளும் புதுமைப் பேறுகள். அவற்றுக்குரிய மணமக்கள் வெற்றியில் பங்கு பெறுவதற்கும் உரியவர்கள்.

மக்களே, *** பேரின்பம் கருதி ஊடுதலும், பின்னர் வரையறைகளை அறிந்து அவ்வூடல் நீங்கப் பெறுதலும், அதன் பின்னர் கூடிக்குலவுதலுமாகிய இவைகளே அன்பு வேட்கையால் கூடிய காதலர்கள் பெற்ற பயனாகும்.

மணமக்காள், காமத்தைப்பற்றி நாம் கண்ட விளக் கங்களை எல்லாம் ஒன்று கூட்டி நேர்க்குவோம்: காமம் மலரினும் மெல்லியது. அதை மணமக்கள் இனியதாக்கி உயிரும், உடலுமாய் நட்புக்கொள்ள வேண்டும். அந் நட்பால் மனையாளைச் சிறந்த உறுப்பாம் கண்ணினும் சிறந்தவளாய்க் கருதவேண்டும். பழகப்பழகப் புதுப் புதுப் பண்புகளைக் காணவேண்டும். மணாளனைக்

* ஊடலில் தோற்றவர் வென்றார்; அதுமன்னும்
கூடலில் காணப் படும்.

** ஊடுதல் காமத்திற் கின்பம்; அதற்கின்பம்
கூடி முயங்கப் பெறின்.

*** ஊடல், உணர்தல், புணர்தல் இவைகாமம்
கூடியார் பெற்ற பயன்.

கண்ணிலும் நெஞ்சிலும் நிறுத்தி மனையாள் மகிழ வேண்டும். பிரிவு இன்றியமையாதது. ஆயினும் மனையாளது துன்பமறிந்து உரிய காலத்தே மீள வேண்டும். மீண்டவனிடம் குறை காணுதல் கூடாது. குறை முனைத்து எழுந்தால் ஊடல் இன்றியமையாதது. அதனையும் வரையறையோடு கொள்ள வேண்டும். ஊடலை மணாளன் ஏற்று அருள் செய்ய வேண்டும். உள்ளம் ஒன்றி, உடல் ஒன்றி, உயிர் ஒன்றி வாழ்தல் வேண்டும். இவ்வகையான வாழ்வியல் கருத்துக்களைப் பெற்றீர்கள்.

இவைகளையெல்லாம் உலகத்தார் யாவரும் உணர்ந்து வாழ்வை மேற்கொண்டார்கள் எனக் கூற இயலாது. அதனுல்தான் காமத்தின் செவ்வி தலைப் பட்டவர் சிலராயினர். நீங்கள் அச்சிலரில் இருவராக வாழத்தக்கவர்கள்; வாழ்க!'—என்றுர் வள்ளுவர்.

காதல் வாழ்க்கைக்கு அவர் அமைத்த நல்வழிகளே இவைகள். இக்கருத்துரைகளே இல்லற வாழ்விற்கும் வழிகாட்டிகளாய் விளங்குவன—இல்லறத்தை மண மலராக்கிக் கொள்ள வேண்டும்; அதனை ஒத்த உள்ளத்தினராக நடத்திச் செல்ல வேண்டும். இல்றச் சிறப்பிற்கு உடலும் உயிருமாய் ஒத்துழைக்க வேண்டும். ஒருவர் மற்றவருக்கு இன்றியமையாதவராய் வாழ வேண்டும். மேற்கொண்ட வினையை உரிய காலத்தில் முடிக்கும் வல்லுநராக வேண்டும். வாழ்வில் குறைகளைக் கண்டு அவற்றைப் பெரிதாக்குதல் கூடாது. மனத் தாங்கல்களை மனக்கசப்பிற்கும் மனமாற்றத்திற்கும் இழுத்துச்செல்லும் அளவு வளர்க்கக்கூடாது; அன்பால் மாற்ற வேண்டும்—எனும் உண்மைகளை வள்ளுவரின் கனிவுரைகளால் சிந்தனைத் தெளிவு பெற்ற கண்ணனும் கண்ணம்மாவும் உணர்ந்தனர்.

ஒத்த உணர்ச்சியினராய் இருவரும் மீண்டும் வள்ளுவப் பெருந்தகையைப் பணிந்தனர். அவரும் உளம் மகிழ்ந்து 'மணமக்காள், வாழ்க! 'வாழும் வகையறிந்து வாழ்க!' வையத்து வாழும் வகையறிந்த வாழ்வால் வானுறையும் தெய்வமாக மதிக்கப்படுக!' — என்று மீண்டும் வாழ்த்தினர்.

வாழ்த்தை ஏற்ற கண்ணம்மா 'வாழும் வகையறிந்து வாழ்க, வாழும் வகையறிந்து வாழ்க'—என்று இருமுறை வாய்க்குள் உச்சரித்துக் கொண்டாள். அத்தொடர் பொருள் பொதிந்த தொடராக அவளுக்கு மிளிர்ந்தது. இவ்வுச்சரிப்பாம் தேனோசையைக் கேட்ட கண்ணன்; "தந்தையே, வாழும் வகையறிந்து வாழ்க என்பதை ஏற்று மகிழ்ந்தோம். தாங்கள் இதுவரை விளக்கியவைகள் வாழும் வகைக்கு ஒரு பகுதி யென்று கருதுகின்றேன். மேலும் விரிவான விளக்கம் பெற அருள்க!" —என்றான்.

'ஆம், வாழும் வகையறிந்துதான் வாழ வேண்டும்; தெய்வமாகவே ஆக வேண்டுமன்றோ! இதுவரை ஏற்கப்பட்ட கருத்துக்கள் காதலரது உள்ளத்தைப் பண்படுத்துவன. மேலும், இல்லற வளத்திற்குரிய மொழியையும், செயலையும் பண்படுத்துவன உண்டு. அவை விரிவாக அறியத்தக்கன. இதுபோது அந்திக் காலமாயிற்று. நீவிர் இல்லம் சென்று ஒருநாள் வருக! வகைகளைப் பகுதி பகுதியாகக் காண்போம்' — என்று வாழ்த்திய வாறே உள்ளே சென்றார் வள்ளுவர்.

மணமக்கள் எழுந்து வணங்கி அவரது திருவுருவைக் கண்டு களித்தவர்களாய் – மலர்ச் சோலைகளாய் நகர்ந்தனர். அவர்களைப் பின் தொடர்ந்து தென்றல் ஓடிற்று. அது தங்களை ஊடறுத்துப் போக அவர்கள் இடந்தரவில்லை.

# மகனே கேள் !

## அவ்வளவுதான் அறம்

'வருக மக்காள் ; அமர்க!' என்ருர் வள்ளுவத் தந்தை.

கைகுவித்துத் தலைதாழ்த்தி வணங்கிய கண்ணனும் கண்ணம்மாவும் நிமிர்ந்தனர். மின்னலின் இழை ஓடும் அவர்களது இரு முகங்களும் இரு நிலவு அடுத்தடுத்துத் தோன்றின போலிருந்தன. வள்ளுவச் செம்மல் அவர்கள் முகத்தில் நேற்றில்லாத புத்தொளியைச் சுவைப்பது போலப் பார்த்தார். அவர்கள் உள்ளம் பெற்றிருக்கும் பூரிப்பின் மலர்ச்சியை அவர்களது முகங்களிலே கண்டார் போலும்!

'மக்காள், நேற்றுக் கேட்டு அறிந்தவைகளின் உண்மையை உங்களது பளிங்கு முகங்கள் எடுத்துக் காட்டுகின்றனவே'— என்ருர்.

கண்ணம்மா தலை குனிந்தாள். அவளது இதழ் ஓரத்தே முகை நின்றது ; அதை அவனது நகை வென்றது. அதற்கு மேல் அவர்களைத் தளர்த்த எண்ண வில்லை, பண்புத் தந்தை.

'மக்காள், வாழும் வகையறியும் நோக்கம் அன்ரே இன்று உங்களது வருகைக்குக் காரணம் ?'

'ஆம், தந்தையே! அறிவது மட்டுமன்று; அதன் வழி நடப்பதும் எங்களது அரும் நோக்கம்"

'பெருநோக்கோடுதான் உங்கள் வாழ்வுப் பயணத்தைத் தொடங்குகிறீர்கள்; நீவிர் வாழ்க! உங்களது வாழ்வுப் பயணத்திற்குரிய வழி எதுவென்று தெரியுமா? ஒரு ஆறுதான் வழி.'

"தந்தையே......"

'ஆம், மகனே, ஆற்றில்தான் நடக்க வேண்டும். ஆறு என்ருல் நீர் ஓடும் ஆறு அன்று. நீங்கள் கொள்ள வேண்டிய ஆற்றிற்குப் பெயர் அறத்து ஆறு – அறம் என்னும் வழி. ஆறு என்ருல் வழிதானே மகனே!'

"ஆம், தந்தையே"

'அறவழிதான் வாழ்க்கைக்கு அமைந்த திற வழி. வாழ்வு என்பது புகழையும், பல்வகைச் செல்வத்தையும் நாடித் தவழ்வது. அவற்றைச் சேர்க்கவல்லது அறம் ஒன்றே. அதனல் தான் அறத்தைவிடச் சிறந்த ஆக்கம் ஒன்றில்லை என்று நான் சொன்னதுண்டு. * அறத்தை விடச் சிறந்த வேறு ஒரு பெரும் செல்வம் இல்லை என்று உணரும்போது அந்த அறத்தை மறத்தலை விடக் கேடு வேறு ஒன்றில்லை என்பதையும் உணரவேண்டும்.

ஆகையால் மகனே, அவ்வறத்தை இயன்ற அளவு செய்ய வேண்டும்; தொடர்ந்து செய்ய வேண்டும்; வாய்க்கும் போதெல்லாம் செய்ய வேண்டும். நீங்கள் அவ்வறத்தை இல்லத்தில் இருந்து செய்ய முனைந்துள்ளவர்கள்.'

---

* அறத்தினூஉங் காக்கமும் இல்லை; அதனை
மறத்தலின் ஊங்கில்லை கேடு.

" தந்தையே, பிற இடத்தே இருந்தும் செய்வோர் உண்டோ ?"

' உண்டு, துறவு நிலையில் நின்று செய்வோர் உண்டு '—என்றார்.

என்ன எண்ணினானோ என்னவோ, கண்ணன் கண்ணம்மா பக்கம் நெருங்கி நகர்ந்தான். அவனுக்கு இல்லறப் பிடிப்பு அந்த அளவு ஊன்றிவிட்டது. துறவு என்ற சொல்லுக்கே இடந்தர அவன் மனம் ஒப்பவில்லை. இந்த நிலையைச் சமாளிப்பதற்கு அவள் ஒரு ஐய வினாவை எழுப்பினாள்.

" தந்தையே! எதனை அறமென்று சுட்டிச் சொல்லலாம்."

' இன்றியமையாத ஐயம் மகளே! அறம் என்று ஒன்று தனியாக இல்லை. நல்ல பயனைத்தரும் செயல்கள் எல்லாம் அறம் எனப்படும். நல்ல பயனைத் தர நல்ல செயல் நிகழவேண்டும்; நல்ல செயலுக்கு நல்ல எண்ணம் வேண்டும்; அதற்கு நல்ல உள்ளம் வேண்டும். நல்ல உள்ளம் என்றால் குற்றமற்ற உள்ளம் அன்றோ! *உள்ளத்தே குற்றமற்றவராக ஆதல் வேண்டும். அவ்வளவுதான் அறம்.'

" தந்தையே, பிற எல்லாம் " – என்றான் அவன்.

' பிற எல்லாம் வெற்று ஆரவாரத் தன்மையை உடையவை '—என்றார்.

அவன் : ' அதாவது வெறும் வெளிப்பகட்டு ; மேம்பட்ட நடிப்பு என்றான்.

---

* மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்;
ஆகுல நீர பிற.

அவளோ மேலும் நுணுக்கமான ஒரு ஐயத்தை எழுப்பினுள் : "தந்தையே, உள்ளத்துக் குற்றம் என்று எதைக் குறிப்பிட்டீர்கள் ?"

'தீய எண்ணங்கள் எல்லாம் மனக் குற்றங்கள் தான். வாழத் தொடங்குகின்ற அல்லது குறையோடு வாழ்கின்ற ஒருவன் மற்ரொரு பெருவாழ்வு வாழ்கின்றவனைக் காணும் போது பொருமை கொள்வது குற்றந் தானே! அப்பொருமை என்பது மன அழுக்கு. அந்த அழுக்கு உண்டானல் நிற்காது; ஆருய்ப் பெருகும். அதனல்தான் நம் முன்னேர் அதற்கு அழுக்காறு என்று ஒரு பெயரிட்டனர். அந்த ஆறு ஓடத் தொடங்கினல் 'ஐயோ, இவன் இப்படிப் பெருவாழ்வு வாழ்கின்ருனே! நமக்கு அந்தப் பெருவாழ்வு அப்படியே மாறக் கூடாதா!' —என்ற அவா மிதக்கும். பிறது பெருவாழ்வுக்குக் காரணமான செல்வங்களைத் தான் கொள்ள வேண்டும் என்று எண்ணும் அவா நல்லதா மகளே!'

"இல்லையே, குற்றந்தான் தந்தையே"

'அந்த அவா நிறைவேருது போனல் வாழ்பவனைக் காணும்போதெல்லாம் சினம் சுழிபோடும். சினம் நல்ல சொற்களையோ எழுப்பும்? கடுஞ் சொற்களாகிய துன்பந் தரும் சொற்களையன்ருே அலைபோல் எறியும்! ஒரு குற்றம் தொடர்பாக நின்று எத்தனை குற்றங்களை விளைவிக்கிறது பார்த்தீர்களா!

அவள் : "ஆம், தந்தையே பொருமை, பேரவா, சினம், துன்பந்தரும் இன்னச் சொல் ஆகிய குற்றங்கள் கூடாது தந்தையே!"

'ஆம், *பிறரது பெருவாழ்வைக் காணும்போது உண்டாகும் பொருமை, அந்தப் பொருமை காரணமாக எழுகின்ற அவா, அந்த அவாவால் உண்டாகும் சினம், அந்தச் சினம் வெளிப்படுத்தும் துன்பந்தரும் சொற்கள் ஆகிய நான்கையும் நீக்கி இயற்றப்படுவதே அறம் ஆகும்.

இவ்வறத்தால்தான் வாழ்வின்பத்தை எய்தலாம். இவ்வறத்தைத் துறவிகள் தனித்து நின்று ஆற்றுவர். அஃது துறவறம். நீங்கள் இவ்வறத்தை இல்லத்தே இருந்து துணைக்குத் துணையாய், தோளிணைக்கு இணையாய் இணைந்து நின்று ஆற்ற வேண்டியவர்கள். இஃது இல்லறம்.

இல்லறத்தே இடம் பெறுகின்ற நீங்கள் தனித்தனியாகவும், கூடி நின்றும் ஆற்றத்தக்க கடமைகள் பல. அவற்றிற்கெல்லாம் அடிப்படையானது மனத்துக்கண் மாசு இல்லாததாகிய இவ்வறமேயாகும். இந்த அடிப்படையில் நீங்கள் ஆற்ற வேண்டிய கடமைகளைத் தனித் தனியே உங்கள் இருவர்க்கும் அறிவிக்க எண்ணியுள்ளேன்'—என்ருர்.

''தந்தையே! எனக்கு முதல் வாய்ப்புக் கிடைக்க வேண்டும்'' என்ருன்.

''ஆம்; தந்தையே! கடமையினின்று அறிந்தும் அறியாமலும் விலகுவோர்க்குத்தான் முதல் வாய்ப்பைத் தரவேண்டும். ஆடவர் இனத்தைச்சேர்ந்த அவருக்கே முதலில் வாய்ப்பளித்து உணர்த்துங்கள்''—என்று ஒரு போடு போட்டாள் கண்ணம்மா.

---

* அழுக்கா றவாவெகுளி இன்னுச்சொல் நான்கும்
இழுக்கா இயன்ற தறம்.

தந்தையோ சிரித்துக்கொண்டார். நேற்று அவனை அடக்கி ஆண்ட நாணம் அவர்களது ஒருநாள் இணைப்பில் அவளுக்கு அடிமையாகிவிட்ட மாற்றத்தை எண்ணிச் சிரித்தது போல் இருந்தது, சிரிப்போடு தோன்றிய அவரது ஓரப்பார்வை.

**நீயே துணைவன் ; நீயே காவலன்**

'மகனே, நீ நேற்று முதல் இல்வாழ்வான் என்று சிறப்பிக்கப்படுபவன் ஆகியுள்ளாய். ஆகவே, உனக்குத்தான் முதல் வாய்ப்பு. கேட்க மகனே, கேட்க! இல்லறத்து ஆண் மகன் சிலருக்குத் துணைவன்; சிலருக்குக் காவலன். நீயும் அத்தகையவனாய் அமைதல் வேண்டும்.'

"தந்தையே, நான் எவர் எவருக்குத் துணை நிற்க வேண்டும்"

'உன் வாழ்வில் நீங்காத் தொடர்பு உடையராய் உன் இல்லத்தில் இயல்பாய் அமைந்தவர்களை எல்லாம் நீ சிந்தித்துச் சொல்ல இயலுமா?'

"இயலும் தந்தையே! என் வாழ்வில் இயல்பாய் அமைந்த முதல்வர் என் பெற்றோர். அடுத்து இயல்பாய் அமைந்த தொடர்பு உடையவள் என் மனைவியாம் இவள். இனி இயல்பாக அமைய உள்ளோர் என் மக்கள்"

'ஆம், இவர்களுக்கெல்லாம் நீ நீங்காத் துணைவனாய் நிலைத்த துணைவனாய் நிற்றல் வேண்டும். அவரவர்க்கு வேண்டிய கடமைகளைச் செய்யும் பொறுப்பை ஏற்க வேண்டும்.'

" தந்தையே, இவர்களுக்கெல்லாம் நான் நீங்காத் துணைவன் என்றால் பிற எவர்க்கு எவ்வகைத் துணைவனாய் ஆதல் வேண்டும்?"

' இவர்கள் எல்லாரும் உன் அகத்தார். உன் இல்லத்தே இயல்பாய் அமைந்தவர்கள். இனி, புறத்தாராய் இயல்பான தொடர்பு இன்றி ஒருவருமே இல்லையா என்ன? தமக்கென ஒன்றும் வேண்டாம் என்று துறந்து போனவர்கள் உண்டு. அவர்கள் தனித்திருந்து நூற்களை ஆய்ந்து, குற்றமற்றுச் சிந்தித்து அவ்வப்போது நல்ல அறிவுரைகளையும், வாழ்த்தையும் உங்களுக்கு வழங்கத் தகுதி பெற்றவர்கள். அவர்களுக்கு வேண்டுவன செய்து துணை நிற்க வேண்டுமன்றோ நீ! வேறுசிலர் துறவியாகவும் இயலாதவர்களாய், வாழ்வில் எதையும் துய்ப்பதற்கும் வகையற்றவர்களாய் வறியவராகி நிற்பர். அவர்களது பசிப்பிணியைப் போக்கி, வேண்டுவன தந்து நிற்க வேண்டுமன்றோ நீ! மேலும், ஒருதுணையும், எவ்வகை உறவும் இல்லாமல் இவ்வாறு துறவியாக இருந்தும், வறியவராக இருந்தும் இறப்போர் உண்டு. அவர்களை நல்லடக்கம் செய்பவர் யார்? உன்போன்று கடமை உணர்ச்சி உள்ளவரன்றோ! இவர்களுக்குத்தான் நீ அவ்வப்போது துணைவனாக அமைதல் வேண்டும்'

" நன்று தந்தையே! நான் காவலனாக அமைய வேண்டும் என்றீர்களே! எவர்க்குக் காவலனாக அமைதல் வேண்டும்?"

' ஆம், நீ சிலர்க்குக் காவலனாக அமைதல் வேண்டும். அவர்கள் பொதுவினர், உன் தமிழினத்து மக்கள் தென் புலத்தார் எனப்படுவர். நீ அவர்தம் ஆக்கத்திற்

குரிய ஊக்கம் காட்டவேண்டும். நீ கொள்ளும் தெய்வத்திற்குக் கடனாற்ற வேண்டும். உன் இல்லத்தை நாடி உன்னை முன்னர் அறிந்தோரும் அறியாதோருமாகப் புதியவராய்ப் பலர் வருவர். அந்த விருந்தினரை அன்போடு வரவேற்றுப் பேண வேண்டும். மற்றும் முன் கண்ட மூவர் அல்லாத உறவினர் பலருண்டு. அவரெல்லாம் ஒக்கல் எனப்படுவர். அவர்களுக்கு அவ்வப்போது உன் வளத்திற்கு ஏற்ப உதவி செய்து காக்க வேண்டும். இவர்களை எல்லாம் காக்கும் நீ மிக இன்றியமையாதவன். ஆகையால், உன் உடல் நலத்திற்கும், உள்ள நலத்திற்கும் நீயே காவலனாய் நின்று காத்துக் கொள்ளல் வேண்டும்.'

"ஆகவே, நான்..."

"ஆகவே, நீ–

*இல்லத்தே இணைந்து வாழ்பவன் எனப்படும் நீ இல்லத் தொடர்பின் இயல்பையுடைய பெற்றோர், மனைவி, மக்கள் ஆகிய மூவர்க்கும் நல்லவழியில் நீங்காமல் நிற்க வேண்டிய துணைவன் ஆவாய்.*

*** துறவிகளுக்கும், வறியவர்களுக்கும், எடுப்பார் இன்றி இறந்தவர்க்கும், இல்லத்தே இணைந்து வாழ்பவன் எனப்படும் நீதான் துணையாவாய்.*

---

* இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை.

** துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
இல்வாழ்வான் என்பான் துணை.

*தென்: நிலத்து மக்கள், தெய்வம், விருந்தினர், உறவினர், தான் என்னும் ஐந்து நெறிக்கண்ணும் அவ ரவரைப் போற்றிக் காத்தல் உனக்குச் சிறந்த கடமை யாகும்.

இவ்வாறு நீ முதல் மூவர்க்கு நீங்காத் துணைவனாய் அமைய வேண்டும். அடுத்த மூவர்க்கு வாய்ப்புடைய துணைவனாய் அமைய வேண்டும். உன்னொடு 'மிகுதி ஐவர்க்கும் சிறந்த காவலனாய் அமைய வேண்டும். இவ் வமைப்புக்களோடு இல்லறத்தின் இயல்பையும் அறிந்து இயங்க வேண்டும்.'

## இல்லற இயல்பு

"தந்தையே இல்லறத்தின் இயல்புகள் யாவை?"

'இல்வாழ்க்கை இடையறாமல் தொடர்ந்து வள முடன் அமைவதே இல்லறத்தின் இயல்பாகும். அதற் கொரு பண்பு உண்டு; பயனும் உண்டு. இவற்றை அறிவதே இல்லறத்தின் இயல்பை அறிவதாகும். மகனே, வாழ்வுக்கு அடிப்படையானவைகளை அறிவா யன்றோ?'

"ஓரளவு அறிவேன். உயிர் வாழ்விற்கு அடிப்படை யானது அறம். உடல் வாழ்விற்கு அடிப்படையானவை தேவையான அளவு உணவு, மானம் காக்கும் நல்ல உடை, தங்க உறையுள் ஆகிய மூன்றும் ஆகும்."

'இம் மூன்றையும் தருவது எது?'

"செல்வம் தந்தையே."

* தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்
ஐம்புலத்தா றோம்பல் தலை.

'அச் செல்வத்தை ஈட்ட வேண்டியவன் நீ. ஈட்டுவது என்பது மட்டுமன்று, முறையறிந்து ஈட்ட வேண்டும். செல்வம் வரும்வழி நேர்மையான வழியாக அமைய வேண்டும். பிறர்க்குத் துன்பம் விளையுமாறு ஈட்டப்படும் செல்வத்தோடு பழியும் சேர்ந்து வரும். பழியோடு செல்வத்தை ஈட்டுதல் கூடாது. பழிக்கு அஞ்சிச் செல்வத்தை ஈட்ட வேண்டும். ஈட்டிய செல்வத்தைச் செலவிடுவதிலும் முறை உண்டு. செல்வம் தான் மட்டும் துய்ப்பதற்கு ஈட்டப்படுவதன்று என்பதைக் குறிப்பாக உணர்வாய். உடல் வளத்திற்கும் அதனால் உயிர் வளத்திற்கும் உரிய உணவு, உடை, உறையுள் ஆகியவை முன்னர் அறிவிக்கப்பட்ட இயல்புடைய மூவர் முதலிய பதினொருவருக்கும் பகுக்கப்பட வேண்டியவை. பகுத்துக் கொடுக்கப்பட வேண்டிய இவற்றுள்ளும் உணவு முதலிடம் பெறுவது.

அஃதோடு, இல்லறத்திற்கு ஒரு பண்பு உண்டு. சிறப்பாக இல்லாளிடத்தும், பொதுவாக எவ்வுயிர்களிடத்தும் செலுத்தப்பட வேண்டிய அன்பேயாகும் அது. அஃதேபோல் இல்லறத்திற்குப் பயனும் உண்டு. அப் பயன் அற எண்ணத்தாலும், செயலாலும் உண்டாகும் இன்பமாகும்.

ஆகவே, *செல்வத்தை ஈட்டும்போது பழிக்கு அஞ்சி ஈட்ட வேண்டும். அச் செல்வத்தைப் பிற யாவர்க்கும் பகுத்துக் கொடுத்தல் வேண்டும். பகுத்துக் கொடுத்துப் பின்னர், தான் உண்ணுதலை ஒருவனது இல்வாழ்க்கை பெறுதல் வேண்டும். அவ் வாழ்க்கையோட்டம் இடையற்றுப் போதல் எக்காலத்திலும் இல்லை.

* பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின், வாழ்க்கை
வழியெஞ்சல் எஞ்ஞான்றும் இல்.

*இல்வாழ்க்கை அன்பு உடையதாக அமையின் அவ்வுடைமையே இல்லறப் பண்பு ஆகும். இல்வாழ்க்கை அறத்தின் வழி அமையின் அவ்வமைப்பே இல்லறப்பயனைத் தருவதாகும்.

இவைதான் இல்வாழ்வின் இயல்பான நடைமுறைகள் மகனே. இவற்றைக் கைக்கொண்டு ஒழுகினுல் பிறஅறத்தார் இல்லறத்தார்க்குப் பின் நிற்கக்கூடியவரே அன்றி முன் நிற்கக் கூடிய தகுதிபடைத்தோர் ஆகார்.

ஒப்பில்லாச் சிறப்பினது
தப்பில்லா இல்லறம்

'' தந்தையே, அவ்வாருயின் இல்லறத்தார் துறவறத்தாரை விட மேம்பட்டவரோ ?''

'ஆம் மகனே, ஐயமென்ன? துறவறத்தார் இல்லறத்தாரைப் போல அறப்பயனை எளிதில் அடைபவரல்லர். துறவறம் என்ருல் ஐம்புலன்களை அடக்கித் தவம்புரிதல் வேண்டும்; அவைகளை வெல்ல வேண்டும். உடலை வருத்தி முயலவேண்டும். ஆகவே, இல்லறத்தான் ஒரு வகையில் மட்டும் மேம்பட்டவனல்லனே! பெறும் பயனுல், கொள்ளும் முயற்சியால், ஆற்றும் வலிமையால்; அறத்தால் ஆகிய நால்வகையாலும் மேம்பட்டவன்.

**பழிக்கு அஞ்சுவதும், பகுத்துக் கொடுத்து உண்ணுவதும் ஆகிய அறவழியிலே இல்லறத்தை நடத்தினுல்

* அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது.

** அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின், புறத்தாற்றின்
போஒய்ப் பெறுவ தெவன் ?

மேம்பாடான பயன் கிடைக்கும். இல்லறத்திற்குப் புறம்பான வழியிலே போய்ப் பெறக்கூடியது ஏதும் இல்லை. ஆகவே, பெறுகின்ற பயனால், இல்லறம் துறவறத்தை விடச் சிறப்புடையதாகிறது.

*சிறப்போடு விளங்குவதற்குப் பலவகையிலும் முயற்சி செய்து நிற்பவர் பலவகையினராவர். அன்பும், பண்பும் ஆகிய தன்மைகள் கொண்டு இல்லற வாழ்வை மேற்கொள்பவன் அப்பலவகையினரைவிட மேம்பட்டு விளங்குவான். ஆகவே, கொள்ளும் முயற்சியால் சிறப்புடைய தாகிறது இல்லறம்.

**தன்னைச் சார்ந்தோரையும், சாராதோரையும் இல் வாழ்வான் நல்வழியில் செலுத்த வேண்டும். தானும் அறத்தினின்று தவறுதல் கூடாது. இத்தகைய இல்லற வாழ்க்கை மிக வலிமை உடையது. உடலை வருத்திப் பட்டினி கிடந்து தவம் செய்வாரை விட வலிமை உடைய தாகும். ஆகவே, ஆற்றும் வலிமையாலும் சிறப்புடைய தாகிறது இல்லறம்.

மகனே, இவற்றையெல்லாம் ஒன்று சேர்த்து நோக்கினால் ***அறம் என்று சிறப்பிக்கப்படுவது இல் வாழ்க்கை தான்—என்று உறுதியாகக் கூறலாம்.

"தந்தையே, அவ்வாறாயின் அந்தத் துறவறம்!"

* இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்
முயல்வாருள் எல்லாம் தலை.

** ஆற்றின் ஒழுக்கி, அறனிழுக்கா இல்வாழ்க்கை
நோற்பாரின் நோன்மை உடைத்து.

*** அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை ; அஃதும்
பிறன்பழிப்ப தில்லாயின் நன்று.

'அஃதும் சிறந்ததுதான். ஆனால், இல்லறத்திற்கு அடுத்தபடியாகத்தான் சிறந்தது. அதிலும் அது பிறரால் சிறிதளவேனும் பழிக்கப்படாது மேற்கொள்ளப்பட்டால் தான் சிறந்தது ஆகும்.'

கண்ணம்மா இடைமறித்தாள் : "தந்தாய், அவ் வாறாயின் துறவை மேற்கொண்டவர்களிலும் பழிக்கப் படும் செயல்களைச் செய்பவர் உண்டோ ?''

'உண்டு மகளே, உண்டு. உண்மையைச் சொன்னால் பெரும்பான்மையோராக உளர். துறவிபோல்ஒப்பனைகள் கொள்வர் ; நீராடுவர்; நோன்புகள் எடுப்பர் ; வெளிக் குத் தூயராய்க் காட்டுவர். *மனத்தில் மாசு நிறைந் திருக்கும். அதனை மறைக்க மாட்சிமை உடையவர்போல நீராடுவர். அவ்வாறு உள்ளத்தை மறைத்து ஒழுகும் துறவிகள் பலராவர். ஆகையால் மகனே, நீ விழிப்பாக வும் வாழ்தல்வேண்டும். அவர்களிலும் ஆய்ந்து, தேர்ந்து மதிக்கத் தக்கவரைப் பேணுக! எவ்வகையில் நோக்கி னும் நீ மேற்கொண்டுள்ள இல்லறம் மிகமிக மேம் பட்டது. மேலே பேசப்பட்ட வகையில் வாழ்வதைக் குறித்துத்தான் நான் முன்னர் 'வாழ்வாங்கு வாழ்க !' என்றேன்.'

"தந்தையே உணர்ந்தேன். இல்லறம் மிகச் சிறந் ததுதான். வாழ்வாங்கு வாழ்ந்தால் வான் உறையும் தெய்வமாக ஒளிரலாம் என்றீர்கள். பிற துறவறத் தாரோ வான் உறையும் தெய்வத்தைக் காண முயல்ப வர்கள். இல்லறத்தானாகிய நானோ தெய்வமாகவே மதிக்கப்படும் சிறப்புடையவன் ஆகின்றேன்!"

'ஆம், அவ்வாறே சிறப்புற்று வாழ்க!'—என்று முகம் மலர்ந்து வாழ்த்தினார் வள்ளுவத் தந்தையார்.

* மனத்தது மாசாக மாண்டார்நீ ராடி
மறைந்தொழுகு மாந்தர் பலர்.

# மகளே கேள்!

## பெண்மையே பெருந்தகவு

"மேன்மை தங்கிய பெண் இனத்துச் சார்பாளினி யாகிய திருமதி கண்ணம்மா அவர்களே, அடுத்து இப் போது உங்கட்கு வாய்ப்புக் கிடைக்க இருக்கிறது. தந்தையே, அப்படித்தானே ?' என்று கேட்டு, கடைக் கண்ணுல் கண்ணம்மாவைப் பார்த்து முடித்தான் கண்ணன்.

'ஆமாம் மகனே, வாய்ப்பும் அப்படித்தான்' மேன்மை தங்குவதிலும் அத்தகையதுதான் பெண் இனம். மேன்மை மட்டும் அன்று; மாட்சிமை உடை யதும் ஆகும் பெண் இனம். மேலும் பெண்ணேவிடப் பெருந்தகுதி வாய்ந்தவை உலகில் எவையும் இல்லை— என்று கூடக் கூறுவேன்.

கண்ணு! நீயே கூறு! *பெண், கற்பு என்று சிறப் பிக்கப்படும் உள்ள உறுதியாகிய பண்பு உண்டாகப் பெற்ருல், அப்பெண்ணேவிடப் பெருந்தகுதியுடையவை உலகில் பிற எவையேனும் உள்ளனவோ?—என்று வினவி ஞர் தந்தை.'

* பெண்ணிற் பெருந்தக்க யாவுள; கற்பென்னும்
திண்மையுண் டாகப் பெறின்?

இந்த வினுக் குறியோடு பெருமிதக் குறி ஒன்றும் இணைந்த கண்ணம்மாவின் பார்வை கண்ணன் மேல் பாய்ந்தது.

தந்தையின் வினுவோடு கண்ணம்மாவின் பார்வையையும் ஏற்றுக் கொண்ட கண்ணன் பேசினன் : "இல்லை தந்தையே, இல்லை. பெண் கற்பு என்கின்ற பண்பு வாய்க்கப்பெற்ருல் என்று நீங்கள் ஒரு துணைச் சட்டம் இட்டுக் கூறிய பிறகு நான் மாற்றம் சொல்ல என்ன இருக்கிறது?" என்று வள்ளுவர்க்குத் தலை தாழ்த்தினன். தலை தாழ்ந்தாலும் குறும்பான பார்வை கண்ணம்மா பக்கம் குத்திற்று.

கண்ணம்மா குறும்புக்குக் குறும்பு காட்டினள் : "உலகில் வேறு எது உளது—என்று தந்தை கேட்கவில்லை. 'உலகில் பிற எவையேனும் உள்ளனவோ'—என்ருர்கள். என்பதை நினைவுபடுத்துகிறேன். கற்புள்ள ஒருத்தியின் தகுதிக்கு உலகில் ஆயிரம் என்ன கோடியானலும் ஈடு ஆகா என்பதை அத்தொடர் விளக்குகிறது என்பதை நீங்கள் நினைவிற்குக்கொண்டுவந்தால் உங்கள் குறும்புப் பார்வையும் குறுவிழிக்குள் அடங்கும். அதற்காக நீங்கள் தலைதாழ்ந்திருக்க வேண்டியதில்லை. அத்தகைப் பெண் இனத்துச் சார்பாளினியாம் கண்ணம்மா உங்கட்குத் துணையாக வாய்த்திருக்கிருள்; நிமிருங்கள்"-என்ருள்.

'நன்று சொன்னய் மகளே! நீ துணை. பெண் இல்லறத்தானின் துணைதான். அதனுல்தான் இல்லறப் பெண்ணை யான் வாழ்க்கைத்துணை என்னும் சொல்லால் குறிப்பதுண்டு. இல்லறத்து ஆண் மகன் இல்லில் வாழ்பவன். அதனுல், அவனுக்கு இல்வாழ்வான் எனும் சொல் அமைந்தது. இல்லறத்துப் பெண்ணே அவனது

வாழ்விற்குத் துணை நிற்பவள் ; இல்லத்தை ஆள்பவள் ; குடும்பமாம் மனையை ஆள்பவள் ; மேலும் இல்லத்திற்கு உரியவள். இவற்றால்தான் அவளுக்கு வாழ்க்கைத் துணை, இல்லாள், மனையாள், இல்லவள் எனும்சொற்கள் பொருந்தின.

மனைமாட்சி

'மகளே, வாழ்க்கைக்கு எவ்வாறு துணை நிற்க வேண்டும் என்பதையும் நீ நினைவில் கொள்ள வேண்டிய நாள் இது. இல்லற வாழ்க்கைக்கு வேண்டிய பண்புகள் உண்டு. நடைமுறைத் தகுதிகளும் உண்டு. கற்பும், அன்பும், பொறுமையும், பண்புகள். இப் பண்புகள் மனை மாண்பு எனப்படும். அறுசுவை ஆக்கலும், இல்லத் தாரைக் காத்தலும் விருந்தைப் போற்றலும் நடை முறைத் தகுதிகள். இவை மனைத் தகுதிகள்.

இவ்வாறு * குடும்பத்திற்குத் தக்க மாண்பைப் பெற்றவள் ஆகவேண்டும். தன்னை மனையாளாகக் கொண்ட வனது செல்வ வளத்தை அறிய வேண்டும். அதற்குத் தகுதியான செயற்காரியாக வேண்டும். அத்தகையவள் வாழ்க்கைத்துணை எனப்படுவாள்.

மேலே கூறப்பட்ட மனைமாண்பையும், மனைத்தகுதி யையும் இணைத்து மனைமாட்சி என்ற சொல்லால் குறிக்க லாம். மனைமாட்சி எனில் மனைக்கு உரிய மாட்சியாகும்.

இந்த ** மனைக்கு உரிய மாட்சி இல்லத்தை ஆளும் பெண்ணிடம் இருக்கவேண்டும். இல்லாது போயின் அந்த

---

* மனைத்தக்க மாண்புடையள் ஆகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.

** மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின், வாழ்க்கை
எனைமாட்சித் தாயினும் இல்.

இல்லற வாழ்க்கை வேறு எவ்வகை மாட்சியைப் பெற்றிருந் தால்தான் என்ன ? பெரும் செல்வம், குடிப் பெருமை முதலிய எவ்வகை மாட்சியைப் பெற்றிருந்தாலும் அவற்றால் பயனில்லை.

மகளே ! நீயே சொல்க ! * இல்லத்திற்கு உரியவள் மாண்பு உடையவளானால் அவ்வாழ்க்கையில் இல்லாத இன்பம் என்ன உண்டு ?

'' எல்லா இன்பமும் உண்டு தந்தையே ''

' நன்று ; இல்லத்திற்கு உரியவள் மாட்சிமை அற்ற வள் ஆனால் அவ்வாழ்க்கையில் உள்ள மகிழ்ச்சி என்ன, மகளே ?'

'' ஒரு மகிழ்ச்சியும் இராது தந்தையே ''

## தெய்வம் தொழாத சிறப்பு

இதற்கு மேலும் பெண்ணுக்குப் பெருமை உண்டு. அது கருதித்தான் பெண்ணைவிடப் பெருந்தகுதி படைத் தன இல்லை என்றேன். பெண்ணுக்கு இத்துணைப் பெருமை அமைய அடிப்படையானது அவள் கைக் கொண்ட கற்பேயாகும். கற்பு எனப்படுவது உள்ளம் கலங்காத உறுதிப்பாடு ஆகும். உறுதி எப்பொழுதும் ஒரு முனை நோக்கியே நிற்பது. சிறிதளவு கூட வேற்று முனைக்கு அசைந்து கொடுப்பது அன்று. கற்பு என்னும் உறுதி தனது கணவனது அன்பையே குறியாகக் கொண்

* இல்லதென் இல்லவள் மாண்பானால் ; உள்ளதென்
இல்லவள் மாணக் கடை ?

டது. அவனையே தனது உடலாகக் கொள்வது ; உள்ளமாகக் கொள்வது ; உயிராகக் கொள்வது. மேலும் கூறினால் கணவனையே தெய்வமாகக் கொள்வதுதான் கற்பு. கற்புள்ள பெண்ணுக்கு வேறு தெய்வம் இல்லை. அவள் வேறு தெய்வத்தைத் தொழுவதுமில்லை. இது தமிழ்ப் பண்பு என்பதை அறிவாயே கண்ணம்மா ?

''ஆம், தந்தையே, என் தாய் வாயிலாக அறிந்துள்ளேன். பெண்கள் பருவம் அடைந்த பிறகு தம் பருவ காலத்தை அறிவிக்கும் பிறைத் திங்களைக் காண்பர் - தொழுவர். பிற எத்தெய்வத்தையும் உள்ளத்தால் எண்ணவும் மாட்டார். மணாளனை அடைந்த பிறகோ அந்தப் பிறைத் திங்களையும் தொழுவதில்லை.

கண்ணன் குறுக்கிட்டான் : '' அதற்கு மேலுள்ள செய்தியை என் தங்கை சொல்லக் கேட்டிருக்கிறேன். என் தங்கை ஒரு முறை கண்ணம்மா வாடியவாறு அமர்ந்திருப்பதைக் கண்டாளாம். வாட்டத்திற்கு காரணம் கேட்டாளாம். ' ஒன்றுமில்லை ' என்ற பதில் ஏக்கத் தொண்டையிலிருந்து வந்ததாம். பொல்லாத குறும்புக் காரியாகிய என் தங்கை இவளது உள்ளத்தை உணர வழி ஒன்றைக் கைக்கொண்டாளாம். — "கண்ணம்மா, அதோ பிறை தெரிகிறது"—என்று கூறித் தான் தொழுதாளாம். பக்கத்திலிருந்த இவள் தொழாமல் குனிந்து வாடியபடியே அமர்ந்திருப்பதைப் பார்த்து நகைத்தவாறே—ஏனடி. பிறைதொழ மறுக்கிறாய் ? பருவம் அடைந்த பெண்கள் மணக்கப்பெற்றாலோ, அன்றி எவரையும் மனத்தில் வரித்தாலோதான் பிறையைத் தொழ மறுப்பார்கள். உனக்கோ மணம் நிகழவில்லை. ஆகவே.... உள்ளத்துக்குள்ளே புகுந்திருப்பவர் யாரடி ? எனக்குத் தெரியுமடி யாரைக் கேட்டுத் தெரிந்துக்கொள்ள

வேண்டுமென்று. என் அண்ணன் கண்ணன் வரும் நேரந்தான். நான் வருகிறேன்—என்று புறப்பட்டா ளாம். புறப்பட்டவனை இவளது கை தடுத்ததாம். ஆனால் உள்ளத்து எண்ணத்தை இவளது முகத்தால் தடுக்க முடியவில்லையாம். பளிச்சென்று சிவந்த முகமும், அதில் பளிச்சிட்டு நின்ற நாணமும் சொன்ன செய்தி களைப் புரிந்து கொள்ளாதது போல் என் தங்கை என்னி டம் விளக்கம் கேட்டாள். இவற்றிலிருந்து பெண்களின் தெய்வம் தொழாமையை நான் அறிந்து கொண்டேன் தந்தையே.''

முகம் செவ்வானமாகிக் கண்கள் தேன் குழம்பாகித் தவித்தாள் கண்ணம்மா.

வள்ளுவத் தந்தை பேசினர்: ஆம், பருவப் பெண் கன்னி. அவளது கன்னித் தன்மை ஒருவனை உள்ளத் தில் கொண்டபோது கற்பு ஆகிவிடும். அதைக் காக்க அவள் தன் உள்ளத்தை வேறு எந்தத் தெய்வத்திடமும் செலுத்தமாட்டாள். தன் கணவனையே தெய்வமாகக் கொள்வாள். அவனையே உள்ளத்தில் பதிப்பாள். எப் பொழுதும் அவனைப்பற்றிய நினைவையே கொள்வாள். தூக்கக்துக்கனவிலும் அவன் நினைவே நிற்கும். விழிக் கும்போதும் அவன் நினைவே எழும். அத்தகையவள் கற்புடைய பெண் ஆவாள். அவள் *தெய்வத்தை உள் ளத்தில் கொள்ளமாட்டாள்; கொள்ளாதவளாய்த் தன் கணவனையே தெய்வமாகக் கொண்டு, தூங்கி எழும் போதும் அவனைத் தொழுதவாறே எழுவாள். அவனை உள்ளத்தில் பதித்தவாறே எழுவாள். அத்தகையவள்

* தெய்வம் தொழா அள், கொழுநன் தொழுதெழுவாள்,
பெய்யெனப் பெய்யும் மழை.

‘பெய்’ என்று சொன்னவுடன் பெய்யும் மழை போன்றவள் ஆவாள். வேண்டும்போது மழைபெய்தால் அது எவ்வாறு பயிர் வளத்திற்கு உதவுமோ, அதுபோலக் கற்புள்ள பெண் அவள் கணவனுக்கு வளம் தருபவள் ஆவாள்.

கண்ணன் இடையிட்டான்: “தந்தையே! இதே போன்று மனைவிக்குக் கணவன் மழைபோன்று வளம் தருவான் என்பதை “வாழ்வார்க்கு வானம் பயந்தற்று”—என்ற தொடரால் தாங்கள் கூறியது இங்கு என் நினைவிற்கு வருகிறது.”

கண்ணம்மா: தந்தையே அவர் எனக்கு அமிழ்தம் ஆவார். நான் அவருக்குப், ‘பெய்’ என்றால் பெய்யும் மழை ஆவேன். அத்தகைய கற்பைக் கொள்வேன். ‘இவள் தான் பெண்’ என்று உலகோர் எடுத்துக் காட்டும் தகுதியுள்ள பெண்ணாக வாழ்வேன்.

## இவளே பெண்

‘நன்று மகளே! * கற்பினின்றும் வழுவாமல் தன்னைத்தானே காப்பாற்றிக்கொள்பவள் பெண்; தன்னை மனையாளாகக் கொண்ட கணவனை உடல் நலமும், உள்ள நலமும் கெடாமல் காப்பவள் பெண்; இவ்விரு செயல்களாலும் இல்லத்திற்கு உரிய புகழைச் சேர்ப்பவள் பெண்; சேர்க்கப்பட்ட புகழ் நீங்காமல் காப்பவள் பெண்; காப்பதோடு உள்ளம் தளராதிருப்பவள் பெண். இத்தகுதிகள் பெற்றவள் தான் எடுத்துக்காட்டிற்குரிய பெண். அறிக மகளே!

* தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்.

"அறிந்தேன் தந்தையே! அவ்வாறே ஆவேன்."

அவன் பேசினன்: பெண்மை ஆண்மையைவிட இரட்டிப்புப் பொறுப்புடையது போலும். தன் கற்புக்குத்தானே பொறுப்பேற்க வேண்டும்; கணவன் நலத்திற்கும் பொறுப்பேற்க வேண்டும். இவை இரண்டிலும் நானும் பங்கு கொண்டு உதவுவேன் தந்தையே.

'நீ உதவுவதற்கு ஒன்றுமில்லை மகனே! அதிலும் முதல் பொறுப்பில் உன் உதவி இடம்பெற வகையே இல்லை. பெண்களின் கற்பைக் காக்க ஆண்கள் முனைவது என்று தொடங்கினல் அது பெண்களைச் சிறையில் அடைத்து வைத்துக் காக்கும் காவலாகத்தான் முடியும். அது நல்லதன்று; வெற்றியும் தராது. பெண்கள் தம் உள்ள நிறைவோடு தாங்களே தங்கள் கற்பிற்குப் பொறுப்பேற்க வேண்டும். அவ்வாறு *பெண்கள் தங்களது உள்ள நிறைவு என்னும் பண்பால் கற்பைக் காத்துக் கொள்ளும் காப்பே சிறந்தது. அஃதன்றி ஆண்களால் சிறையிட்டுக் காக்கப்படும் காவல் கற்பு என்ன பயனைத் தரும் என்று நினைக்கிருய் மகனே?'

"இல்லறப் பிளவு என்னும் பயனைத்தான் தரும்"— என்ருன் மகன்.

"அது மட்டுமோ! இல்லறத்து இழிவு என்னும் பயனையும் தரும். ஆகவே, பெண்மை தனக்குத்தானே கற்பைக் காத்துக் கொள்ளும் பொறுப்புள்ளவள் என்பதை அறிந்தேன் தந்தையே"—என்ருள் மகள்.

'பொறுப்புள்ளது மட்டுமன்று மகளே; சிறப்புள்ளதுமாகும். சிறப்பு என்ருல் எளிதான சிறப்பு அன்று;

---

* சிறைகாக்கும் காப்பெவன் செய்யும்? மகளிர் நிறைகாக்கும் காப்பே தலை.

பெருஞ்சிறப்பைப் பெறுவதாகும். அச்சிறப்பும் இவ்வுல கம் எங்கும் பரவி நிற்கும் சிறப்பாகும். தெய்வத்தைத் தொழாத பெண் தெய்வமாகவே சிறப்பிக்கப்படும் அளவு சிறப்புடையவள் ஆவாள். அத்தகைய பெண்ணின் கணவன் அவளைச் சொத்தாகப் பெற்றவன். உலகோர் அவனை இந்தக் கற்புடையாளை மனைவியாகப் பெற்றான் என்று சிறப்பிப்பர். **தம்மை மனைவியாகப் பெற்ற வனைத் தம் உள்ளத்தில் நிறுத்தும் கற்பைப் பெண்டிர் பெற்றால் அவர்கள் தாம் வாழும் உலகில் மிகப் பெரும் சான்றோரால் பெரும் சிறப்புச் செய்யப் பெறுவர்.**

ஏறுபோல் பீடு நடை

கற்பால் மனைவி பெறும் சிறப்பு இது. அவளது கணவன் பெறுவதோ பெருமிதமான நடை ஆகும். 'என்ன மகனே, பயன் பெறாத பார்வை பார்க்கின்றாய்? - மனைவியின் கற்பால் கிடைப்பது எனக்கு ஒரு நடைதானா —என்று அலுத்துக் கொள்கிறாயா ?'

'' இல்லை தந்தையே ! எவ்வாறேனும், எவ்விடத்தி லேனும் இதை விளக்குவீர்கள் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு.''

'வாழ்க ! நடை என்றால் காலை மாறிமாறி எடுத்து வைப்பதன்று. நடையைப்பற்றி நீ அறிவாயே மகனே!'

'' தந்தையே ! நடை காலை எடுத்து வைக்கும் தன் மையைப் பொறுத்தது அன்று. உள்ளத்தின் நிலைக் கேற்ப நடையை மதிப்பிட வேண்டும். உள்ளம் தளர்ந்

** பெற்றான் பெறின்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப் புத்தேளிர் வாழும் உலகு.

திருப்பின் தலைகவிழ்ந்த நடை அமையும். உள்ளம் நிறைந்திருப்பின் மிடுக்கு நடை அமையும்.''

'ஆம், ஆண் மகனுக்கு உரியது அந்த மிடுக்கு நடை தான். அதனைப் 'பீடு நடை' என்பேன் யான். ஆனால், தலை நிமிர்ந்து கை வீசி நடக்கும் நடையெல்லாம் பீடு நடை ஆகிவிடுமா? வாழ்வில் குற்றங்கள் பல புரிந்து இழிவையே மேற்கொண்டவர்கள் பலர் உண்டு. அவர் தம் செயல்களுக்காகத் தாமே நாணம் கொண்டு தலை குனிய வேண்டும். தம் சிறு தவறுக்கும் நாணுபவரே மனிதப் பக்குவம் பெற்றவர் ஆவார். அவரே சான்றோர் எனப்படுவார். தன் தவற்றை எண்ணித் தானே நாணம் கொள்ளும் தன்மை சான்றோர்க்கு ஓர் அணிகலன் ஆகும். அது அவர்க்கு ஓர் அழகாக மிளிரும். அந்த அழகைப் பெறாமல் தலைநிமிர்ந்து பெருமிதமாக நடப்பின் அந்த நடை பெருமைக்குரிய நடை அன்று; பிணி நடையே ஆகும்.

சான்றோர் தமது நிறைந்த பண்பால் பீடு நடை நடப்பர். இல்லறத்து ஆண் மகனுக்கு அமைகின்ற பீடு நடை அவனது செயலாலும், பண்பாலும் மட்டும் அமைவதன்று. அது அவன் கொண்ட இல்லாளால் அமைவதாகும். இல்லாள் இல்லறப் புகழை விரும்பி ஒழுகுபவளாக அமையவேண்டும். அதற்கேற்ற கற்பு மாண்பை உடையவளாக வேண்டும். அத்தகைய இல்லாளைக் கணவன் பெறுதல் வேண்டும். அப்படிப் பெறாது போனால் உலகோர் அவனை இகழாது என்ன செய்வர்? உலகோர் இகழும் இகழ்ச்சியைப் பெற்றவன் உலகில் தலை நிமிர்ந்து நடக்க இயலுமா? ஆகவே, கணவன் கற்பு நிறைந்த இல்லாளைப் பெறவேண்டும். பெற்றால் உலகோர் போற்றுவர். அதனால் பெருமிதத்துடன் தலை

நிமிர்ந்து மதர்த்த காளைபோல் நடக்கலாம். அவ்வா றன்றி, * இல்லறப் புகழை விரும்பியவளாய்க் கற்பு நிறைந்த இல்லாளைப் பெருதவர்க்குத் தம்மை இகழ்ந்து உரைப்பவர் முன் மதர்த்த காளை போன்று நடக்கும் பெரு மித நடை இல்லையாகும்.

மகளே ! கற்பால் உனக்குக் கிடைக்க வேண்டிய பெரும் சிறப்பை அடைக! உன் கற்பால் உன் கண்ண னுக்குப் பீடு நடையைத் தருக! நீ வாழும் உலகில் பெரும் சிறப்புடைய பெண்ணாக வாழ்க !

## அழகுக்கு அழகு

இவைகளுடன் உங்கள் இருவர்க்கும் உரிய சிறந்த அணிகலன்களை அறிவிக்க எண்ணுகின்றேன். அணி கலன்கள் எனப்படுவன அழகைத் தருவன என்று அறி வீர்கள். ஆண்களும் அணிகளை அணிவர்; பெண்களும் அணிவர். ஆண்களது அணிகள் வீரத்தின் - பெருமை யின் அறிகுறிகள். பெண்களது அணிகள் அழகின், — கற்பின் அறிகுறிகள். அணிகள் எத்துணை தான் பெருமை உடையன ஆயினும் நிலைத்திருப்பன அல்ல. இயல்பால் தேயும்; கள்வரால் பறிபோகும்; ஏழ்மையால் நீங்கும். அணிகள் போனால் அணிகளோடு அமைந்த அழகும் போகும். இவ்வாறல்லாது அழியாத அழகு ஒன்றை இல்லறத்து ஆண்மகன் அணியவேண்டும். மனைமாட்சி உடைய மனைவியே இல்லறத்து ஆண்மகனுக்கு அழி யாத அழகைத் தரும் அணிகலன் ஆவாள். அந்த மனை

* புகழ்புரிந்த இல்லிலோர்க் கில்லை, இகழ்வார்முன்
ஏறுபோல் பீடு நடை.

மாட்சி உடைய பெண்ணிற்கும் அழகுதரும் ஒரு நல்ல அணிகலன் உண்டு. அதுதான் மக்கட்பேறு என்னும் அணிகலன். ஆகவே, * இல்லறத்தானுக்கு மனைவியால் அமையும் குடும்ப மாட்சியே அழகாகும். அந்தக் குடும்ப அழகாம் மனைமாட்சிக்குச் சிறந்த அணிகலனாக அழகு தருவது நல்ல மக்களைப் பெறுதலாகும் என்பர் சான்றோர்.'

மகளே பெறுக! மகனே பெறுக! என்றார் வள்ளுவர். கேட்ட கண்ணனும், கண்ணம்மாவும் நாணக் கடலில் தவித்தனர். அதனின்று அவர்கள் மீண்டு தம் நிலைபெற எண்ணிய வள்ளுவர், 'மேல் விளக்கங்களை நாளை அறியலாம், சென்று வருக!' – என்று விடை தந்தார்.

* மங்கலம் என்ப மனைமாட்சி ; மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு.

# மக்களைப் பெறுக !

## யாம் அறிந்த பேறு

'மக்காள். நீவிர் மக்களைப் பெறுக! அறிவு சான்ற மக்களைப் பெறுக! பழி காணுத மக்களைப் பெறுக! உங்களது செல்வமாக அமையும் மக்களைப் பெறுக! மக்களால் அமிழ்தினும் சிறந்த சுவை பெறுக! உடலின்பம் பெறுக! செவியின்பம் பெறுக! பெற்ருேரின் கடமை அறிந்து சிறப்படைக!

மக்காள், மக்கட் பேற்றைப் பற்றிப் பேசப் புகும் போது இவற்றிற்கு மேலும் வாழ்த்த வேண்டும் என்ற எண்ணம் எழுகின்றது. அந்த அளவுக்கு யாம் குழந்தைச் செல்வத்தை மிகப்பெரும் பேருகக் கருதுகின்ருேம். உலகில் மாந்தர் அடைய வேண்டிய பேறுகள் பல. அவையெல்லாம் ஒவ்வொரு வகையில் குறை உடையன. மக்கட்பேறு எவ்வகையிலும் குறை உடையது அன்று. இந்தப் பேறு அழியாது தொடர்ந்து பெருகவல்லது. அப்பெருக்கால் உலகையே ஆக்கம் பெறச் செய்வது.

இத்தகைய பேற்றிலும் ஒரு திருத்தம் உண்டு. பேற்றுக்குப் பெற்ருேம் என்று பெறப்படும் மக்கட்பேறு சிறப்பு உடையது ஆகாது. யாம் மிடுக்கோடு சொல்

வேம். * *அறிய வேண்டியவற்றை அறியும் நுண்ணறிவு வாய்ந்த மக்களைப் பெறுதல்தான் இல்லறத்தார் பெற வேண்டிய பேறு ஆகும். அத்தகைய மக்கட்பேறு அல்லாத பிற எவற்றையும் யாம் பேருகவே மதிப்பதில்லை'* – என்று உறுதிக் குறிப்போடு கூறினர் தந்தை.

வள்ளுவர் தம் பேச்சில் யாம் என்ற ஈடுபாடான சொல் அமைத்ததைக் கண்ணன் ஏதோ ஒரு புதுமையை அறிந்தவன் போல் நோக்கினன். கண்ணம்மா பக்கம் திரும்பினன்:

"கண்ணம்மா! இதுவரை தந்தை உணர்த்திய கருத்துக்களில் ஈடுபாடு காட்டிப் பேசியதை இதில் தானே காண்கின்ருேம்."

கண்ணம்மா : ஆம், இப்போதுதான் 'யாம்' என்ற ஈடுபாடான சொல்லைச் சொல்கிருர்கள்.

'ஆம் மக்காள், மக்களது வாழ்வியலுக்காக யான் பலவற்றை விளக்கும் விருப்பம் உடையவன். ஆயினும், இதுபோன்று ஈடுபாட்டோடு 'யாம்' என்ற தன்னுரிமைச் சொல்லை அமைத்து மூன்றே செய்திகளைத்தான் குறிப்பேன். ஒன்று இந்த மக்கட்பேறு. மற்ருென்று வாய்மை. வேருென்று மாந்தரில் தாழ்ந்த கயவரைப் பற்றியது.'

"தந்தையே, தங்களது ஈடுபாட்டைப் பெற்ற இவை மூன்றும் இன்றியமையாது கவனிக்கத் தக்கன என்பதை உணர்கிருேம். அவற்றுள் இதுபோது நாங்கள் மக்கட்பேற்றைப் பெறுவதற்குரிய வாய்ப்பைப் பெற்

* பெறுமவற்றுள் யாமறிவ தில்லை, அறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற.

றுள்ளதால் களிக்கின்றோம். அதனால், எங்கட்கு ஒரு குறைவும் நேராது என்ற உறுதியும் கொள்கின்றோம்."

'மகனே, நன்றாக உறுதி கொள்ளலாம். அறிவறிந்த மக்கள் அமைய வேண்டும் என்றேன். அந்த அறிவைக் கொண்டு பழி அல்லாத செயல்களைச் செய்யும் மக்களாக அவர்கள் திகழவேண்டும். அவ்வாறு *பழி அமையாத, சிறந்த பண்பு வாய்ந்த மக்களைப் பெற வேண்டும். பெற்றால், அவ்வாறு பெற்றோரைத் துன்பங்களைத் தரும் தீமைகள் நெருங்கா. அவர்களை மட்டுமன்று, அவர்களது ஏழு தலைமுறைகளையும் தீமைகள் நெருங்கா.

பழியால்தானே தீமை மூளும். பழியல்லாத பண்போடு மக்கள் அமைந்து, வளர்ந்து, செயல் புரிந்தால் அவாகள் அளவுக்கும் தீமை இல்லை. அவர்களைப் பெற்ற பெற்றோர்க்கும் தீமை இல்லை. பழியற்ற மக்களுக்குப் பிறக்கும் பரம்பரைக்கும் தீமை இல்லை.'

கண்ணம்மா : தந்தையே ஏழு என்று தாங்கள் குறித்தது ஒரு அளவுக்கு அமைந்த எண் என்று கருதுகின்றேன்.

'ஆம். தொடர்ந்து தீமையும் துன்பமும் இன்றியே அமையும். இவ்வாறு பிறக்கும் மக்கள் தம் பெற்றோர்க்குத் துன்பத்தை நெருங்க விடாமல் இன்பத்தைச் செறியவைப்பதால் அவர்கள்தான் பெற்றோர்களது பொருட் செல்வமும் ஆவர். பிற பொன், மணி முதலிய பொருட் செல்வங்கள் எல்லா வகையிலும் இன்பத்தைத் தருவன அல்ல. செல்வம் இன்பத்தையும், துன்பத்தை

* எழுபிறப்பும் தீயவை தீண்டா, பழிபிறங்காப்
பண்புடை மக்கள் பெறின்.

யும், பழியையும், அழிவையும் தரும். மக்கட்செல்வம் அத்தகையது அன்று. இந்தப் பேருண்மையை அறிந்த *இல்லறச் சான்றோர் தம் மக்களே தம்முடைய பொருள்—சொத்து என்பர். அம்மக்களது சொத்தும் அவரவரது பழியற்ற செயல்களால் தொடர்ந்து வருவதாகும்.'

''தந்தையே, மக்கட் பேற்றால் சிறந்த பேற்றைப் பெற்றவர் ஆவோம். துன்பம் நெருங்காத நிலையையும் பெறுவோம். பரம்பரைக்கும் உரிய சொத்தைப் பெறுவோம். இவ்வாறு பெரும் பயன்களைத் தரும் பேருக வேறு ஒன்றும் இருக்க வழியில்லை என்பதையும் உணர்கிறோம். கண்ணம்மாவின் முகமலர்ச்சி அந்த உணர்வை அப்படியே அறிவிக்கின்றது தந்தையே.''

**அழுக்கும் அமிழ்தம் ஆகும் ;**
**யாழ் இசையும் தாழ்வாகும்.**

'மகனே, மக்கட்பேற்றின் பயன் இவைகளோடு முடிந்துவிட்டதாகக் கருதவேண்டாம். இதுவரை குறிக்கப்பட்டவை யாவும் பொதுவான பயன்களே. மக்கட்பேற்றின் சிறப்பை அறிவிக்க விளக்கப்பட்டவையாகும். மேலும் விளக்கப்பட்ட பயன்கள் பிற்காலத்தே கிட்டுவன. உங்களது அண்மை வாழ்க்கையில் நீங்கள் பெற இருக்கும் பயன்கள் அளவிட முடியாத மகிழ்ச்சிக்கு உரியவை.

தாம் பெற்ற குழந்தையின் உடல் அழகையும், குறுஞ் செயல்களையும் காண்பதே ஒரு பேரின்பம். குழந்தைகளின் ஒவ்வோர் உறுப்பும் எழிலும், கவர்ச்சி

---

* தம்பொருள் என்ப,தம் மக்கள் , அவர்பொருள்
தம்தம் வினையால் வரும்.

யும் கொண்டது. மலரின் இதழ் போன்ற அவர்களது கை பார்க்கப் பார்க்கத் தெவிட்டாதது; மென்மையானது. செயற்கையில் ஏற்ற முடியாத மெருகு பெற்றது. அக் கையில் அழுக்கு ஏறினும் அந்த அழுக்கும் ஒரு அழகைப் பெறும்; ஒரு சுவையைப் பெறும். அந்த அழுக்கு நிறைந்த கையை உண்ணும் இனிய உணவில் வைத்தால் பெற்றோர் அதைத் தடுப்பதில்லை; தள்ளுவதில்லை. அழுக்குப்பட்ட உணவையும் நீக்குவதில்லை. அதற்கு மாறாக விரும்பி உண்பர். ஏனெனில் *தாம் பெற்ற மக்களது சிறிய கையால் அளாவப்பட்ட உணவு, சுவைமிக்க அமிழ்தத்தைவிட நிறைந்த இனிமை உடையது என்று கொள்ளத்தக்கது அன்றோ !

இவ்வாறு சுவையையும், களிப்பையும் தரும் **மக்கள் தமது இனிய உறுப்புக்களால் பெற்றோரது உடலைத் தொடுவதும் பெற்றோரது உடலுக்கு இன்பமாகும். மேலும் குழவிப் பருவத்தில் குளறும் மழலைச் சொல்லைக் கேட்பதும், அறிவறிந்த பருவத்தில் பேசும் பொருள் பொதிந்த சொல்லைக் கேட்பதும் செவிக்கு இன்பமாகும்.

'மகனே, செவிக்கு இன்பம் தருவனவாக நீ அறிந்தன யாவை ?'

"தந்தையே, இசை செவிக்கு இன்பம் தரும். குயிலின் குரல் செவிக்கு இனிமையானது. வண்டின் இன்னோசை இனிமை தருவது. இசைக் கருவிகளில் குழலின் இசை இனியது. யாழின் இசை இனியது."

* அமிழ்தினும் ஆற்ற இனிதே, தம்மக்கள்
சிறுகை அளாவிய கூழ்.

** மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் ; மற்றவர்
சொற்கேட்டல் இன்பம் செவிக்கு.

'மகனே, நீயும் மழலைச் சொற்களின் இனிமையைச் சுவைக்கும் வாய்ப்பைப் பெருதவன். அதனுல்தான் உனக்கு இவைகள் இனிமையாகப் படுகின்றன. உன்னைப் போலவே, *தம் மக்களது மழலைச் சொற்களைக் கேட்காதவர்கள் குழல் தரும் இசை இனியது என்பர். யாழ் தரும் இசை இனியது என்பர். தம் மக்களது மழலையைக் கேட்டவர்களோ மழலைச் சொற்களே இனிமை இனிமை; அவற்ருல் பெறும் இன்பமே இன்பம் என்பர்'—என்று கூறிக் கண்ணனைப் பார்த்தார் வள்ளுவத் தந்தை.

கண்ணனே பச்சைச் சிரிப்போடு தலை குனிந்து கொண்டான். கண்ணம்மாள் முகத்தில் பொருள் தெரிக்கும் அறிகுறி தோன்றியது.—இதுவரை காதைக் கெடுத்துக் கொண்டு வந்திருக்கிருேமே! என்ருலும் காது கெட்ட கேட்டை எல்லாம் சேர்த்துப் பேரின்பம் பெறும் வாய்ப்பில் இருக்கிருேம்—என்ற மாற்று எண்ணங்களை முகம் அறிவித்தது. பேச்சுக்கு வாய் எழவில்லை; தந்தை தொடர்ந்தார்;

## தன்னலமும் பொதுநலமும்

'மக்காள், நீங்கள் உங்களது கடந்த காலத்தை எண்ணி வருந்துவதற்கு உரியவர்கள் அல்லர். எதிர்காலத்தை எண்ணி நிகழ்காலப்பூரிப்புக் கொள்ளும் முதற்படியில் உள்ளவர்கள். அந்தப் பூரிப்பு முழுமையாகத் திகழவேண்டுமானுல் அதற்கு நீங்கள் ஏற்கவேண்டிய பொறுப்புக்கள் உண்டு. மக்களைப் பேணி வளர்க்கும்

* குழலினி தியாழினி தென்பதம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர்.

பொறுப்பைத் தாய் ஏற்பாள். அதனுல் மக்களின் உடல் வளத்தையும், உள்ள வளத்தையும் வளர்த்தவள் ஆவாள். தந்தை அவர்களை அறிவு வளர்ச்சியில் செலுத்த வேண்டிய கடமைப்பட்டவன். தாம் பெற்ற மக்களுக்குக் கல்வி தந்து, அக்கல்வியால் அறிவு வளர்ச்சியைத் தந்து மேம்பட்டவராக்க வேண்டியது தந்தையின் பொறுப்பு. *ஒரு தந்தை தன் மகனுக்குச் செய்ய வேண்டிய நல்ல உதவி அவன் கற்ருேர் கூடிய அவையில் முதல்வனுக நல்லிடம் பெறுமாறு கல்வியறிவு பெறச் செய்தலாகும்.

இவ்வாறு அவையில் சிறந்தோராகத் தம் மக்கள் அமைவதைக் காணுதல் ஒரு தந்தைக்குப் பூரிப்பான இனிமையாகும். இந்த இனிமையால் தந்தை தன்னலம் பெற்றவன் ஆவான் என்பது மட்டுமல்ல, பொது நலத்திற்கும் அடிகோலியவன் ஆவான். அது அவன் தன் மக்களுக்குத் தரும் கல்வியறிவின் பெருமையைப் பொருத்தது ஆகும்.

தந்தையர் மக்களுக்குக் கல்வியை அடைவிக்கும் போது மக்களின் தன்மையை அறியவேண்டும். அவர்களால் ஏற்கத்தக்க எல்லாவகைக் கல்வியையும் பெறச் செய்ய வேண்டும். அக்கல்வியறிவைப் பயன்படுத்தும் தகுதியையும் பெறச் செய்யவேண்டும். தாம் தன் வாழ்வில் பட்டறிந்தவற்றை எல்லாம் அவர்க்கும் அளிக்க வேண்டும். தம் வாழ்வில் நேர்ந்த குறை உண்டெனில் அது அவர்க்கு நேராமல் செய்தல் வேண்டும். தம் மக்கள் தம் வாழ்விலும் மேம்பட்ட வாழ்வை அடையுமாறு

* தந்தை மகற்காற்றும் நன்றி, அவையத்து
முந்தி யிருப்பச் செயல்.

செய்ய வேண்டும். அவர்களை அறிவிற் சிறந்தோராகச் செய்தல் ஒரு தனிச் சிறப்பு.

அவ்வாறு மக்கள் மிகுந்த அறிவைப் பெற்றால், பெற்ற அறிவை அறிவு அற்றவர்க்குத் தருவர். அதனால் அவர்களுக்கு இனிமை கிட்டும். பொதுமக்களுக்குத் தம் ஆராய்ச்சி உரைகளாலும், நூல்களாலும், அறிவுரைகளாலும் இனிமை தருவர். அரசியலாருக்கு நல்ல கருத்துரைகளைத் தருவர். அவற்றால் பலவகை உயிர்களுக்கும் இனிமை தந்தவர் ஆவர். நிறைந்த அறிவினராகச் சிறந்த பண்பாளராகத் திகழ்வதால் எல்லாவகை உயிர்களையும் தாங்குவர். ஆகவே, *தம் மக்கள் அறிவு உடையார் ஆதல், இந்தப் பெரிய உலகத்தில் உள்ள பலவகை உயிர்க்கெல்லாம் தம்மைவிட நன்மையாகும்.

மகனே, இவ்வாறு தானும் பயன்பெற்று, உலகத்து உயிர்களும் பயன்பெற வைப்பதால் ஒரு தந்தை தன்னலத்தோடு பொது நலமும் கொள்பவன் ஆவான். அந்நிலையை உணர்க. கண்ணா !' என்றார் வள்ளுவப் பெருந்தகை.

''தந்தையே, உணர்ந்து கடைப்பிடிப்பேன். கண்ணம்மா தனக்கு ஒன்றும் இல்லையோ என்று ஏக்கப் பார்வை பார்ப்பதுபோல் தோன்றுகிறது.''—என்றான் கண்ணன்.

## பெற்ற பொழுதினும் பெரிய பூரிப்பு

மகளே, மக்கட்பேற்றால் உனக்கில்லாத பூரிப்பும் உண்டோ ? உன் மகன் கற்றோர் அவையில் சிறந்திருப்

* தம்மின்தம் மக்கள் அறிவுடைமை, மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது.

பதை அங்கு நீ செல்ல நேர்ந்தால் கண்டு மகிழலாம். அதைவிட உலகோர்—' உன் மகன் ஒரு சான்ருேன்,— என்று புகழும்போது உன் உள்ளம் பூரிப்பின் எல்லையை அன்ருே அடையும். அது போன்ற பூரிப்பை நீ அதற்கு முன் கண்டிருக்கவே முடியாது. வேண்டுமாளுல் குழந்தையைப் பெற்றெடுத்த நேரத்தில் பூரித்திருக்கலாம். ஆனல், *தன் மகன் சான்ருேன் என்று உலகோர் புகழும் புகழ்மொழியைக் கேட்ட தாய், தான் அவனைப் பெற்ற பொழுதைவிடப் பெரிதும் பூரிப்பாள் அன்ருே! மகளே, நீயும் அந்தப் பூரிப்பை அடைவாயாக!

இதுவரை மக்கட்பேற்றின் சிறப்பையும், அப்பேற்ருல் நீங்கள் பெற இருக்கும் இன்பங்களையும், நீங்கள் ஆற்றவேண்டிய கடமைகளையும், உங்களுடன் உலகம் அடைய இருக்கும் பயன்களையும் கண்டோம்.

மக்கட்பேற்றின் ஈற்றுச் செய்தியாக ஒன்று உண்டு. மக்களைப் பெற்றுப் பேணி வளர்த்து,—அறிவை ஊட்டி வளர்த்து ஆளாக்கி விட்டால் அம்மக்கள் உங்கட்குச் செய்யவேண்டிய கடமையே அது. அக் கடமை ஊரார் தம் பெற்ருேரைக் குறித்துப் புகழுமாறு விளங்குவதாகும். **இவனைப் பெற்றெடுத்த தந்தை இவன் இந்நிலையை அடைய எந்த அளவு முயன்ருனே என்று வியப்போடு சொல்லும் புகழ்ச் சொல்லை உண்டாக்குவதே ஒரு மகன் தன்னை ஆளாக்கிய தந்தைக்குச் செய்யும் கடமையாகும். உலகோர் 'இவன் தந்தையே தந்தை' என்று

* ஈன்ற பொழுதின் பெரிதுவக்கும், தன்மகனைச்
சான்ருேன் எனக்கேட்ட தாய்.

** மகன்தந்தைக் காற்றும் உதவி, இவன்தந்தை
என்நோற்ருன் கொல்எனும் சொல்.

மூக்கின்மேல் விரல் வைத்து வியந்து புகழுமாறு கடமை யாற்ற வேண்டும். மக்களே, உங்களது மக்களும் அத் தகைய கடமையை ஆற்றப் பெறுவீர்களாக!'—என்று மக்கட் பேற்றுக்கு முடிவுரை தந்தார் வள்ளுவர்.'

கண்ணன் கண்ணம்மாவுக்காகப் பரிந்து பேசினன்: "தந்தையே, கண்ணம்மாவுக்கு ஒரு குறை உள்ளது போன்று அறிகின்றேன். கற்பதும், அறிவு பெறுவதும் ஆண்களுக்கே உரியவை என்னும் கருத்து மேம்பட்டு நிற்பதாக இவளுக்குத் தோன்றுகிறதோ என்று ஐயப் படுகிறேன்."

கண்ணம்மா சிரித்துக் கொண்டே விளக்கம் தரத் தொடங்கினள்: "தந்தையே, இவர் வேண்டுமாயின் அவ்வாறு கருதிக்கொண்டு, ஆண்கள் ஒருபடி உயர்ந்த வர்கள் என்று மகிழ்ந்து கொள்ளலாம். 'பெண்ணில் பெருந்தக்கயாவுள'—'வரவு அறிந்து செயல்புரியும்வாழ்க் கைத்துணை'—'இல்லத்துக்கு மாண்பு தருபவள்'—என்று தாங்கள் சிறப்பித்ததைக் கேட்ட எனக்கு இவர் என்னிடம் தோன்றுவதாகக் கூறிய குறை எழவில்லை. சில இடங்களில்—'தந்தை மகனுக்கு ஆற்றும் நன்றி'—'தன் மகனைச் சான்றோன் எனக்கேட்ட'—மகன் தந் தைக்கு என்று தாங்கள் குறித்தது அவ்வாறு அவரை எண்ணத் தூண்டியுள்ளது. ஆனால் தாங்கள் குறித்த மக்கட்பேறு என்ற தொடரில் அமைந்த மக்கள் என்ற சொல் ஆணையும் பெண்ணையும் அடக்கியதன்றோ! அதுபோன்றே—'அறிவறிந்த மக்கள்'—'பண்புடை மக் கள்'—தம் 'மக்கள் அறிவுடைமை'—என்று கூறப்பட் டவை எல்லாம் ஆண் மகனையும், பெண்மகளையும் இணைத்தே கூறப்பட்டவைதானே. அவை கொண்டே கல்விக்கும், அறிவிற்கும் பெண்களும், ஆண்கள்

போன்றே தகுதி படைத்தவர்கள் என்பதை உணர லாம். மேலும் ஆணோடு பெண் இயைபு கொண்டவள். ஆயினும் பெண்கள் இல்லத்து எல்லைக்குள் அதிகம் வாழ்பவர்கள். ஆண்கள் புற உலகிலும் உலவும் வாய்ப் பில் அமைந்தவர்கள். ஆகவே, பெரும் பகுதி கருதியே சில இடங்களில் 'மகன்' என்று குறித்துள்ள தங்கள் கருத்தையும் குறிப்பாக உணர்ந்து கொண்டேன். ஆகவே, அவர் என் குறையாகக் குறித்தது என்னிடம் இல்லை தந்தையே."

'மக்காள், உங்களது குறிப்பறியும் நுண்ணறிவை அறிந்து மகிழ்கிறேன். இனி யான் அறிவுறுத்தும் கருத் துரைகளையும் குறிப்பாகவே அறிவுறுத்துவது உங்க ளுக்குப் பொருந்துவதாகும். வாழ்க நீவிர்! என்னைச் சந்தித்த இரண்டாவது நாளிலிருந்து இதுவரை நீங் கள் பெற்ற கருத்துரைகள் நீங்கள் ஒருவருக்கு ஒருவர் கொள்ளும் தொடர்பு பற்றியவை. இனி நாளை முதல் உலகோராக, உங்களைச் சூழ உள்ள புறத்தாரிடம் கடைப் பிடிக்க வேண்டிய பண்புகளையும், செயல்களையும் தனித் தனியே அறிவோம். அவை, அன்பு உடைமை, விருந்தினரைப் போற்றுதல், இனியவை கூறல், செய்த நன்றியை அறிதல், நடுநிலைமை கொள்தல், அடக்கம் உடைமை, ஒழுக்கம் உடைமை, பிறன் இல்லாளை விரும் பாமை, பொறுமை உடைமை, பொருமை இல்லாமை, பிறர் பொருளைக் கவராமை, புறம் கூருமை, பயனில் லாதவற்றைச் சொல்லாமை, தீய வினைக்கு அச்சம், ஒப் புரவு அறிதல், ஈகை, இல்லறத்தின் முடியாகிய புகழ் ஆகியன ஆகும்.

செல்க! வருக!

# அன்பு கொள்க!

## துளிக்கண்ணீர் தூற்றும்

'கண்ணா—கண்ணம்மா, காலைப் பொழுதிலேயே இன்று உங்களைக் காண்கின்றேனே அளவளாவிப் பேசிய வாறே வருவதைக் கண்டு மிக மகிழ்கிறேன். உங் களது மகிழ்ச்சியான உரையாடலுக்கு ஏதேனும் அடிப் படை நிகழ்ச்சி உண்டோ ?'

"உண்டு தந்தையே. நான் கண்ட ஒரு புதுமை தான் அது. என் வீட்டிற்கு எதிரில் ஒரு தாத்தா இருக் கிறார். அவர் ஒரு வியப்பான மனிதர். எவருடனும் பழகமாட்டார். அவரது முகத்தில் மகிழ்ச்சியின் அறி குறியையோ, வாட்டத்தின் அறிகுறியையோ நான் கண்டதில்லை. அவர் வீட்டு நாய் ஒன்று என் வீட்டுக்கு உணவுக்காக வரும். நேற்று அது வரவில்லை. இன்று விடியலில் அவரைப் பார்த்த நான் 'எங்கே தாத்தா நாயைக் காணோம்' என்றேன். பதில் சொல்லாமல் சிறிது நேரம் நின்றார். அவர் முகத்தில் எந்த அறிகுறி யும் இல்லை. எப்பொழுதும் போலவே இருந்தது அவர் முகம். சிறிது நேரம் சென்றது. 'ஆம் தம்பி, அது நேற்றுக் காலை செத்துவிட்டது' என்றார். அவர் குரலில் எவ்வித மாறுதலும் இல்லை. ஆனால் அவரது கண் ஓரத்தில் ஒரு துளிக் கண்ணீர் அவரையும் மீறித்

துளித்தது. அந்த நேரத்தில் அவரது முகம் சிறிதளவு மாறிச் சுளித்தது. அந்தக் கண்ணீரை அடக்க முயன்று அவர் தோற்றிருக்கிறார் என்பதைக் காட்டிற்று முகச் சுளிப்பு. அந்த நிலையைக் கண்ணம்மாவிடம் சொல்லிக் கொண்டு வந்தேன்."

'மகனே, அதுதான் அன்பு எனப்படுவது. பார்த்தாயா அந்த முதியவரின் அன்பை! அவர் அதை அடைத்து வைக்க முயன்றிருக்கிறார். *அன்பிற்கும் தடைபோட்டு அடைத்து வைக்கும் தடைக்கட்டை உண்டோ! அன்பால் விளைந்த ஆர்வத்தை உடையவரது துளிக்கண்ணீரே அவரது அன்பைப் பலர்க்கும் வெளிப்படுத்திவிடும். துளிக் கண்ணீரே போதும்; இவர் அன்புடையவர்—அன்புடையவர் என்று உலகோரிடம் தூற்றிவிடுமே.

## உயிரைப் பிணிக்கும் கயிறு

'மகனே, அன்பு மறைத்து வைக்க இயலாதது. வாய்ப்பை ஏற்படுத்திக்கொண்டு வெளிப்பட்டுத் தம்மோடு தொடர்பு கொண்டவர் மேல் செல்லும் தன்மையை உடையது. இந்த இரண்டு நாட்களில் அந்த அன்பால் எந்த அளவு பிணைக்கப்பட்டுள்ளீர்கள் என்பதை நீங்களே அறிவீர்களே! உங்களிடையே இல்லறப் பிணைப்புக் கயிருக விளங்கும் அன்பு, குழந்தைகள் மேல் பரவி, வளர்ந்து சிறப்பது. உற்ருர் மேலும், உலகோர் மேலும், உயிர்கள் மேலும் பரவி, எங்கும் நிறைந்து நிற்கும் பெரிய உருவை உடையது.

* அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ்? ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும்.

இத்தகைய அன்பு இல்லையேல் உறவோர் உயிர்கள், உலகோர் முதலியவர்களின் தொடர்பு இல்லை. கணவன் மனைவி தொடர்பு இல்லை. மக்கட்பேற்ருேடு தொடர்பு இல்லை. இத்தொடர்புகள் இல்லையானுல் ஒருவருக்கொருவர் உதவி இல்லை. சுற்றுப்புறத்தில் நல்ல சூழல் அமையாது. அமையப்பெருத ஒருவன் அமைதியான மன நிலையைப் பெறமுடியுமோ? அமைதியில்லாது அலையும் உள்ளம் உடலை வாட்டும். வாடி வாடித் தளரும் உடலோடு உயிர் எத்துணை நாளைக்குத் தொடர்பு கொள்ளும்?

அதனுல்தான், * *அருமையான உயிர் உடம்போடு பொருந்தியுள்ள தொடர்பு அன்போடு பொருந்தி வாழும் வாழ்க்கையால்தான் அமைந்துள்ளது என்பர் சான்ருேர்.*

ஆகவே, அன்புதான் உடலோடு உயிரைக் கட்டி வைக்கும் கயிறு. உடலோடு உயிரைப் பிணிப்பதற்குக் காரணமாயுள்ள அன்பு எப்பொழுதும் மற்றவரோடு தொடர்பு கொள்ளப் பாய்ந்து நிற்பது; தொடர்பு கொண்டவரைப் பிணிக்க வல்லது. பிணிக்கப்பட்டவரிடம் மேலும் மேலும் தொடர்பு கொள்ளக் கொள்ள அவர்கள் மேல் மாருத விருப்பத்தை வெளிப்படுத்தும். விருப்பம் வெளிப்பட வெளிப்பட விருப்பத்திற்கு ஆட்பட்டவர்களும் நெருங்கிப் பழகுவர். நெருங்கிய பழக்கம் நட்பாக உருவெடுக்கும். இவ்வாறு **அன்பு, தொடர்பு உடையவரிடம் ஆர்வம் கொள்ளும் தன்மையைத் தரும்

* அன்போ டியைந்த வழக்கென்ப, ஆருயிர்க்
கென்போ டியைந்த தொடர்பு.

** அன்பீனும் ஆர்வம் உடைமை; அதுஈனும்
நண்பென்னும் நாடாச் சிறப்பு.

அந்த ஆர்வம் நட்பு எனப்படும் தேடிக்கிடைக்காத சிறப்பைத் தரும்.

ஆகவே, அன்பு ஆர்வத்தைத்தர, ஆர்வம் நட்பைத் தர, நட்பு சிறப்பைத்தர, அச்சிறப்பு இன்பத்தைத் தர வல்லது ஆகிறது. அதனால்தான், *உலகத்தே இல்லறத்தில் இணைந்து இன்பம் அடைந்து வாழ்பவர் பெறும் சிறப்பெல்லாம் அவர்களது அன்பு பொருந்திய தொடர்பால் விளைந்த பயன் என்பர் சான்றோர்.'

தீமைக்கும் அன்பே துணை

"தந்தையே, அன்பு இவ்வாறு இல்லறப் பயனை அளிப்பதைத் தெளிவாக உணர்கிறேன். அன்பும் அறனும் பெற்று இல்லறம் நடைபெறுமானால் இல்லறத்திற்கு உரிய பண்பும் பயனும் அதுதான் என்று தாங்கள் முன்னர்க் கூறியதையும் பொருத்திப் பார்க்கிறேன். அதனால் அன்பு அறத்தோடு கூடி நின்றே செயல் புரிந்து இல்லறப் பயனைத் தரும் என்பதையும் உணர்கிறேன்."

'மகனே, அன்பு அறத்தோடு கூடி நிற்பதுதான். அன்புகொண்டால்தான் அறச்செயலை ஆற்றலாம். அது போலவே அறத்துக்கு மாறுபட்ட மறம் என்னும் தீய செயலையும் அன்பாலே போக்கலாம். தீக்குணம்கொண் பகைவன் ஒருவன் தீமை செய்யச் செயல் புரிவது மற எனப்படும். அந்த மறத்தையும் அன்பால் வெல்லலாட தன்மேல் பகை கொண்டு தீமை செய்ய முனைபவனிட

* அன்புற் றமர்ந்த வழக்கென்ப, வையகத்
இன்புற்றார் எய்தும் சிறப்பு.

அன்பு காட்டினுல் அவன்மேலும் ஆர்வம் தோன்றும். தோன்றினுல் அவன்மேல் நட்புக்கொள்ள நேரும். நட்புக் கொள்ளின் அவனுக்கு வேண்டிய உதவிகளைச் செய்ய உள்ளம் விழையும். அவ்வாறு உதவி செய்ய விழைவது அன்புடையார் பண்பாகும். அவர் எவ்வகை உதவியையும் செய்ய முன் நிற்பர். **அன்பு இல்லாதவர் தான் தூசு—துரும்பு, பொன்—பொருள், சொல்—செயல் முதலிய எல்லாவற்றையும் தமக்கே உரிமையாகக் கொள்வர். அன்பு உடையவரோ அவைகள் எல்லாவற்றை யும் மட்டுமல்ல தம் உடலையும்—எலும்பையும்கூடப் பிற ருக்கு உரிமையாக்கி உதவுவர்.**

ஆகையால் தனக்கு மறம் செய்ய எண்ணுபவன் மேல் அன்பு கொள்வதால் அவனுக்கும் எல்லையின்றி உதவுவர். அவ்வுதவியால் அவனும் மனம் திருந்து வான். திருந்தி நாளடைவில் நண்பனும் ஆவான். அதனுல் அவன் செய்ய நினைத்த மறத்தையும் கைவிடு வான். ஆகவே மறத்தைப் போக்க அன்பு துணை செய்வ தாகிறது. ***அன்பின் ஆற்றலை அறியாதவரே அன்பு அறத்திற்குத்தான் துணை நிற்கும் என்பர். நுணுக்கமாக அறியின் மறத்தினைப் போக்கும் வகையில் மறத்திற்கும் அந்த அன்பே துணை நிற்பதாகும்.*'

கண்ணம்மா பேசினுள்: 'தந்தையே, அன்பு எவ் வளவு அரும் பயன்களை விளைவிக்கிறது! உயிரோடு உடலை வாழவைக்கிறது; தேடிக்கிடைக்காத நட்பைத்

* அன்பிலார் எல்லாம் தமக்குரியர் ; அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு.

** அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார் ; மறத்திற்கும் அஃதே துணை.

தருகிறது; சிறப்பை வழங்குகிறது; அறத்தை விளைவிக்கிறது; மறத்தைப் போக்குகிறது. இவ்வளவு பயன் வாய்ந்த அன்பைப் பெறாத மக்கள்; மக்கள் இனத்தைச் சேர்ந்தவரே அல்லர்.

### வெயிலில் புழு; பாறையில் பட்ட மரம்.

'ஆம் மகனே, அன்பைப் பெறாதவர் மக்களினத்தர் அல்லர்தான். அன்பு அறத்திற்குச் சார்புடையது என்றறிந்தோம். அன்பு இல்லையேல் அறமும் இல்லை. அறம் இல்லாத மக்கள் பண்பு அற்றவர் ஆவர்; தீயனவே செய்வர்; செய்து தீமைகளையே பெறுவர்; பெற்றுத் துன்புறுவர். அறம் என்பது தன்னைக் கைக்கொண்டவருக்கு மிக நல்லது. தன்னைக் கைக்கொள்ளாதவருக்கோ மிகப் பொல்லாதது. தன்னைக் கொண்டோரை உயர்த்தும்; வாழச்செய்யும். தன்னைக் கொள்ளாதோரைத் தாழ்த்தும்; வாழ விடாது. மகனே, எலும்பு அமையாத உயிர் இனங்களை அறிவாயே!'

"ஆம் தந்தையே, புழுக்கள் எலும்பு அமையாத உடலைப் பெற்றவை."

'அந்தப் புழுக்கள் வெயிலில் கிடந்தால் என்ன ஆகும்?'

"கருண்டு, காயும்; தீய்ந்து அழியும், தந்தையே."

'ஆம், *எலும்பு இல்லாத உடலைப் பெற்ற புழுவை வெயில் சுட்டுத் தீய்த்துத் துன்புறுத்தும், அதுபோல, அன்பு இல்லாத உயிரை அறம் நெருக்கிக் கலக்கித் துன்புறுத்தும்.'

---

* என்பில் அதனை வெயில்போலக் காயுமே,
அன்பில் அதனை அறம்.

" தந்தையே, அவ்வாறாயின் அன்பு இல்லாவிடில் உயிர் விளக்கம் பெறவும் வழி இல்லைதான்."

' வழி உண்டோ மகனே ! வலிய பாறை நிலத்தைப் பார்த்திருப்பாய். அங்கு இடுக்கில் ஏதேனும் முளைத்து மரமாகி விடுவதுண்டு. பின்னர் நெடுங்காலம் மழை இன்றி ஞாயிற்றின் வெப்பம் தாக்கினால் மரத்தின் தளிர் கருகிக் கொம்பும், கிளையும் தீயும். அடி மரமும் ஆணி வேரும் பாறையின் வெப்பத்தால் காயும், ஆணிவேர் காய்ந்த மரம் அதிலும் பாறை நிலத்தில் காய்ந்து போனது தளிர்விட வழி உண்டோ ?'

கண்ணன் : எப்படி உண்டு ?

' அதற்கு வழி உண்டு என்றால், அன்பு இல்லாத உயிர் விளக்கம் பெறவும் வழி உண்டு. அன்பு மழைநீர் போன்றது. அந்த அன்பு இல்லாத உள்ளம் பாறை நிலம் போன்றது. அஃதோடு தொடர்பு கொண்ட உயிர் என்ன ஆகும் ? அன்பு இல்லாமையால் அறம் என்னும் வெயில் வெப்பத்தைத் தரக் காய்ந்து போகும். ஆகவே, அவ்வுயிர் பட்ட மரம் ஆகும். பட்டமரம் தளிர்க்குமோ? *உள்ளத்தில் அன்பு இல்லாத உயிர் வாழ்க்கை, வலிய பாறை நிலத்தில் பட்டுப்போன மரம் தளிர்க்காதது போன்று அழிய வேண்டியதுதான்.'

" அன்பு இல்லாத உள்ளம் பாறைதான் தந்தையே! உலக வழக்கிலும் ' கல்நெஞ்சு ' என்பார்கள் ; ' ஈரம் இல்லாத நெஞ்சு ' என்பர்."

---

* அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை, வன்பாற்கண்
வற்றல் மரம்தளிர்த் தற்று.

எலும்புத்தோல் முட்டை

'நன்று மகனே, உள்ளம் இயல்பில் மென்மையானது. அன்பில்லாது போனால்தான் வன்மைபெறும். வன்மை பெற்றால் உள்ளம் தான் செய்யவேண்டிய செயல்களைச் செய்ய இயலாததாகிவிடும். உள்ளம் சிந்தனையைக் கொண்டது; ஊக்கத்தைக் கொண்டது; வீரத்தைக் கொண்டது; அன்பைக் கொண்டது. இப் பண்புகள் எல்லாம் உள்ளத்தின் உறுப்புக்கள் போன்றவை. உள் உறுப்புக்களாகிய அகத்து உறுப்புக்களே உடலுக்கு இன்றியமையாத துணைபுரிபவை. இவை நிறைவாக இயங்கினால் தான் உடலின் வெளி உறுப்புக்கள் எல்லாம் இயங்கிச் செயல்புரியும். அக உறுப்புக்களில் எல்லாம் அன்பு தனித் தன்மைகொண்டது. ஆகவே, *அக உறுப்பாகிய அன்புஇல்லாதவர்க்குப் புற உறுப்புக்களாகிய கை, கால், வாய்,கண், மூக்கு, செவி முதலிய எல்லாம் என்ன உதவியைச்செய்யும் மகனே?

"இயங்கவே இயலாதபோது உதவி செய்ய வகையே இல்லை, தந்தையே"

உறுப்புக்களின் இயக்கத்தையும், உதவியையும் பெறாத உடல் உயிரோடு இருந்தால் என்ன; உயிர் இன்றிக் கிடந்தால் என்ன? ஆகவே, **அன்பின் வழியே இயங்கும் உடம்பே உயிர் நின்ற உடம்பாகும். அன்பு

* புறத்துறுப் பெல்லாம் எவன்செய்யும், யாக்கை
அகத்துறுப் பன்பில் அவர்க்கு?

** அன்பின் வழிய துயிர்நிலை; அஃதிலார்க்
கென்புதோல் போர்த்த உடம்பு.

இல்லாதவர்க்கு அமைந்த உடம்பு எலும்பைத் தோலால் போர்த்த மூட்டையாகும் '—என்றார் வள்ளுவத் தந்தையார்.

'' கண்ணம்மா! அன்பில்லாதவர்கள் மிகவும் இரங்கத் தக்கவர்கள். அவ்வளவு கடுமையான குறிப்பைத் தந்தையவர்கள் தந்துள்ளார்கள் ''—என்ற கண்ணன் தந்தையைப் பார்த்து, '' தந்தையே, அன்பைப் பற்றிப் பேசியதில் நேரம் சென்றதே தெரியவில்லை ''—என்றான்.

' ஆம், நண்பகல் ஆயிற்று மக்காள். என் இல்லத்தில் இன்று உணவு கொள்ளுக! நீங்கள் இன்று என் விருந்தினர். உங்களுக்கு விருந்திடும் நல்ல வாய்ப்பைப் பெற்றதை எண்ணி மிக மகிழ்கிறேன். உணவுக்குப்பின் விருந்தைப் பற்றிப் பேசுவோம் '—என்றார் வள்ளுவத் தந்தை. அவர் முகத்தில் மணமக்களை விருந்தினராகக் கொண்ட மகிழ்ச்சி மலர்ந்து நின்றது.

# விருந்தைப் போற்றுக !

## சாவா மருந்தும் வேண்டாம்

" தந்தையே, தங்கள் இல்லத்தில் விருந்து உண்ணும் வாய்ப்புப் பெற்றதை எண்ணி எண்ணி உவப்பு அடைகின்றோம். உண்ட உணவு சுவையா; கண்ட அன்பு சுவையா; உள்ளம் கொண்ட உவப்பு சுவையா என்று அறிய முடியாத நிலையில் உள்ளோம். இன்று நாங்கள் பெற்ற பேறு பெரும் பேறு."

'மகனே, பேறு பெற்றவர்கள் நீங்கள் அல்லர். யான்தான் பேறு பெற்றவன். விருந்தினரை ஏற்றுப் போற்றுதல் இல்லறக் கடமைகளில் ஒன்றன்றோ? விருந்து வீட்டு வேளாண்மை. *இல்லறத்திற்காகப் பொருளை ஈட்டிப் பாதுகாத்து, இல்லறத்தில் இருந்து வாழ்வதெல்லாம் விருந்தினரை ஏற்றுப் போற்றி அன்புதவி—வேளாண்மை—செய்வதற்கே ஆகும். இன்று உங்களை விருந்தாகப் பெற்றேன். அதனால் வீட்டு வேளாண்மை செய்யும் வாய்ப்பைப் பெற்றவன் ஆனேன்.

---

* இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம், விருந்தோம்பி
வேளாண்மை செய்தல் பொருட்டு.

மக்காள், நான் இட்ட உணவு எளிய உணவு. மிக அரிய உணவு ஆனாலும் விருந்தினர் இல்லாது உண்ணுதல் விரும்பத்தக்கது அன்று. அதிலும் *விருந்தினர் இல்லத்தின் வெளியே இருக்கத் தான்மட்டும் உண்ணுவதோ! அவ்வாறு உண்ணப்படும் பொருள், சாவைத் தடுத்து நெடுங்காலம் வாழவைக்கும் மருந்தாக இருந்தாலும் விரும்பத்தக்கது அன்று. விருந்து அத்துணை விரும்புவதற்குரிய சிறப்பை உடையது.'

"தந்தையே, இல்லறத்தானாகிய நான் காவலனாக இருந்து போற்றவேண்டியவர்களில் விருந்தினர் ஒருவர் என்று தாங்கள் அறிவுறுத்தியதை இதுபோது நினைக்கின்றேன். விருந்து இல்லறத்திற்குப் பெரும் பயன் விளைவிப்பது என்பதையும் குறிப்பாக அறிகின்றேன்."

'மகனே, நல்ல விருந்து செவ்வனே ஏற்றுப் போற்றப்படுமானால் அஃது இல்லறத்திற்குப் பெரும் பயன் விளைப்பதே ஆகும். விருந்தினரை ஏற்றுப் போற்ற வேண்டும். நாள்தோறும் வரினும் ஏற்றுப் போற்ற வேண்டும். அகம் மகிழ்ந்து, முகம் மலர்ந்து போற்ற வேண்டும். விருந்தினர் பலராய் வரின் அவர் உண்டபின் எஞ்சியதை உண்ணுவதில் ஒரு மகிழ்ச்சி கொள்ள வேண்டும். வந்த விருந்தைப் போற்ற வேண்டும். வரும் விருந்தை எதிர்நோக்க வேண்டும். இவ்வாறெல்லாம் போற்றுவதே செவ்வனே போற்றுவதாகும். இந்தச் செம்மையால் இல்லறம் பெறவேண்டிய பயன்களைப் பெறும்.'

* விருந்து புறத்ததாத் தானுண்டல், சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று.

## உள்ளத்தில் மகிழ்வும், இல்லத்தில் பொலிவும்

'மக்களே, நாள்தோறும் விருந்தைப்பெறும் வீடு தனி அழகைப் பெறுமே! விருந்தினரோடு உண்ணும் உணவு தனிச் சுவை தருமே! விருந்திடும் இல்லறத்தார் உள்ளம் அன்பு பொங்க மகிழுமே! இவற்ருல் விருந்து பெற்ற இல்லம் நிறைவோடு விளங்கும். * *தன் இல்லத்திற்கு வரும் விருந்தினரை நாள்தோறும் ஏற்றுப் போற்றுகின்றவனது வாழ்க்கை, துன்பம் பெற்றுக் கெட்டொழிவதில்லை.*

வாழ்க்கை கெட்டொழியாததற்குக் காரணம் விருந்திடுபவனுடைய இல்லறம் பொலிவு பெறுவதேயாகும். விருந்தைப் போற்றுபவன் என்ருல் போற்றுபவளேயும் இணைத்தேதான் குறிக்கின்றேன். விருந்தைப் போற்றுபவன் அன்பு உள்ளம் கொண்டு அமைவான். உள்ளம் மகிழ்ந்து விருந்தினரைப் போற்றுவான். உள்ள மகிழ்ச்சியால் முகம் மலர்ந்து விளங்கும். அக மகிழ்ச்சியும், முக மலர்ச்சியும் அமைந்தவன் வீட்டில் ஒரு பொலிவு நிறையும். இல்லத்தில் செவ்வையான வளமும் நிலேக்கும். இந்தச் செவ்வையான வளத்தை நம் முன்னவர் ஒரு பெண் உருவாக்கிச் செய்யவள் என்ற பெயரால் குறித்தனர். ஆகையால் ***முகம் மலர்ந்து தனக்குக் கிடைத்த நல்ல விருந்தினரை ஏற்றுப் போற்றுகின்றவனது இல்லத்தில் செய்யவள் அகம் மகிழ்ந்து தங்குவாள்.* அதற்கு,

* வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை,
பருவந்து பாழ்படுதல் இன்று.

** அகனமர்ந்து செய்யாள் உறையும், முகனமர்ந்து
நல்விருந் தோம்புவான் இல்.

கிடைக்கும் விருந்தினரும் நல்ல விருந்தினராக அமைய வேண்டும்.'

கண்ணன்: கண்ணம்மா, தந்தை நல்ல விருந்தினர் என்று குறித்ததைக் கவனித்தாயா? விருந்துச் சோறு கிடைக்கிறது என்று நாள்தோறும் வருவோரெல்லாம் நல்ல விருந்தினர் ஆவாரோ? உண்டுவிட்டு உண்ட வீட்டில் உளவும் அறிந்து செல்வர். காலம் வாய்க்கும்போது உளவு கொண்டு களவும் செய்வர். அவரால் இல்லறம் செய்யவனையா பெறும்?

'மகனே, அத்தகையவர்கள் விருந்தினரே அல்லர். விருந்து என்பது புதிதாய் வருபவரைக் குறிப்பதாகும். நல்ல உள்ளம் படைத்தவர்; அன்பும் அறிவும் சான்றவர்; விருந்திடுவோனுடைய உள்ளத்தையும் குடும்ப வளத்தையும் அறிபவர்; அந்தக் குடும்பம் வளத்தோடு வாழவேண்டும் என்னும் ஆர்வம் கொள்பவர் ஆகிய இத்தகையோரே நல்ல விருந்தினர். இத்தகையவர் நாளைக்கு எத்துணை பேர் வந்தாலென்ன? அவர்கள் எதிர்பாராது பலராக வர நேர்வதே ஒரு வாய்ப்பு. தம் இல்லத்தில் பல விருந்தினரை ஏற்றுப் போற்றி உண்ண வைத்து அந்தக் காட்சியை முன் நின்று காண்பதே ஒரு பேறு. அதன்பின் எஞ்சிய உணவு சிறிதேயானாலும் அஃதும் தாம் பெற்ற உள்ள நிறைவால் நிறைவாகச் சுவைக்கும்.

அத்தகைய நல்ல விருந்தினர் தாம் விருந்துண்ட இல்லத்தவர் அடையும் சிறு கேட்டையும் கண்டு கொண்டு இருக்கமாட்டார்; தோள் கொடுத்துத் தாங்குவர். விருந்திட்டவர் கேட்டை அடையும் காலம் வரை காத்துக்கொண்டு இருக்கமாட்டார். அவர் அறியாமலே

அவரது குடும்ப வளத்திற்கு உதவுவார். அத்தகையவர் பலராக அமைந்தால் உதவியின் பெருமையைக் கேட்கவோ வேண்டும்!

இவ்வகையில், விருந்திட்டவன் பெறும் வளத்தை அளவிடாமல் உயர்த்தியும் கூறலாம். *எதிர்பாராது பலராக வந்த விருந்தினரை உண்ணவைத்து, எஞ்சிய உணவை உண்ணுபவனுடைய விளை நிலத்துக்கு அவன் விதையும் இடவேண்டுமோ?—என்றார் வள்ளுவத் தந்தையார்.

கண்ணம்மா கண்ணனைப் பார்த்தாள். கண்ணன் அவள் உள்ளத்தை உணர்ந்தவன்போல் பேசினான்: கண்ணம்மா, எதிர்பாராது பல விருந்தினர் வந்தால் உன்னால் உடனே உணவு சமைத்துவிட முடியுமா?

அவள்: முடியுமே! நல்ல விருந்தினரைக் கண்ட மகிழ்ச்சியால் ஒரு நொடியில் முடியாதோ?

அவன்: ஒரு நொடி என்றால் உண்மையாகவே விரலோடு விரல் கூட்டி நொடிக்கும் ஒரு இமை நேரத்தில் சமைத்து விடுவாயோ?—என்று கூறி நகைத்தான்.

அவள்: ஏனனமா செய்கிறீர்கள்? விரைவில் முடியும் என்பதைத்தான் அவ்வாறு சொல்லுவதுண்டு. தந்தை அவர்கள் விருந்திடுபவர் நிலத்திற்கு விதையும் இடவேண்டுமோ — என்கிறார்களே. அதை, விதை இல்லாமலே பயிர் முளைத்துவிடும் என்று கருதினீர்கள்? விருந்து பெறும் பயனின் பெருமையை அவ்வாறு குறித்ததுபோல நான் விரைவை இவ்வாறு குறித்தேன்.

* வித்தும் இடல்வேண்டும் கொல்லோ, விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம்?

'மக்காள்! ஆம் விருந்தைப் போற்றுவதால் வரும் பெருமை அத்தகையதுதான். *வந்த விருந்தினரைப் போற்றி, வரும் விருந்தினரை எதிர்நோக்கி இருப்பவன் மேலவராலும் நல்ல விருந்தினனாக எதிர்நோக்கப்படுவான். விருந்தைப் போற்றுதல் அத்துணை மேம்பாடு சொல்லத் தக்கது.

துறவிகள் வேள்வி செய்து மேல்நிலை பெறுவார்கள் என்பர். இல்லறத்தாருக்கு விருந்தைப் போற்றுவதே வேள்வி. இந்த **விருந்தோம்பல் என்னும் வேள்வியால் பெறப்படும் பயன் இந்த அளவு உடையது என்று சொல்வதற்கு ஓர் அளவு இல்லை. அது விருந்தினரின் தகுதிக்குத் தக்க அளவை உடையது ஆகும்.

மக்காள், இந்த இல்லற வேள்வியில் இடம்பெறும் விருந்தினர் தகுதி வாய்ந்தவராக அமைய வேண்டும் என்பதை நல்விருந்து என்பதன் மூலம் கண்டோம். அத்தகையவர் விருந்திடுபவனுடைய வாழ்வின் வளத்தை விரும்புபவர் என்றும் கண்டோம். அஃதோடு அவனுடைய வாழ்வின் பொறுப்பிலும் பங்கு கொள்பவராக அமைந்து அவனது இல்லறத்திற்குக் காலத்தால் செய்யும் துணைவராய் நிற்பார். அதனால் அவர் இல்லறத்தானுக்கு நல்ல பற்றுக்கோடு ஆவர்.

## செல்வத்தில் வறுமை

இத்தகைய நல்ல பற்றுக்கோட்டைப் பெறாமல்—விருந்தை ஏற்றுப் போற்றாமல் சிலர் செல்வத்தின்

* செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு.

** இனைத்துணைத் தென்பதொன் றில்லை ; விருந்தின்
துணைத்துணை வேள்விப் பயன்.

மேலேயே கருத்தாக வாழ்வர். விருந்திடுவதால் செல்வம் குறையுமே என்று விருந்தைப் போற்றுமல் செல்வத்தைப் போற்றுவர். அத்தகையவருடைய வாழ்வில் இடையூறு நேரும்போது அதைச் செல்வம் மட்டும் போக்கிவிடுமா? நல்லவர் துணை இல்லாமல் எத்துணை துணை இருந்தால்தான் என்ன? *விருந்தை ஏற்றுப் போற்றி இல்லற வேள்வியை முனைந்து செய்யாதவர் செல்வத்தை விரும்பிக் காப்பர். ஆனல் இடையூறு நேர்ந்து அச்செல்வம் பயன்படாதபோது—'அந்தோ ஒரு பற்றுக்கோடும் அற்றவர் ஆனேமே' என்று ஓலமிடுவர்.'

"தந்தையே, அவர்கள் நிலை இரங்கத்தக்கது. செல்வத்தைப் பெற்றிருந்தும் வறுமையாளர் போலக் கலங்கலாமோ ?"

'ஆம், **செல்வ நிலையிலும் வறுமை உண்டு. இந்த வறுமை விருந்தினரை ஏற்றுப் போற்ருத மடமையால் வருவது. இது அறிவுடையவரிடம் அமையாது. அறிவற்றவரிடம்தான் உண்டு. மக்காள், நீங்கள் செல்வ நிலையிலும் செல்வர்களாகவே வாழ்க; உள்ளம் ஒத்து விருந்தினரை ஏற்றுப் போற்றி வாழ்க !

கண்ணம்மா : தந்தையே, அல்வாறே போற்றுவோம். நான் அறுசுவை உணவை அன்போடு குழைத்துப் படைப்பேன்.

கண்ணன் : நான் மகிழ்வோடு வரவேற்றுப் போற்றுவேன்.

* பரிந்தோம்பிப் பற்றற்றேம் என்பர், விருந்தோம்பி
வேள்வி தலைப்படா தார்.

** உடைமையுள் இன்மை விருந்தோம்பல் ஓம்பா
மடமை ; மடவார்கண் உண்டு.

**பார்த்தால் வாடும் மலர்**

'நன்று மக்காள்! மகிழ்வோடு வரவேற்பது இன்றி பமையாதது. விருந்தினருக்கு விருந்தின் சுவையை விட மகிழ்ச்சியான வரவேற்புதான் மகிழ்வைத் தரும். நீங்கள் அனிச்ச மலரைப்பற்றி அறிந்தவர்கள். அந்த மலர் மிக மென்மை உடையது. அதைவிட மென்மை உள்ளம் வாய்ந்தவர் விருந்தினர். *அனிச்ச மலர் மோந்த அளவிலே வாடிவிடுவது. அதுபோல், முகத்தில் மலர்ச்சியின்றி வேறுபட்டு நோக்கிய அளவிலே விருந்தினர் உள்ளம் வதங்கி விடுவர்.

விருந்தினர் அந்த அளவு மென்மையும், தன்மானமும் வாய்ந்த உள்ளத்தை உடையவர். ஆகவே, அகத்தோடு முகம் மலர்ந்து நீங்கள் விருந்தைப் போற்றி வாழ்க!'

"தந்தையே, அவ்வாறே போற்றுவோம் என்று உறுதி கூறுகின்றேன். இன்றைய நண்பகலில் எங்கள் இல்லத்தில் நாங்கள் இல்லாததால் விருந்தைப் பெறும் வாய்ப்பை இழந்தோமோ என்னவோ! இரவிலேனும் அந்த வாய்ப்பைப் பெறவேண்டும்" — என்றாள் கண்ணம்மா.

'செல்க மக்காள்'—என்றார் தந்தை.

கண்ணன்: நானே

வள்ளுவனார்: இனிய சொல் சொல்வேன்.

கண்ணம்மா: நாங்களும் இனிமை கொள்வோம்.

மூவரும் சிரித்து மகிழ்ந்தனர்.

* மோப்பக் குழையும் அனிச்சம்; முகம்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து.

# இனிய சொல் சொல்க!

அன்பு கலந்தது ;

வஞ்சம் இழந்தது.

“தந்தையே, நேற்று இரவு இரு விருந்தினரைப் போற்றும் பேறு பெற்றோம். விருந்தினர் இருவரும் அறிவு சான்றவர்கள் ; அறம் அறிந்தவர்கள். ஒருவர் முன்னர் அறிமுகம் ஆனவர் ; மற்றவர் புதியவர். அவர்களைப் போற்றிய மகிழ்ச்சியும், அவர்களோடு அளவளாவிப் பேசிய மகிழ்ச்சியும் எங்களைப் பூரிக்கச் செய்தன. அவர்கள் அன்புமிகப் பேசினர். இனிய சொல் சொல்லினர். நேற்று எங்களுக்கு இனிய நாள்.”

‘மகனே — மகளே, நீங்களும் இனியவர்களே. ஆனாலும், சொல்லியபடி செய்யாதவர்கள்.’

“தவறு இருந்தால் பொறுக்கவேண்டும் தந்தையே!”

‘இனிய சொல்லைக் கற்க வருவதாக நேற்றுச் சொல்லிச் சென்ற நீங்கள் இன்று கற்றுக்கொண்டே வந்துள்ளீர்களே! இது சொல்லியபடி செய்தது ஆகுமா?’ —என்று கூறிச் சிரித்தார் தந்தை. இருவரும் சிரிப்பில் கலந்தனர்.

"தந்தையே, கற்கவில்லை; கேட்டு வந்தோம். எதைக் கற்க வேண்டுமானாலும் அதற்கு இந்த இடம் அன்றி வேறு எந்த இடமும் தகுதி உடையது ஆகாதே!

'மக்களே, நீங்கள் இன்சொல்லைக் கற்க வேண்டியவர்களும் அல்லர். இயல்பாகவே இனியசொல் அமையப் பெற்றவர்கள். அன்பு கொண்டு இணைந்துள்ள உங்களிடம் இன்சொல் அமையாது போகுமோ? கண்ணா, நீ கண்ணம்மாவுக்கு இனிமையைத் தரும் சொல்லைச் சொல்பவன். கண்ணம்மா உனக்கு இனிமையைத் தரும் சொல்லைச் சொல்பவள். இவ்வாறு, கேட்பவருக்கு இனிமையைத் தரும் சொல்லே இன்சொல். இந்த இன்சொல்லைப்பற்றி நீங்கள் அறிய விரும்புகின்றவற்றைக் கேட்க!

கண்ணன்: தந்தையே, இன்சொல் எத்தகையது?

தந்தை: *இல்லறத்திற்கு உரிய செம்மையான பொருள்களை உணர்ந்தவர்களது வாயிலிருந்து வரும் சொற்கள் அன்பு கலந்தன. கலந்து வஞ்சம் அற்றனவாகும். அவையே இன்சொற்கள் ஆகும். இல்லறத்திற்கு உரிய செம்மையான பொருள் என்பது கணவனும் மனைவியும் உள்ளம் ஒத்துக் கைக்கொள்ள வேண்டிய நடைமுறைக் கருத்துக்கள். அக் கருத்துக்களைப் பொறுப்போடு வெளியிடல் வேண்டும்; கடைப்பிடிக்கவேண்டும். அவற்றிற்கு அன்பு வேண்டும்; வஞ்சம் கூடாது. ஆகவே அன்பு கலந்தும், வஞ்சம் இன்றியும் பேச அமைவது இன்சொல்.

---

* இன்சொலால், ஈரம் அளைஇப் படிறிலவாம்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்.

**ஈகையினும் சிறந்தது**

*கண்ணன் :* இன்சொல் எவ்வளவு நன்மையைக் கொண்டது தந்தையே ?

*தந்தை : *உள்ளம் விரும்பி ஈதல் சிறந்தது. அதை விட முகம் மலர்ந்து இனிய சொல்லைச் சொல்பவன் ஆதல் சிறந்தது,*

*கண்ணன் :* இன்சொல் ஈகையைவிடச் சிறந்தது ஆகின்றதே !

*தந்தை :* ஆம் ஈபவர் உள்ளம் உவந்து ஈதல் வேண்டும். பெறுபவரும் உள்ளம் மகிழ்ந்து பெறுதல் வேண்டு. கொடுப்பவர், உள்ளம் மட்டும் உவப்போடு கடும்சொற்களைச் சொல்லிக் கொடுப்பாராளுல் பெறுபவர் உள்ளம் மகிழுமோ ? அதனுல், இன்சொல் இல்லாத ஈகை தனக்கு உரிய சிறப்பை இழக்கும். ஆகையால், இன்சொல் ஈகையை விடச் சிறக்கும். அதனுல்தான், 'ஈகையால் மக்களைக் காக்கும் மன்னன் இன்சொல் லோடு ஈந்தால்தான் அவன் எண்ணப்படியே உலகம் அவனைப் பின்பற்றும்' என்று நான் மன்னர்க்குரிய அறிவுரையில் குறித்துள்ளேன். (குறள் 387) அஃதொடு இன்சொல்லைச் சொல்வதே ஒரு அறம்.

*கண்ணன் :* ஆம், முன்னர் அறத்தை விளக்கிய போது இன்னுத சொல் இன்றி இயங்குவது அறம் என்று தாங்கள் குறித்தது நினைவிற்கு வருகிறது.

* அகமனமர்ந் தீதலின் நன்றே, முகனமர்ந்
தின்சொல னுகப் பெறின்.

*தந்தை :* அங்குக் குறிப்பாக இன்சொல் என்று மட்டும் குறிக்கப்பட்டது. விரிவாகச் சொன்னால் *முகத்தால் விரும்பி இனிமையாகப் பார்த்து, உள்ளத்தோடு பொருந்திய இனிய சொல்லில் அமைந்ததே அறம் ஆகும்.

**வறுமையைப் போக்கும் ;**
**அழகினை ஆக்கும்.**

*கண்ணன் :* தந்தையே, இன்சொல் அறம் ஆவதால் அது நல்ல பயனைத் தரவேண்டுமே?

*தந்தை :* ஆம், **யாவரிடத்தும் இன்பத்தைப் பெருக்கும் இனிய சொல்லைச் சொல்பவர்க்குத் துன்பத்தைப் பெருக்கும் வறுமை இல்லாது போகும்.

*கண்ணன் :* ஆம், எல்லோரிடத்தும் இனிய சொல்லால் இன்பத்தைப் பெருக்குபவனிடம் வறுமை பெருகுமாறு விட்டுவைக்க மாட்டார்கள் உலகோர்.

*கண்ணம்மா :* வறுமை இல்லாது வாழ்தலே இல்லறத்தாருக்கு முதல் நன்மை. இன்சொல் அந்த முதல் நன்மையைத் தருவது ஆகிறது.

*கண்ணன் :* (கண்ணம்மாவைக் கடைக்கண்ணால் பார்த்தவாறே)—'வயிற்றுக்குச் சோறு மட்டும் இருந்தால் வாழ்வு நிறைந்துவிடுமா! உடலுக்கு அழகுதரும்

---

* முகத்தா னமர்ந்தினிது நோக்கி, அகத்தானும்
இன்சொல் லினதே அறம்.

** துன்புறூஉம் துவ்வாமை இல்லாகும், யார்மாட்டும்
இன்புறூஉம் இன்சொல் லவர்க்கு.

அணிகலன்களை இன்சொல் தருமா'—என்று பெண்கள் கேட்டாலும் கேட்பர்.

தந்தை. பெண்களுக்கு மட்டுமன்று; இன்சொல் ஆண்களுக்கும் அணியைத் தரும். அதற்கு, தன்னிடம் பணிவு காட்டுபவனிடத்தும் தான் பணிவு உடையவன் ஆகவேண்டும். அந்தப் *பணிவை உடையவனாய் இனிய சொல்லைச் சொல்பவனாக அமைதல் ஒருவனுக்கு உண்மை அணி ஆகும். உடலில் அணியும் பிற அணிகள் உண்மை அணிகள் ஆகா. மக்காள், அழகைத் தருவதுதானே அணி! இன்சொல் என்னும் அணியை அணிந்தவன் பல வகை அழகைப் பெற்றவன் ஆவான். உடல் அணிகள் பார்வைக்கு மட்டுமே அழகைத்தருவன. பணிவோடு நின்று இனிய சொல்லைச் சொல்லும்போது அவ்வாறு சொல்பவன் பார்வைக்கு அழகாகப்படுவான். இனிய சொல் காதால் கேட்பதற்கு அழகாகப்படும். அதனால் மகிழும் உள்ளத்தின் உணர்ச்சிக்கும் அழகாகப்படும். பின்னொரு கால் நினைத்துப் பார்க்கும் நினைப்பிற்கும் இன்சொல் அழகாகப்படும். இவ்வாறு பணிவொடு கூடிய இன்சொல் பலவகை அழகைப் பெறுவதால் நிலைத்த அழகைப் பெற்ற அணியாகும்.

கண்ணம்மா: (கண்ணனைப் பார்த்தவாறே) இன் சொல் பணிவோடு இணைந்து அமைவதால் பொன்னில் பதித்த வைர அணியாய் மிளிரும். ஆண்களும் அடகு வைக்க முடியாமல் அணியலாம்.

கண்ணம்மாவின் நயமுள்ள குறும்பு நிறைந்த பதிலைக் கண்டு தந்தையும் மகிழ்ந்தார். கண்ணன் என்ன

* பணிவுடையன் இன்சொலன் ஆதல், ஒருவற்
கணி; அல்ல மற்றுப் பிற.

செய்வான்? சமாளித்துக் கொள்ள வேறு ஒரு வினவை எழுப்ப முயன்முன்.

## இரட்டை இன்பம்

கண்ணன் : தந்தையே, இல்லறத்தாருக்கு வறுமை இன்மையையும், அணியையும் தரும் இன்சொல் இல்லறத்திற்கு எவ்வகைச் செழிப்பைத் தரும்?

தந்தை : இல்லறத்திற்குச் செழிப்பைத் தருவது அறச்செயல். *கேட்பவர்க்கு நன்மையைத் தரும் கருத்துக்களை ஆராய்ந்து இனிய சொற்களால் சொன்னுல் அறம் அல்லாதவை அழியும். அழிய அறம் வளரும். ஆராய்ந்து கூறப்படும் அரும் கருத்துக்கள் நன்மை பயப்பவை. அத்தகைய அரும் கருத்துக்களைக் கடும் சொற்களால் சொல்லலாமோ? சொன்னுல் ஏற்பவர் உண்டோ? இனிய சொல்லே விருப்பத்தோடு ஏற்க வைக்கும். விருப்போடு ஏற்கப்படும் அரும் கருத்துக்கள் தீமையான செயல்களைத் தூண்டா. தூண்டாதது மட்டுமன்று; முன்கொண்ட தீய செயல்களையும் தேய்க்கும். ஒன்று தேயத் தேய அதற்கு மாறுபாடான மற்ருென்று வளர்வதுதானே இயற்கை. அதுபோல, தீயவை தேயத்தேய அறம் வளரும். கணவனுக்கு மனைவியும், மனைவிக்குக் கணவனும், மற்றவர்க்கு இருவரும் இன்சொல் கூறி அறத்தை வளர்த்தால் இல்லறம் செழிப்பைப் பெறும்.

கண்ணன்: தந்தையே, இல்லறத்தின் அகப்பயனை அறிந்தோம். புறப்பயன் எந்த அளவை உடையது?

* அல்லவை தேய அறம்பெருகும், நல்லவை
நாடி இனிய சொலின்.

தந்தை : இல்லறத்தின் புறப்பயன் புகழ்பெறுதல். *கேட்பவர்க்கு நல்ல பயன்களைத் தந்து இனிமைத் தன்மையினின்றும் நீங்காத சொல் கேட்பவரது விருப்பத்தைத் தூண்டி நன்மையான உதவியைத் தரும். இனிய சொல் வறுமையின்மை, அழகு, அறப்பெருக்கம், கேட்பவரது விருப்பம், அவரது நன்மையான உதவி ஆகியவற்றைத் தருவதால் இல்லறத்தில் இன்பம் நிறையும். ஈதல்தான் புகழோடு வாழ்தல் ஆகும். ஈதலைவிட இனிய இன் சொல்லால் புகழ் கிட்டும். புகழோ, மாந்தர் மறைந்த பின்னரும் நிலைத்திருப்பது. உயிரோடு வையத்தில் வாழும் வாழ்வை இம்மை வாழ்வு என்றும் மறைந்த பின்னர் உலகோர் உள்ளத்தில் வாழும் வாழ்வை மறுமை வாழ்வு என்றும் கூறுவர். ஆகவே, **கேட்பவருக்குத் துன்பத்தைத் தருவதாகிய சிறுமையிலிருந்து நீங்கிய இனிய சொல் இம்மையில் நல்ல வாழ்வின் மூலமும், மறுமையில் புகழ் மூலமும் இன்பம் தருவதாகும்.

கண்ணன் : ஆகையால், இனிய சொல்லால் இம்மையில் நல்ல வாழ்வைக் கண்டு இன்பம் பெறலாம். மறுமையில் புகழ் கிட்டும் என்ற உறுதியால் இன்பம் கொள்ளலாம். இவ்வாறு இன்சொல் இரட்டை இன்பம் தருவதாகிறது.

## காய் கவரும் கள்வன்

கண்ணம்மா : இந்த அளவு பயன் இருந்தும் சிலர் கடுஞ்சொல்லைக் கணக்கின்றிச் சொல்வது ஏன் ?

---

* நயனீன்று நன்றி பயக்கும், பயனீன்று
பண்பில் தலைப்பிரியாச் சொல்.

** சிறுமையின் நீங்கிய இன்சொல், மறுமையும்
இம்மையும் இன்பம் தரும்.

தந்தை: அவர்களைப்பற்றி என்ன சொல்வது? பிறர் இனிய சொல் சொல்லும்போது கேட்பவருக்கு இன்பமாக இருக்கும். *பிறர் கூறும் இனியசொல் தனக்கு இன்பத்தைக் கொடுப்பதைக் கண்டு மகிழ்பவன் தான் மட்டும் பிறரிடம் கடுஞ்சொல்லை வழங்குவது ஏனோ! அவனைப் பற்றி என்ன கூறுவது? வேண்டுமானால் ஓர் உவமை கூறுவேன்:

சுவைமிக்க கனி ஒன்றை ஒருவன் தன் கையில் வைத்திருக்கிறான் என்று வைத்துக்கொள்ளுங்கள். அவன் அதை உண்ணும் உரிமை கொண்டவன். ஆனால் அவன் அதை உண்ணாமல் காயை உண்பானோ? அதிலும் மற்றவர்க்கு உரிய மரத்துக் காயை அவர் அறியாமல் பறித்து உண்பானா?

கண்ணன்: எந்த அறிவற்றவனும் உண்ண மாட்டான்.

தந்தை: கடுஞ் சொல்லைக் கூறுபவன் அவ்வாறு உண்பவன்தான். **இனிய சொற்கள் தன்னிடம் நிறைந்திருக்கவும் அவற்றைவிட்டுக் கடுஞ்சொற்களைக் கூறுதல், சுவைமிக்க கனி இருக்க அதைவிட்டுச் சுவையற்ற காயைக் கவர்ந்து உண்ணுவதைப் போன்றதாகும். கடுஞ் சொற்களைச் சொல்பவன் காயைக் கவர்ந்து உண்ணும் கள்வனே.

கண்ணம்மா: இன்சொல் கனிபோன்று சுவையுடையதே. கடுஞ்சொல்லும் காய் போன்றதே.

* இன்சொல் இனிதீன்றல் காண்பான்; எவன்கொலோ
வன்சொல் வழங்கு வது!

** இனிய உளவாக இன்னாத கூறல்,
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று.

தந்தை: நீங்கள் கனியைக் கொடுத்துக் கனியையே உண்பவர்களாக வாழ்க! மக்காள், இன்சொல்லைப்பற்றி அறியவேண்டிய வினாக்கள் மேலும் உண்டோ?

கண்ணன்: எல்லாம் உங்கள் விளக்கத்துள் அமைந்து விட்டன தந்தையே. எங்கள் நன்றியை ஏற்குமாறு வேண்டுகிறோம்.

தந்தை: மகனே, நன்றி கூறும் அளவிற்கு நான் ஒன்றும் செய்துவிடவில்லை. இருப்பினும் ஒருவர் செய்த நன்மையை மறவாதிருத்தல் நல்ல பண்பே. அந்தச் செய் நன்றி கொள்ளத்தக்கது; அறியத்தக்க ஒன்றும் ஆகும். நாளை அதை அறிக!

# செய்நன்றி அறிக !

நிலம் சிறியது ; கடலும் சிறியது.

'மக்காள், நீங்கள் அன்பு நிறைந்தவர்கள். விருந்தைப் போற்றும் உள்ளம் கொண்டவர்கள். இனிய சொல் சொல்பவர்கள். உங்களது இல்லற வாழ்விற்குப் பிற நல்லவர்களும் முன்வந்து உதவுவர். அந்த உதவிகளும் ஏற்கத்தக்கனவே. உங்களிடம் முன்னர் ஒரு உதவியையும் பெருதவர்கள் தாமே முன் வந்து உதவுவர். அது செய்யாமல் செய்யும் உதவி. உங்களது துன்பகாலம் அறிந்து அப்போது முன்வந்து உதவுவர். அது காலத்தால் செய்யும் உதவி. உங்களிடமிருந்து எவ்வகைப் பயனையும் எதிர் பாராமல் உதவுவர். அது பயன் தூக்காது செய்யும் உதவி. இவ்வுதவிகள் யாவும் பெருமதிப்பிற்கு உரியவை.

இவ்வுதவிகளால் அவர்கள் உதவும் பொருள்கள் மிக எளியனவாக இருக்கலாம். ஆனல் தாமே முன் வந்து உதவும் அவர்களது உள்ளம் மிகச் சிறந்தது. ஆகவே இவ்வுதவிகளுக்குக் கைம்மாருக எப்பொருளையும் கொடுத்து ஈடு செய்ய முடியாது. * தான் முன்னர்

* செய்யாமல் செய்த உதவிக்கு, வையகமும்
வானகமும் ஆற்றல் அரிது.

ஒரு உதவியும் செய்யாமல் இருக்கவும் தாமே முன்வந்து உதவும் உதவிக்குக் கைம்மாருக நிலத்தில் உள்ள பொருள் களையும் வானத்தில் உள்ளவற்றையும் கொடுத்தாலும் ஈடு கட்ட முடியாது. பொருளுக்குப் பொருள் என்ற வகை யில் வையகப் பொருளும் வானப் பொருளும் மிகுதியா கப் படலாம். ஆனல் உதவியவர் கொண்ட உள்ளத் திற்கு ஈடாகுமோ ?

அஃதேபோல் *இடையூறு நேர்ந்த காலத்தில் பிறர் முன்வந்து செய்த உதவி அளவில் சிறியதாக இருப்பினும் அது நிலவுலகத்தினும் பெரிது என்று மதிக்கத்தக்கது. நில உலகம் மிகப் பெரியதுதான். உதவப்பட்ட பொருள் மிகச் சிறியதாயினும் இடையூற்றை நீக்கிய தன்றே ! இடையூற்றுக் காலத்தில் அந்தச் சிறு பொருள் கிடைக்காதிருந்தால் அழிவு நேர்ந்தாலும் நேர்ந்திருக்கும். அழிந்த பிறகு பெரிய நிலவுலகமே கிடைத்துத்தான் என்ன பயன் ? ஆகவே காலத்தால் கிடைத்த பொருளுக்கு முன் நிலவுலகமும் சிறியதாகி விடும்.

இதுபோன்றே **கைம்மாருகிய பயனை நோக்கா தவர் செய்த உதவியின் நன்மையை ஆராய்ந்து பார்த்தால் அது தரும் நன்மை, கடல் தரும் நன்மையினும் பெரியது ஆகும். கடல் பெரியதுதான். மழையையும், முத்து பவளம் முதலிய பொருள்களையும், உப்பையும் எல்லை யில்லாமல் தருவதுதான். ஆயினும், மீண்டும் ஆற்று

* காலத்தி ஞல்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது.

** பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின்
நன்மை கடலின் பெரிது.

நீரையும், ஊற்று நீரையும், மழை நீரையும் பெற்றுக் கொள்வது. இவ்வாறு கைம்மாறு பெறும் கடல் கைம் மாறு நோக்காத உதவிக்குமுன் பெரியதாகுமா ?

### தினையரிசி பனம்பழம் ஆகும்

இவ்வாறு, உதவிகள் மதிக்கப்படுதல் உதவி பெறு பவரின் தன்மையையும் பொறுத்தது ஆகும். உதவி பெறுபவர் உதவியின் பயனை ஆராய்ந்து பார்த்துத் தெரி பவர் ஆகவேண்டும். அவ்வாறு பயன் தெரிபவர்தான் உதவியைத் தக்கபடி மதிப்பிடுவர். ***பிறர் தினை என்னும் தானியத்தின் அளவு சிறிய உதவியைச் செய்ய லாம். செய்தாலும் அது தந்த பயனை ஆராய்ந்து அறிந் தவர் அதனைப் பனம்பழம் அளவு பெரிதாக மதிப்பிடுவர்.** தினை மிகச் சிறியதுதான். எவ்வளவு தினைகளின் அளவு சேர்த்தால் ஒரு பனம்பழத்தின் அளவு அமை யும் ? அத்துணை மடங்கு எல்லையில்லாத பெரியதாகப் பயன் தெரிபவரால் மதிக்கப்படும்.

மக்களே, பிறர் செய்த உதவிக்கு மாற்று உதவியா கப் பொருள்களை உதவ நேரலாம். அவ்வுதவியும் பயன் தெரிந்தவரின் தன்மையைப் பொறுத்தே அமைவ தாம். அஃதன்றி, ****கைம்மாறாகச் செய்யப்படும் உதவி பெற்றுக் கொண்ட உதவியின் அளவை உடையது அன்று. உதவியைப் பெற்றுக்கொண்டவரது பெருந்தன்மையின்**

* தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்தெரி வார்.

** உதவி வரைத்தன் றுதவி ; உதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து.

அளவை உடையதாகும். 'இந்த அளவு செய்தார் அதே அளவு செய்வோம்'—என்பவர் செய்நன்றியின் பயனை அறியாதவர்கள் தானே மகனே?'

''ஆம் தந்தையே. அதோடு, உதவி பெறவும் தகுதி அற்றவர்கள் ஆவார்கள்.''

கண்ணம்மா : பொருளை மட்டும் அளவிட்டுப் பார்ப்பவர், உதவி செய்தவரை மறந்தவர்களும் ஆவார்கள்.

**மறக்கலாகாது ; ஆனல்,**
**உடனே மறக்கவேண்டும்.**

'நன்று சொன்னாய் மகளே! உதவி செய்தவரை மறவாதிருத்தல்தான் செய்நன்றி அறிதலின் முத்திரையாகும். உதவியின் பயன் தெரிந்தவர் அவ்வாறு மறவார். *தம்மிடம் அடைந்த துன்பத்தை உதவியால் போக்கியவரது நட்பைத் தாம்மட்டுமல்ல தமது ஏழேழு பரம்பரையினரும் நினைவில் கொள்ளுமாறு செய்வர்.

ஆதலால், மக்காள், நீங்களும் **துன்ப காலத்தில் உங்களுக்கு வலிமையாக நின்று உதவியவரது நட்பைக் கைவிடாது கொள்வீர்களாக! அத்தகைய குற்றமற்ற உள்ளத்தை உடையவரது உறவை மறவாது கொள்வீர்களாக!'

கண்ணன் : தந்தையே, நாங்கள் அந்த முத்திரை பெற்று வாழ்வோம். உதவி செய்தவரது பெயரும், உதவியும் எங்கள் குடும்பத்தில் என்றும் நிலவுமாறு

* எழுமை எழுபிறப்பும் உள்ளுவர், தம்கண்
விழுமம் துடைத்தவர் நட்பு.

** மறவற்க மாசற்ருர் கேண்மை ; துறவற்க
துன்பத்துள் துப்பாயார் நட்பு !

செய்வோம். அதனால், எங்கள் பரம்பரையினரும் நினைவில் கொள்ளும் வகை செய்யவேண்டியவர்கள் அல்லவா ! ஆகையால், மறதிக்கு இடம் தரமாட்டோம்.

' நன்று மகனே, ஆனால் மறதிக்கு இடம் தரவேண்டியதும் உண்டு. அந்த மறதியிலும் நன்மை உண்டு. உதவி செய்தவரே பின்னர் அவரையறியாமல் தீமையைத் தந்துவிடலாம். அந்தத் தீமையை நினைவில் கொள்ளாது மறத்தல் வேண்டும். *ஒருவர் செய்த உதவியை மறப்பது நல்லது அன்று. ஆனால், அவர் தமக்குச் செய்த தீமையைச் செய்யப்பட்ட அந்த நேரத்திலேயே மறந்துவிடுவது நல்லது ஆகும்.

அவ்வாறன்றி, தீமையை நினைவில் கொள்வதால் அவர் செய்த நன்மையை மறந்தவர்களாகச் செய்நன்றி மறந்தவர்கள் ஆவீர்கள். அது கருதித்தான் உடனே மறத்தல் வேண்டும் என்றேன். அவ்வாறு உடனே மறக்க வழியும் உண்டு. மிகக் கொடிய தீமையானாலும் மறக்க வழி உண்டு. **முன்னர் தமக்கு நல்ல உதவி செய்தவர் பின்னர் கொல்வது போன்ற துன்பத்தைச் செய்தாலும், அவர் முன்னர் செய்த உதவி ஒன்றை மனதில் நினைக்க வேண்டும். அவ்வாறு நினைத்த அளவில் அவர் செய்த துன்பம் மறைந்து போகும். உள்ளத்தின் தன்மையே ஒன்றை நினைக்க மற்றொன்று மறைவதாகும். ஆதலால் நன்மையை நினைத்தால் தீமை மறையும்.'

கண்ணன் : ஆம் தந்தையே, நன்மையை நினைக்காவிடில் தீமையின் நினைவு மேலோங்கும். அதனால் நன்

* நன்றி மறப்பது நன்றன்று ; நன்றல்ல
தன்றே மறப்பது நன்று.

** கொன்றன்ன இன்னா செயினும், அவர்செய்த
ஒன்றுநன் றுள்ளக் கெடும்.

மையை அறவே மறந்து நன்றி மறந்தவர் ஆக நேரிடும்.

செய்நன்றிக் கொலை

'ஆம், மக்காள்! எது எவ்வாறு ஆயினும் செய்நன்றியை மறத்தல் மட்டும் கூடவே கூடாது. ஏனெனில் *எந்த நன்மையைக் கெடுத்தவனுக்கும் ஒரு வகையில் பிழைத்து வாழ வழி உண்டு. ஆனால், ஒருவர் செய்த உதவியை மறப்பவனுக்கு எவ்வகையிலும் மீட்பே இல்லை. செய்நன்றி மறத்தல் இழிவிலும் இழிவு. செய்நன்றி அறிந்தவரே முழு மக்கள். நீங்கள் முழு மக்களாய் வாழ்க! நாளை வருக!

* எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் ; உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு.

# நடுவு நிலை கொள்க !

## செல்வத்தை உடனே கைவிடுக!

"தந்தையே, நேற்றிரவு முதல் ஒரு எண்ணம் என் உள்ளத்தைக் கவ்விக்கொண்டுள்ளது. என் தாத்தா தனக்கு உதவி செய்த ஒரு நண்பரைப் பற்றி அடிக்கடி பெருமையாகக் கூறுவார். அவரைக் காணும்போதெல்லாம் அன்போடு போற்றுவார். அவரால் மேலும் பேருதவியைப் பெற இருப்பதாகக் கூறுவார். என் தாத்தா, ஊர் நாட்டாண்மைக்காரர் ஆகையால் அந்த நண்பரைப் பற்றிய வழக்கு ஒன்று தாத்தாவிடம் வந்தது. உதவிய நண்பர்க்குத் தாத்தா நன்றிகாட்ட நல்ல வாய்ப்புக் கிடைத்துள்ளதுஎன்று நாங்கள் பேசிக்கொண்டோம். ஆனால் அவர் சொன்ன வழக்கு முடிவோ அந்த நண்பர்க்குத் தோல்வியாக அமைந்தது. தாத்தா இவ்வாறு செய்நன்றியைக் கொல்லலாமா என்ற எண்ணம் இன்னும் என்னைவிட்டு நீங்கவில்லை"—என்றான் கண்ணன்.

'மகனே, தாத்தா நண்பர் பக்கம் தவறு கண்டிருப்பார்.'

"இயல்பாகவே அவர் பக்கம் சிறு தவறுதான் நேர்ந்திருந்தது. இருந்தாலும் செய்நன்றி என்ன ஆவது?"

'நன்று கேட்டாய் மகனே! அதைத்தான் இன்று உங்களுக்கு விளக்க எண்ணினேன். ஒருவரது தகுதியைக் கருதி அன்றோ அவரை மேல் நிலையில் வைப்பர். அத்தகையவர் செய்நன்றி காரணமாகத் தன் தகுதியை மறந்து நடுவுநிலை இல்லாமல் செயல் புரியலாமோ? அப்படிச் செய்வதால் மற்றவர்க்குத் தீமை செய்தவர் ஆவார் அன்றோ! ஆகவே, செய்நன்றி காட்ட வேண்டியது தனது தனி வாழ்க்கையைப் பொறுத்தது. பிறர் வாழ்க்கையை ஈடுபடுத்திக் காட்டப்படுவது அன்று. தன் தகுதியைக் காப்பாற்ற வேண்டுமானால் நண்பர் ஆனாலும் செய்நன்றிக்காகத் தவறி அவர்க்கு நல்லதென்று செய்யக்கூடாது. பகைவர் ஆனாலும் தீமை செய்யக்கூடாது. நட்பும் பகையும் அற்றவர் நொதுமலர் எனப்படுவார். அவர்க்கும் மாறானவை செய்யக்கூடாது. மூவரிடத்தும் ஒரே நிலையைக் கைக்கொள்ள வேண்டும். இவ்வாறு, **நட்பு, பகை, நொதுமல் ஆகிய மூன்று பகுதி தோறும் நடுவு நிலைமை என்னும் ஒழுங்கு முறையில் அமைந்து ஒழுகப் பெற்றால்தான் அவர் பெற்ற தகுதி என்ற ஒன்று சிறந்தது ஆகும்.* இல்லையேல் தகுதி என்பது எதற்கு?

உன் தாத்தா தகுதி வாய்ந்தவர். அவர் தன் தகுதியை இழந்து தன் நண்பர்க்கு நன்றி காட்டவோ, அவர் தரும் பேருதவியைப் பெறவோ விரும்பவில்லை. அவ்வாறு பெறும் உதவி பெருகி வளரும் செல்வம் ஆனாலும் நல்லதன்று. பிறர் துன்பப்படப் பழியோடு வரும் செல்வம் அது.'

---

* தகுதி எனவொன்று நன்றே, பகுதியால்
பாற்பட் டொழுகப் பெறின்.

"ஆம், தந்தையே, பழி அஞ்சி ஈட்டப்படும் செல்வத்தால்தான் அவர் வழியினர் எந்நாளும் எஞ்சுதல் இல்லை என்று முன்னரும் குறித்தீர்கள்."

'ஆம், அவ்வாறு பழியின்றி வாழ்வதுதான் செப்புமான வாழ்வு. செப்பம் தான் நடுவு நிலைமை. *நடுவு நிலைமையைக் கொண்டுள்ளவன் பெற்றுள்ள செல்வம் அழிவு இல்லாமல் அவனது மக்கள் முதலிய வழியினருக்கும் பாதுகாவல் ஆகும். இதை அறிந்த உன் தாத்தா பழி அஞ்சி நடுவு நிலைமை உடையவராய் உனக்கும் பாதுகாவலான செல்வத்தை வைத்துள்ளார்.

ஆகையால், நீயும் **எவ்வளவுதான் நன்மையைத் தருவதாக இருந்தாலும் நடுவு நிலைமையிலிருந்து நீங்கிப் பெறக்கூடிய செல்வத்தை அது கிடைக்க நேர்ந்த அந்த நேரத்திலேயே அதையும், அதுபற்றிய நினைவையும் கைவிட வேண்டும்.

## முன் அறிவிப்பு

'அவ்வாறன்றிச் செல்வத்து அவாவால் நடுவு நிலைமை தவறினால் பழி நேரும். அத்தகைய செல்வத்தை உடனே நீக்கி நடுவுநிலைமையைக் கைக்கொண்டால் புகழ்கிட்டும். மாந்தருடைய வாழ்விலும், இறந்த பின்னரும் அவர் பெயரோடு நிலைத்திருப்பது செல்வம் அன்று; அவர் பெற்ற பழியோ அல்லது புகழோதான்

* செப்பம் உடையவன் ஆக்கம், சிதைவின்றி
எச்சத்திற் கேமாப் புடைத்து.

** நன்றே தரினும் நடுவிகந்தாம் ஆக்கத்தை
அன்றே ஒழிய விடல்.

நிலைத்திருப்பது ஆகும். ஆகையால், இறந்தாலும் அவர் *தகுதி வாய்ந்தவர் தகுதி அற்றவர் என்பது அவ ரவருக்குப்பின் எஞ்சி நிற்கும் அவரவரது புகழாலும் பழி யாலும் பிறரால் அறியப்படும். இவர் தகுதி வாய்ந்தவர் என்ற பெயர் அன்றோ சிறந்தது மகனே ?'

'' ஆம். தந்தையே ! செல்வத்தால் வாழ்நாளில் பெறும் சிறு பயனைக் கருதிப் பிற்காலத் தகுதியைக் கெடுத்துக் கொள்ளக்கூடாது என்பதை உணர்கிறேன்."

மக்கள் வாழ்வில் தாழ்வும் நேரும் ; வாழ்வும் சிறக் கும். இவை இயல்பு. தாழ்வைக் கண்டு அஞ்சி நடு நிலைமையிலிருந்து உள்ளம் திரிந்து தகுதியை இழத்தல் அழகன்று. அதுபோல வாழ்வை விரும்பி உள்ளம் திரி தலும் அழகன்று. **வாழ்வில் கேடும், பெருக்கமும் இல் லாதவை அல்ல. அவைகளுக்கு அஞ்சியோ, அவாக் கொண்டோ நெஞ்சத்தில் நடுவுநிலைமையிலிருந்து தவறாது வாழ்தல்தான் சான்றோர்க்கு அழகாகும். என்ன கண் ணம்மா, மிக இரக்கப்படுவது போலப் பார்க்கிறாய்.'

'' தந்தையே, இவர் உள்ளத்தைக் கவ்விக் கொண் டிருந்த எண்ணம் அலறிப் புடைத்து ஓடுவதை நினைத் தேன். அஃதோடு சான்றோர் தம் வாழ்வில் தாழ்வாகிய வறுமையையும் அழகாகக் கொள்கின்றனரே என்பதை யும் எண்ணி வியந்தேன்.''

'ஆம் மகளே, பழியொடு அமையும் செல்வத்தை விடச் சான்றோர் பெற்ற மிகுந்த வறுமையே சிறந்தது

* தக்கார் தகவிலர் என்ப தவரவர்
எச்சத்தால் காணப் படும்.

** கேடும் பெருக்கமும் இல்லல்ல ; நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க் கணி.

என்று யான் மற்றொரு இடத்தில் கூறியது உண்டு. ஏனெனில் *நடுவுநிலைமையில் அமைந்து அறவழியில் நிலைத்து நின்றவன் பெற்ற வறுமைத் தாழ்வை உலகத்தார் ஒரு கேடாகக் கொள்ளமாட்டார்கள்.'

" தந்தையே, ஆக நடுவுநிலைமை தவருதவர் பெற்றுள்ள செல்வமும் சிறப்படைகிறது ; வறுமையும் சிறப்படைகிறது. செல்வமோ அவரது வழியினருக்கும் பாதுகாவல் ஆகிறது. வறுமையோ உலகோரால் தாழ்வாக மதிக்கப்படுவதில்லை. எவ்வகையில் நோக்கினும் நடுவு நிலைமை தவருதவர் சிறந்தவர் ஆகிருர் " என்ருள் கண்ணம்மா.

'மகளே, அஃதேபோல் நடுவுநிலைமையிலிருந்து நீங்கியவரும் கெடுவர். கெடுவர் என்பதற்கு அந்த நடுவுநிலைமை தவறுவதற்கு முன்பே அறிவிப்பும் கிடைக்கும். அந்த அறிவிப்பையும் அஃதே தரும். ஒருவன் **தன் நெஞ்சம் நடுவுநிலைமையிலிருந்தும் நீங்கி ஒருதலைப் பக்கமான செயலை எண்ண முனைந்தால் அந்த முனைப்பை 'யான் உறுதியாகக் கெடுவேன்' என்னும் முன்னறிவிப்பாக அறிதல் வேண்டும். அறிவுடையவர் இந்த முன்னறிவிப்பை அறிந்து எச்சரிக்கை பெற்றுச் சான்ருேர் ஆவர். அவர்க்கு நடுவுநிலைமையும் அணியாக அமைந்து அழகைத் தரும். மக்களே, நீங்களும் அந்த அழகைப் பெறுதல் வேண்டும்.'

" தந்தையே, நடுவுநிலையை அறிந்து செயல் புரிவோம்."

---

* கெடுவாக வையா துலகம், நடுவாக
நன்றிக்கண் தங்கியான் தாழ்வு.

** 'கெடுவல்யான்' என்ப தறிக, தன் நெஞ்சம்
நடுவொரீஇ அல்ல செயின்.

**மனிதத் துலாக்கோல்**

'ஆம். நடுவுநிலையை அறிதல் வேண்டும். அறிக! மகனே, பொருள்களைச் சமமாக அளவிடும் கருவியை அறிவாயே!'

"ஆம். தந்தையே! "தராசு" என்று வழங்கப் படும் துலாக்கோல் அந்தக் கருவி."

'அது நடுவுநிலைக்குச் சரியான எடுத்துக்காட்டா கும். துலாக்கோல் முதலில் தான் சமநிலையில் நிற்கும். நடுவுநிலை பெற்ற சான்றோரும் தம் உள்ளத்தை முதலில் சமநிலையில் நிறுத்துவர். அந்தக் கோல் தன் இரு பக்கத்தே பொருத்தப்பட்டிருக்கும் தட்டுக்களைத் தாங்கு வது. தகுதி உடையவரும் இரு பகுதியினரின் பொறுப் பையும் ஏற்பவர். ஒரு தட்டில் பொன்னையும், மறு தட் டில் அதே நிறையுள்ள மண்ணையும் வைத்தால் பொன் சிறந்ததாயிற்றே என்று அதன் பக்கம் கோல் சாயாது. அல்லது மண்ணாயிற்றே என்று இரக்கப்பட்டு அதன் பக்கம் சாயாது. படிக்கல் தன் இனத்தைச் சேர்ந்த இரும்பு ஆயிற்றே என்று அதன் பக்கம் சாயுமோ? நடுவுநிலைமை என்னும் செப்பம் உடையவரும் உயர்ந் தவர், தாழ்ந்தவர் என்று அன்பாலோ, அருளாலோ அவரவருக்குப் பரிந்துபோக மாட்டார். தனக்கு வேண் டிய உறவினர் என்று கருதார். *தான் முன்னர் சமமாக அமைந்து பின்னர் தன்பால் வைக்கப்படும் பொருள்களின் அளவை உள்ளபடி வரையறுத்துக்காட்டுவது துலாக்கோல். அதுபோல் நடுவுநிலைமையில் அமைந்து ஒரு பக்கம் உள்ளம் கோணுமை சான்றோர்க்கு அழகாகும். இது உள்ளத்தில்

* சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல், அமைந்தொருபால்
கோடாமை சான்றோர்க் கணி.

கோட்டம் இல்லாமை. அடுத்துச் சொல்லில் கோட்டம் இல்லாமையை அறிக!

*உள்ளத்தில் கோட்டம் இல்லாமையை ஒருவன் உறுதியாகப் பெற்றால் நடுவுநிலைமை சொல்லிலும் கோட்டம் இல்லாதது ஆகும். அடுத்துச் செயலிலும் கோட்டம் இல்லாமையைப் பெற வேண்டும்.

செயலுக்குச் சான்றாக வணிகச் செயலைக் கூறினால், **பிறர் பொருளையும் தம் பொருள் போலக் கருத்தொடு போற்றி வாணிகம் செய்தால் அதுதான் வாணிகம் செய்பவருக்கு நடுவுநிலைமை தவறாத வாணிகம் ஆகும்.

இவ்வாறு உள்ளத்தாலும், சொல்லாலும், செயலாலும் கோணாமல் வாழ்வதுதான் நடுவுநிலைமை வாழ்வு. அதற்குத் தன்முனைப்புக் கூடாது. தன்னடக்கம் வேண்டும். அந்த அடக்கமும் இதனைப் போலவே உள்ளத்தாலும், சொல்லாலும், செயலாலும் அடங்குவதாகும். அவ்வாறு அடக்கத்தைக் கொண்டால் சான்றோர் ஆகலாம். நீங்களும் ஆகத்தக்கவர்களே. அன்பும் பண்பும் பெற்ற நீங்கள் நடுவுநிலைமையையும் உணர்ந்துள்ளீர்கள். நாளை அடக்கத்தைப்பற்றி அறிய வருக! வாழ்க!'

* சொற்கோட்ட மில்லது செப்பம், ஒருதலையா
உள்கோட்டம் இன்மை பெறின்.

** வாணிகம் செய்வார்க்கு வாணிகம், பேணிப்
பிறவும் தமபோல் செயின்.

## அடக்கம் கொள்க!

### உயிருக்கு அமைந்த உயர் செல்வம்

'மகனே, எதை இடுப்பிலே அவ்வாறு இறுகச் செருகுகிருய் ?'

''பெட்டித் திறவுகோல் தந்தையே !''

'திறவுகோலைக் காப்பாற்றும் பொறுப்பை நோக்கி ஞல் பெட்டியில் வைத்துக் காக்கும் பொருளின் அளவு பெரிதாகப் படுகிறதே !'

''தந்தையே, எங்கள் குடும்பத்தின் பொன்னும் பொருளுமாகிய ஓரளவு செல்வந்தான் உண்டு.''

'செல்வத்தைக் காக்க வேண்டியதுதான். பொருள் இல்லையேல் இல்லற வாழ்வே நடவாதுதான். ஆயினும் அஃதோடு காக்கப்பட வேண்டியவையும் உண்டு. ஏனெனில் பொன்னும் பொருளுமாகிய செல்வத்தைக் கொண்டு உடலை அழகு படுத்தலாம்; உறுதிப்படுத்தி வளப்படுத்தலாம். வளம் பெற்ற உடல் மூலம் ஓரளவு உயிரையும் காக்கலாம். ஆனல், உடலைப் போலவே உயிரை வளப்படுத்தும் செல்வங்களும் உண்டு. அவற்றுள் ஒன்று அடக்கம் உடைமை என்னும் செல்வம்.

*அடக்கத்தைச் சிறந்த செல்வமாகக் கொண்டு காக்க வேண்டும். ஏனெனில் மக்கள் உயிருக்கு வளமான செல்வம் அதைவிடச் சிறந்தது இல்லை.'

"தந்தையே நாங்கள் அடங்கி ஒழுகுவோம்."

'ஆம், நீங்கள் அடங்கி ஒழுகுபவர்களே. ஆயினும், அடக்கத்தின் சிறப்பையும் அது தரும் பயனையும் அறிய வேண்டுமன்றோ? அறிந்தால்தான் அடக்கம் சிறக்கும்.'

"அறிய ஆர்வமுடன் உள்ளோம், தந்தையே!"

'மக்காள், மக்கள் ஆறு அறிவு உடையவர்கள். மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் பொறிகளும் தனித்தனியே ஒவ்வோர் அறிவை உடையன. அவை முறையே உணர்ச்சி, சுவை, ஒளி, மணம், ஒலி ஆகிய வற்றை அறிவன ஆகும். ஒவ்வொரு பொறியும் தனக்குத் தனக்கு உரிய அவாவின்மேல் பாய்ந்து நிற்கும் தன்மையை உடையது. அவ்வாறு பாயவிடுவதால் தீமையே நேரும். கண்டபடி பாயாமல் இழுத்து நெறிப் படுத்தி, அடக்கிச் சீர் செய்வது மக்களினம் பெற்றுள்ள ஆறுவது அறிவாகிய மனவுணர்வு. **ஐவகை அறிவின் தன்மைகளையும் தன் ஆறுவது அறிவால் அறிய வேண்டும். அறிந்து நல்வழியில் அவற்றை அடக்குதலைப் பெறுதல் வேண்டும். பெற்றால், அறிவின் செறிவாகிய அடக்கம் வாழ்வில் சீரைத் தரும்.

* காக்க பொருளா அடக்கத்தை; ஆக்கம்
அதனினூஉங் கில்லை உயிர்க்கு.

** செறிவறிந்து சீர்மை பயக்கும், அறிவறிந்
தாற்றின் அடங்கப் பெறின்.

### ஆமை அறிந்த அறிவு

'மக்காள், ஆமையைப் பார்த்திருப்பீர்களே! அது உறுதியான ஓட்டை உடையது. நான்கு கால்களையும் தலையையும் வேண்டும்போது மட்டும் வெளியே நீட்டிப் பயன் கொள்ளும். பிற நேரங்களில் உள்ளே அடக்கிக் கொள்ளும். மேலே உறுதியான ஓடு இருக்கிறதே என்று எப்பொழுதும் வெளியே நீட்டிக்கொண்டே இருப்பதில்லை. தனக்கு இடையூறு நேரும் என்பதை அறிந்து ஓர் ஓட்டுக்குள் ஐந்தையும் அடக்கிக் கொள்ளும். அடக்கினுல்தான் அது பெற்றுள்ள ஓட்டின் வலிமை அதற்குப் பாதுகாவலாக அமையும். அந்த *ஆமைபோல் ஒருவன் தன் ஐந்து பொறிகளின் அவாவையும் மனஉணர்வு என்னும் ஒருமைக்குள் அடக்கிக் கொள்ளும் வல்லமையைப் பெறவேண்டும். பெற்ருல் அந்த வன்மை ஒரு வகையில் மட்டுமன்று, ஏழு வகையிலும் அவனுக்குப் பாதுகாவலாக அமையும். அந்தப் பாதுகாவலால் இடையூறு நீங்கப்பெற்று வாழ்வின் உயர்ச்சியைப் பெறலாம்.

### மலையினும் உயர்ந்தது

'மக்காள், வாழ்வின் உயர்ச்சி என்ருல் எத்துணை உயர்வென்று கருதுகிறீர்கள்? மகனே, தோற்றத்தில் மிக உயர்ச்சியாக எதைச் சொல்வாய்?'

"மிக உயர்ச்சியாகத் தோற்றமளிப்பது மலை தந்தையே!"

* ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்,
எழுமையும் ஏமாப் புடைத்து.

'ஆம், மலையே. *தம் அறிவுப் பண்புகளின் நிலையில் இருந்து வேறுபடாமல் அடங்கினவனது உயர்ச்சி, மலையின் உயர்ச்சியை விட மிகப் பெரிது.

மக்கள் பலவகைகளில் உயர்ச்சி உடையவர்களாகலாம். கல்வியால், அறிவால், அன்பால், பண்பால், வீரத்தால், கொடையால், புகழால் உயர்ச்சி பெற்றிருக்கலாம். இவற்றைவிடச் செல்வத்தால் பெற்ற உயர்ச்சியையே பெரிதாக மதிப்பவர் உண்டு. இவ்வுயர்ச்சிகள் எல்லாம் அடக்கம் இல்லாது போனால் தம் போக்குக்குச் செயற்பட்டுத் தாழ்ச்சி அடையும். ஆகவே, **தாம் பெற்ற உயர்ச்சிகளால் பெருமிதம் கொள்ளாமல் அடங்கிப் பணிவு கொள்ளுதல் எல்லார்க்கும் நன்மையாகும். அவர்களுள்ளும் செல்வம் படைத்தோர்க்கு அது மேலுமொரு செல்வத் தகுதியாகும். மக்காள், அச்செல்வத் தகுதியை நீங்களும் பெறுக!'

## ஆறிய புண்ணும் ஆறாத வடுவும்

"தத்தாய்! ஐவகை அறிவையும் அறிந்து அடங்குவது உள்ளத்தால் அடங்கும் அடக்கம். ஆமை போல் அடங்குவது மெய்யடக்கம். சொல்லால் அடங்கும் நாவடக்கம் எத்தகையது?"

'அடக்கங்களில் நா அடக்கமே மிக முக்கியமானது; நாவைச் சுவையிலும், பேச்சிலும் அடக்க வேண்டும்.

---

* நிலையில் திரியா தடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது.

** எல்லார்க்கும் நன்றாம் பணிதல்; அவருள்ளும்
செல்வர்க்கே செல்வம் தகைத்து.

பேச்சடக்கமே நாவடக்கம் எனலாம். நாவை அடக்கா மல் பேசினுல் எத்துணை தீமைகள் நேரும் என்பதை அறிந்தால் நாவடக்கத்தின் இன்றியமையாமை வெளிப் படும். ஆகவே, நாவடக்கத்தை எதிர்மறை வழியாக அறிவதே நலம். ஐவகைப் புலன்களையும் ஆருவது அறி வால் அடக்க வேண்டுமென்று கண்டோம். அவ்வாறு *காக்கப்பட வேண்டிய எல்லாவற்றையும் காக்க வலிமை அற்றவரானுலும் நாவையேனும் தீய சொல் சொல்லாமல் காக்கவேண்டும். காவாது போனுல் சொற்குற்றத்திற்கு ஆளாகித் துன்பம் அடைவர். நாவை அடக்காது அதன் போக்கில் பேசவிட்டால் நல்ல சொற்களையும் சொல் லும்; தீய சொற்களையும் சொல்லும். நல்ல சொற்கள் நன்மையை விளைவிக்க, தீய சொற்கள் தீமைகளையே பெருக்கும். எத்துணை நல்ல சொற்களைச் சொல்லி எத் துணை நன்மைகளை உண்டாக்கினுல்தான் என்ன? **தீய சொல்லால் அதுதரும் தீய பொருளினது பயன் உண்டாகுமானுல் பிற ஒன்றுனும் நன்மை உண்டாகாமல் போகும். தீச்சொல் அத்துணைக் கொடியது.

மக்காள், தீய பயனைத் தரும் சொல்லைத் தீச்சொல் என்ற சொல்லால் குறித்தோம். அச்சொல்லை நோக் குக! தீச்சொல் என்பதைத் தீ போன்ற சொல் என்றும் கூறலாம். ஆம், தீய சொல் தீ போன்றதே. ஆனுல் ***தீயினுல் சுட்ட புண் உள்ளே ஆறிப் போகும். வெளியே

* யாகாவா ராயினும் நாகாக்க! காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.

** ஒன்ருனும் தீச்சொல் பொருட்பயன் உண்டாயின்
நன்ருகா தாகி விடும்.

*** தீயினுல் சுட்டபுண் உள்ளாறும்; ஆருதே
நாவினுல் சுட்ட வடு.

தான் வடு இருக்கும். ஆனால், நாவினால் சுட்ட புண் ஆறாது. உள்ளத்தில் வடுவாய்க் கிடக்கும். உடலைச் சுடும் தீ உடல் வடுவைத் தரும். உள்ளத்தைச் சுட்ட சொல் உள்ளத்தில் வடுவைத் தரும். உள்ளத்து வடு ஆறுமோ மகனே?'

''ஆறாது தந்தையே.''

## அறம் நுழைந்து பார்க்கும்

'ஆறாத புண்ணைத் தருவது மட்டுமோ! தீச் சொல் சினத்தால் பிறப்பது. அதை வளரவிட்டால் சினத்தையும் அடக்க முடியாது. சினத்தை அடக்காது போனால் பிற எந்தப் பொறியின் அடக்கத்தையும் பெறவே முடியாது. ஆகவே, நாவடக்கம் சினத்தையே நீக்கும். *சினத்தையும் நீக்கி உள்ளத்தைக் காத்து, கற்கவேண்டியவற்றைக் கற்று அடங்குதலாகிய வல்லமை பெறவேண்டும். அவ்வாறு பெற்றவனை அறம் தானே சென்று அடைய முன் வரும். அவன் அறியாமல் நுழைந்து சென்று அவனை அடைவதற்குரிய பக்குவமான காலத்தைப் பார்க்கும். பக்குவமான காலம் வாய்த்தவுடன் நுழைந்து அவனிடம் அறம் தங்கி நிற்கும். அறம் ஒருவனிடம் தங்கினால் அவன் பெறாத சிறப்பும் உண்டோ?

முடிவாகச் சொன்னால் **அடக்கம் உடைமை சான்றோர் குழுவில் கொண்டு செலுத்தும், அடங்காமை கொடிய இருள் போன்ற விளக்கமில்லாத வாழ்வில் தள்ளும்.

* கதங்காத்துக் கற்றடங்கல் ஆற்றுவான் செவ்வி
அறம்பார்க்கும், ஆற்றின் நுழைந்து.

** அடக்கம் அமரருள் உய்க்கும்; அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும்.

'மக்காள், நீங்கள் சான்றோர் குழுவில் புகப் புறப்பட்டுள்ளவர்கள். அக்குழுவில் அமைக !'

" தந்தையே, சான்றோராம் தங்கள் சார்பை அடைந்த நாங்கள் சார்பு அறிந்து ஒழுகுவோம். எந்நாளும் அந்தச் சார்பை விடோம். எந்நாளும் விடாத நாங்கள் நானை விடுவோமா ?"

# ஒழுக்கம் உடையவராகுக !

## உயிரினும் மேம்பட்டது

“தந்தையே, இவர் இன்று பெட்டியின் திறவு கோலை வீட்டிலேயே வைத்துவிட்டு வந்துள்ளார்.”— என்று கூறி நகைத்தாள் கண்ணம்மா.

‘மகனே, நேற்று கூறியதற்காகவா அவ்வாறு செய்தாய்? அவ்வாருனால் நாளை உயிரையே வீட்டில் வைத்து விட்டு வரப்போகிருய் !’

“உயிரையா, தந்தையே !”—என்ருன் கண்ணன்.

‘ஆம், இன்று ஒழுக்கத்தைப் பற்றிப் பேசலாம் என்று கருதினேன். *ஒழுக்கம் பெரும் சிறப்பைத் தருவது. தருவதால் அது உயிரைவிடச் சிறப்பாகப் பேணிக் காக்கப்படவேண்டியது ஆகும். இவ்வாறு நான் கூறுவதைக் கேட்டு நாளை உயிரை வீட்டில் வைத்துவிட்டு வர முனைவாயோ என்று கருதினேன்.’

“தந்தையே, இவர் அவ்வாறு செய்யாமல் நான் நினைவு படுத்துவேன்.”

* ஒழுக்கம் விழுப்பம் தரலான், ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்.

"இவள் கூட வரும்போது உயிரை எவ்வாறு வைக்க முடியும்; எங்கே வைக்க முடியும் தந்தையே?"—என்று சிரித்தான் கண்ணன். அவளும் மகிழ்ந்தாள். தந்தையும் அவர்கள் உயிரும் உடலுமாய் ஒன்றியிருப்பதை நினைந்து வாழ்த்தினர்.

'மக்காள், உயிரைவிட ஒழுக்கம் எவ்வாறு மேம் பட்டதாகும் என்ற எண்ணம் எழலாம். உயிர் உட லோடு நின்று வாழ்நாளைத் தருவது. அந்த வாழ் நாளில் இன்பமும், துன்பமும் நேரலாம். ஒழுக்கமோ இன்பத்தையே விளைவிக்கும். தன்னைக் கொண்டவன் இறந்த பின்னரும் புகழை நிலைநாட்டும். ஒழுக்கத்தால் உயிரும் உடலும் வளம் பெறும். அதனால் வாழ்நாளும் நீட்டிக்கும். உயிரினால் இவையெல்லாம் இயலாதன. ஆகையால் உயிரைவிட ஒழுக்கத்தையே போற்ற வேண்டும் என்றேன்.

மக்காள், உலகில் போற்றிக் காக்கப்படும் அறங்கள் பல. *பலவற்றையும் ஆராய்ந்து அவற்றுள் ஒன்றைச் சிறந்ததாகப் போற்றி அதனை மேலும் ஆராய்ந்து தேர்ந் தெடுத்தாலும் இறுதியில் உங்கட்குத் துணையாக அமை வது ஒழுக்கமே யாகும். ஆகையால் அந்த ஒழுக்கத்தைக் குறைவில்லாமல் போற்றிக் காப்பீராக! வருந்தியும் காப்பீராக!'

## ஒழுக்கமும் இழுக்கமும்

"தந்தையே, ஒழுக்கம் என்பது எதைக் குறிக்கும்?"

* பரிந்தோம்பிக் காக்க ஒழுக்கம் ; தெரிந்தோம்பித் தேரினும் அஃதே துணை.

'மகனே, ஒழுக்கம் என்பது பல பண்புகளின் தொகுப்பு. இதுவரை நீங்கள் அறிந்தவைகளும் அறிய இருப்பவைகளும் ஆகிய பண்புகள் ஒன்றுகூடிய நடைமுறையே ஒழுக்கம் எனப்படும். அப்பண்புகளுக்கு ஏற்ப அமையும் நடைமுறை நல்லொழுக்கம் எனப்படும். அப்பண்புகளிலிருந்து மாறிய நடைமுறை தீயொழுக்கம் ஆகும். ஆயினும் ஒழுக்கம் என்ருல் நல்லொழுக்கம் என்ற நினேவே எழ வேண்டும். அத்தகைய *ஒழுக்கம் உடைமைதான் குடிப்பெருமையாகும். ஒழுக்கத்திலிருந்து தவறுந் தன்மை மக்கள் பிறப்பைவிட இழிந்த விலங்குப் பிறப்பின் தன்மை ஆகிவிடும்.

"தந்தையே, தீயொழுக்க வாழ்க்கை கொண்ட மக்கள் விலங்குகள்!" ஆகிருர்கள்.

'ஆம் மகனே, எத்தகையவனும் எவ்வளவு சிறப்புடையதை இழந்தாலும் மீண்டும் பெறலாம். எடுத்துக்காட்டாக ஏடு புரட்டும் **பார்ப்பான் தான் ஓதிய மறையை மறக்கக் கூடாது. மறந்தாலும் பின்பு ஒருகால் ஓதி அறிந்து கொள்ளலாம். ஆனுல், அவன் ஒழுக்கத்தில் குன்றிருல் அவனது குடிப்பிறப்பு கெடும். மீண்டும் அதனேப் பெறமுடியாது. குடிப் பெருமையைப் பெற முடியாதது மட்டும் அன்று. வாழ்வில் உயர்வும் கிட்டாது. நீங்கள் பின்னர் பொருமை எனப்படும் அழுக்காற்றைப் பற்றி அறிவீர்கள். அந்த ***அழுக்காற்றை

---

* ஒழுக்கம் உடைமை குடிமை ; இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும்.

** மறப்பினும் ஓத்துக் கொளலாகும் ; பார்ப்பான்
பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்.

*** அழுக்கா றுடையான்கண் ஆக்கம்போன் றில்லை,
ஒழுக்க மிலான்கண் உயர்வு.

உடையவனிடம் செல்வ மேம்பாடு அமைவதில்லை. அது போல ஒழுக்கம் இல்லாதவனிடம் வாழ்வின் உயர்வு இல்லை.

ஒழுக்கத்திற்கு மாறான இழுக்கம் என்பது அன்பு, இன்சொல் முதலிய நல்ல பண்புகளிலிருந்து இழுக்குவதும் பிறர் மனைவியை விரும்புதல், பொறாமை முதலிய தீயவற்றில் ஒழுகுவதும் ஆகும். நல்ல பண்புகளைக் கடைப்பிடிக்க மனவளம் வேண்டும். தீய பண்புகளை நீக்க மன உரம் வேண்டும். * மன உரம் உடையவர் ஒழுக்கம் தவறுவதால் துன்பம் உண்டாவதை அறிந்து ஒழுக்கத்திலிருந்து சிறிதும் தவறமாட்டார். மக்காள், நீங்களும் இந்த மன வலிமையைப் பெறுக!

## இன்ப விதை

'மகனே, வாழ்வில் மாந்தரால் விரும்பப்படும் குறிக்கோளையும் வெறுக்கப்படும் பயன்களையும் அறிவாயா?'

"தந்தையே, மக்கள் வாழ்வில் இன்பத்தையும் மேம்பாட்டையும் விரும்புவர். துன்பத்தையும் பழியையும் வெறுப்பர்."

'ஆம். அவை அவர் கொள்ளும் ஒழுக்கத்தைப் பொறுத்தே அமையும். ** ஒழுக்கத்தால் வாழ்வில் மேம்பாட்டை அடைவர். ஒழுக்கம் தவறுவதால் அடையக் கூடாத பழியை அடைவர்.

* ஒழுக்கத்தின் ஒல்கார் உரவோர், இழுக்கத்தின்
ஏதம் படுபாக் கறிந்து.

** ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை; இழுக்கத்தின்
எய்துவர் எய்தாப் பழி.

எய்துவர் எய்தாப் பழி.

அஃதொடு *நல்ல ஒழுக்கந்தான் இன்பத்திற்கு விதையாகும். தீய ஒழுக்கம் எக்காலத்தும் துன்பத்தையே தரும். மக்காள், நீங்கள் கொள்ளவேண்டியதைக் கொள்க!'

'' தந்தையே, எக்காலத்தும் நிறைந்த துன்பத்தைத் தருவதையா கொள்வோம்! நல்லொழுக்கத்தை விதை என்கிறீர்கள். விதை முளைத்துத் தளிர்த்துப் பூத்துக் காய்த்துக் கனிந்து சுவையைத் தருவது. ஒழுக்கமும் அதேபோல் படிப்படியாகப் பயனைத் தருவது என்பதை அறிந்தோம்; அதனையே கொள்வோம்.''

## பலகற்றும் அறிவில்லாதவர்

'மக்காள், ஒழுக்கத்தைப் பெறின் வளமும் உரமும் பெறுவது மட்டுமன்று. சொல்லிலும் செயலிலும் சிறக்கலாம். **தீய சொற்களைத் தவறியும் தம் வாயால் சொல்லும் குற்றங்கள் ஒழுக்கத்தைப் பெற்றவரிடம் பொருந்தா. தீய சொற்களால் வரும் குற்றங்களை முன்னரே அறிந்துள்ளீர்கள். அக்குற்றங்கள் ஒழுக்கத்தால் இல்லாமற் போகும்.

'மக்காள், இத்தகைய ஒழுக்கத்தை உயர்ந்த சான்றோரோடு நெருங்கிப் பழகுவதால் வளர்த்துக் கொள்ளலாம். அஃதன்றிக் கணக்கற்ற நூற்களைக் கற்பதால் மட்டும் ஒழுக்க வளர்ச்சி அமையாது. அவ்வாறு கற்ற

* நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம்; தீயொழுக்கம்
என்றும் இடும்பை தரும்.

** ஒழுக்கம் உடையவர்க் கொல்லாவே, தீய
வழுக்கியும் வாயால் சொலல்.

வர்கள் தாம் பல நூற்களைக் கற்றுள்ளதால் தாம் அறிவில் சிறந்தவர்கள் எனத் தங்களுக்குள் எண்ணிக் கொள்ளலாம். ஆனால் அவர்கள் பெற்ற கல்வியறிவு வாழ்வில் தரவேண்டிய மேம்பாட்டைத்தராத அறிவாக அமைவதால் பயன் என்ன? இதை அறியாதவர்கள் அறிவுடையவர்கள் ஆவார்களா? ஆகையால், * உலகத்து மேன் மக்களோடு பொருந்திப் பழகி ஒழுகும் ஒழுக்கத்தைக் கற்காதவர் பல நூற்களைக் கற்றாலும் அறிவில்லாதவரே ஆவர்.

மக்காள், நான் உங்களுக்கு உலகத்தோடு பொருந்த ஒழுகுதலையும் கற்குமாறு அறிமுகப்படுத்துகிறேன். அந்தக் கல்வியையும் பெற்று அறிவில் சிறந்தவர்களாகுக! மகனே, நாளை உயிரை வைத்து விட்டு வருவயோ ?'—என்று முடித்தார் வள்ளுவர்.

* உலகத்தோ டொட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார்.

# தன் மனையாளையே விரும்புக!

## பேதையில் பேதை

"கண்ணு, எங்கே கண்ணம்மாவைக் காணோம்?"

"தந்தையே, நேற்றுச் செல்லும்போது நாளை உயிரை வைத்துவிட்டு வருவாயோ என்று நயத்தோடு கேட்டீர்கள். அதிலும் ஒரு குறிப்பு இருக்கலாம் என்று உணர்ந்தேன். கண்ணம்மாவும் அவ்வாறே கருதித் தங்கிவிட்டாள்."

'நன்று, மகனே! நீங்கள் இருவரும் நுண்ணறிவு படைத்தவர்களே. இன்று பேச வேண்டியதைக் கண்ணம்மா இல்லாது பேசுவதே பொருந்துவதும் பண்பும் ஆகும்.

மகனே, உலகத்துக் கருத்துக்களை எல்லாம் தொகுத்து வகை செய்தால் அவை மூன்றிற்குள் அடங்கும். தனி மனிதனது வாழ்வாகிய இல்லற துறவறங்களைப் பற்றிய அறக்கருத்துக்கள் ஒன்று. மக்களோடு கூடி வாழும்போது அறியவேண்டிய பொருட் கருத்துக்கள் இரண்டு. ஆணும் பெண்ணும் இணையும் இன்பக் கருத்துக்கள் மூன்று. அறம் பொருள் இன்பம் என்னும்

இவை மூன்றையும் ஒவ்வொருவனும் ஒவ்வொருத்தியும் அறிதல் வேண்டும். ஒன்றை அறிந்து மற்றவற்றை அறியாது விடுவதும் இரண்டை அறிந்து மற்றதை அறியாதுவிடுவதும் நன்றன்று. அதனால் தெளிவானவாழ்வை அடையமுடியாதென்றே கூறலாம். ஆண் பெண் இணையும் இன்பக் கருத்துக்களை மட்டும் ஒருவன் அறிந்து மற்ற அறம், பொருள்களை அறியாமலோ, அவசியமென்று கருதாமலோ விடுப்பானானால் அவன் ஒழுக்கங்களையெல்லாம் பெற்றவனாதல் முடியாது. அவன் பெண்ணின்பமேவாழ்வு என்று குறிக்கொண்டு வரையறை இல்லாமல் ஒழுகுவான். பெண்ணெண்ணமே மேலோங்கி ஒழுக்கத்தைப் பெரிதாகக் கருதான். தன் மனைவியோடு அமையாது பிறனுக்குரிய பெண்ணையும் கொள்ள முனைவான். இவ்வாறு *பிறனுக்கு உரியவளாகிய பெண்ணை விரும்பி ஒழுகுவது அறியாமையாகும். அந்த அறியாமை உலகத்தில் அறத்தையும் பொருளையும் அறிந்தவர்களிடம் இல்லையாகும். அறமும் பொருளும் அறிந்தோர், ஒழுக்கத்தையும் உலகியலையும் அறிந்து சான்றோர் ஆவர்.

பிறர் மனைவியை விரும்புபவர் பேதையரே ஆவர். அவ்வாறு **பிறன் மனைவியை விரும்பி அவனது இல்லத்துப் புற வாயிலில் நின்றவரைப் போன்ற பேதையார், அறத்தை விடுத்துச் செயல் புரிவதிலே நிலைத்துப் போன தீயவர் கூட்டத்திலும் இல்லை. இப்பேதையார் தன்னை நம்பியவர் இல்லத்திலேயே கள்ளம் புரிபவர் ஆவர். பிறர் இவரை ஒழுக்கம் வாய்ந்தவர் என்று நம்பி அவ

* பிறன்பொருளாள் பெட்டொழுகும் பேதைமை, ஞாலத்து
அறம்பொருள் கண்டார்கண் இல்.

** அறன்கடை நின்றாருள் எல்லாம், பிறன்கடை
நின்றாரின் பேதையார் இல்.

ருடன் அளவளாவிப் பழகுவர். தம் இல்லத்திலும் வேறுபாடு கருதாது பழக விடுவர். இவர் அவருக்கு வஞ்சம் செய்ய முற்படுவார். இவ்வாறு உள்ளத்தில் கள்ளம் கொண்டு பழகுவோரை என்னவென்று சொல்வது ?

**நடைப்பிணம்**

அதிலும் *தம்மைப்பற்றி எவ்வித ஐயமும் கொள்ளாமல் தெளிந்தவர் இல்லத்தில் அவர் மனைவியை விரும்புதலாகிய தீமையைச் செய்து ஒழுகுபவர், உறுதியாகச் செத்தவரேயன்றி உயிரோடுள்ளவர் அல்லர் மகனே.'

"ஆம், தந்தையே, உள்ளத்தில் கள்ளம் கொண்டு நேர்மை உள்ளவர்போல் நடிப்பவரை உயிரோட்டம் உள்ளவர் என்று கூறுவதைவிட நடைப்பிணம் என்பதே தகும்."

'அதுமட்டுமோ ; கல்வி, செல்வம், தலைமை, வீரம், கொடை முதலியவற்றில் **எந்த அளவு பெருமையை உடையவராயினும் பிறர் மனைவியை விரும்புவது தீமை என்பதைத் தினையளவும் எண்ணாது பிறனுடைய இல்லத்தில் அவன் மனைவியை விரும்பிப் புகுதல் என்னவாகும் மகனே ?'

"எல்லாப் பெருமையும் கெட, பழிதான் ஆகும்."

* விளிந்தாரின் வேறல்லர் மன்ற, தெளிந்தாரில்
தீமை புரிந்தொழுகு வார்.

** எனைத்துணையர் ஆயினும் என்னும், தினைத்துணையும்
தேரான் பிறனில் புகல்.

'மகனே, பழி ஆகும் என்றுமட்டும் கூறிவிட முடியாது. பிறன் இவனை நம்பி ஐயமின்றி அளவளாவிப் பழகுவான். இல்லிலும் பழக விடுவான். அதைக் கொண்டு இவன் இத் தீய செயலை எளிதாகக் கொள்கிருன். இவ்வாறு *எளிது எனப் பிறரது மனைவியின் மேல் முறை மீறுபவன் எக்காலமும் அழியாமல் நிலைத்து நிற்கும் பழியை அடைவான்.

பழிமட்டுமோ! இவன் முறை மீறி எல்லையின்றி ஒழுகுவதால் தன்மேல் ஐயம் கொள்ளாத பிறனும் நாளடைவில் ஐயம் கொள்வான். ஐயம் உறுதிப்பட்டால் பகை கொள்வான். ஆகவே பகையைப் பெறுவான். செய்கின்ற செயல் மிக இழிவானமையால் அது பாவமாகும். பகைத்தவனுக்கு அஞ்சி ஒழுக வேண்டும். ஆகவே, **பிறன் மனைவியிடம் முறைமீறிச் செல்பவனிடம் பகை, பாவம், அச்சம், பழி என்னும் நான்கும் நீங்காமல் நிலைக்கும்.'

''தந்தையே, அத்தகைய இழி செயலை அன்புக்குரிய மனைவி அறிந்தால் என்ன நிலை பெறுவாள்? அவளையும் வஞ்சித்தவனாக இல்வாழ்க்கையையும் கெடுத்துக் கொண்டவன் ஆக நேரும்.''

'மகனே, உனக்குத் தோன்றியது போன்ற நல்ல எண்ணம் அறத்தோடு பொருந்தி இல்வாழ்க்கை நடத்துபவனிடம்தான் தோன்றும். ஆகையால், ***பிறனுக்கு

* எளிதென இல்லிறப்பான் எய்துமெஞ் ஞான்றும்
விளியாது நிற்கும் பழி.

** பகைபாவம் அச்சம் பழியென நான்கும்
இகவாவாம் இல்லிறப்பான் கண்.

*** அறனியலான் இல்வாழ்வான் என்பான் பிறனியலாள்
பெண்மை நயவா தவன்.

*உரிமையானவரின் பெண்மையை உள்ளத்தாலும் விரும்பாதவனே அற இயல்போடு பொருந்தி இல்லறத்தில் வாழ்பவன் என்று சிறப்பிக்கப்படுவான்.*

**பேராண்மையும்**

**பல நன்மையும்**

இல்லறத்தான் ஆண். அவன் ஆண்மையை உடையவன். அவன் பிறருக்குரிய பெண்மையைக் களவாக விரும்புதல் ஆண்மைக்கு அழகன்று. போர், போட்டி முதலியவற்றில் வெற்றி கொள்ளத் தளராது முனைந்து செயல்படுவது ஆண்மை. பெண்மை கருதி உள்ளம் தளராமல் கட்டுப்படுத்தும் மன வலிமையும் ஆண்மையே. முன்னதோ உடலால் பிறரை வெல்வது, பின்னதோ உள்ளத்தால் தன்னைத்தானே வெல்வது. ஆகையால் இது பெரிய ஆண்மை.

**பிறனுடைய மனைவியைக் காம எண்ணத்தோடு நோக்காத பேராண்மை சான்றோர்க்கு அறம் ஒன்று மட்டுமன்று ; நிறைந்த ஒழுக்கமும் ஆகும்.*

மேலும் பின்வருமாறு உறுதிப்படக் கூறலாம் : ***அஞ்சத்தக்க பெரும் கடல் சூழ்ந்த உலகத்தில் பல நன்மைகளையும் அடைவதற்கு உரியவர் யார் என்றால் பிறருக்கு உரிமை பூண்டவளது தோளைத் தழுவாதவரே ஆவர்.'*

* பிறன்மனை நோக்காத பேராண்மை, சான்றோர்க்
கறன்ஒன்றோ ; ஆன்ற ஒழுக்கு !

** நலக்குரியார் யாரெனின், நாமநீர் வைப்பின்
பிறர்க்குரியாள் தோள்தோயா தார்,

"தந்தையே, அறத்தொடு வாழ்பவன் என்னும் சிறப்பு, பேராண்மை, நிறைந்த ஒழுக்கம், பல நன்மைகளுக்கும் உரிமை ஆகியவற்றையும் பிறன் இல்லாளை விரும்பாமை தருவதாகிறது."

'இவைமட்டுமல்ல மகனே! *ஒருவன் அறநெறி கொள்ளாதவனாகத் தீயவைகளையே செய்தாலும் பிறனுக்கு உரிய பெண்ணின் பெண்மையை விரும்பாமையே சிறந்தது ஆகும்.'

"தந்தையே, இல்வாழ்வில் இது ஒரு பெரும் தீங்கேயாகும். இதைப்பற்றி நீங்கள் விளக்க, நான் ஏற்றுக் கொண்டிருந்த போதெல்லாம் என் உள்ளம் கண்ணம்மாவையே சுற்றிக் கொண்டிருந்தது."

'அதுதான் நன்று மகனே. உள்ளத்தால் சுற்றியது போதும். இல்லம் சென்று உடலாலும் சுற்றுக!'– என்றார் தந்தை.

---

* அறன்வரையான் அல்ல செயினும், பிறன்வரையாள் பெண்மை நயவாமை நன்று.

# பொறுமை கொள்க!

'மகனே, இன்று ஏன் உன் முகத்தில் அமைதியில்லை.'

கண்ணம்மா பேசினுள் : ''தந்தையே, இன்று காலை இவரை ஒருவர் இழிவாகப் பேசியதோடு அடாத செயலையும் செய்துவிட்டார். அதனுல், அவருக்குத் தக்க அறிவு தரவேண்டும் என்று இவர் அமைதி இல்லாமல் இருக்கிருர். இங்கு வருவதாலாவது அமைதி பெறுவார் என்ற எண்ணத்துடன் நானும் ஒன்றும் சொல்லாமல் வந்தேன்.''

' மகனே, அவ்வாறு செய்தவர் யார் ?'

"தந்தையே, அவர் எங்கள் குடும்ப உறவினர். எங்கள் பாதுகாப்பிலேயே பல ஆண்டுகளாக இருந்து வருகிருர். எங்கள் விளை நிலங்களின் பொறுப்பை மேற்கொண்டு கவனித்து வருபவர். அவர் செய்யும் தவறுகளை அடிக்கடி நான் சுட்டிக்காட்டி வந்ததால் என்மேல் அவர் பொல்லாங்கு கொண்டு இழிவாகப் பேசுவதும், மதிக்காமல் நடப்பதுமாக உள்ளார்."

' இன்று என்ன நடந்தது மகனே ?'

''எங்கள் வீட்டுக் கொல்லையில் ஒரு கிணறு தோண்டுகிரேம். அது என் முயற்சி என்பதால் அவ

ருக்குப் பிடிக்கவில்லை. தோண்டி எடுக்கும் மண்ணை அப்புறப்படுத்தாமல் அங்கேயே போட்டு வந்தார். அதை வற்புறுத்தினேன். அதற்காக இழிவான சொற்களை வீசியதோடு அந்த மண்ணை எடுத்து மேலே வீசி விட்டார்.''

''அதனால் இவர் அமைதி இழந்திருக்கிறார் தந்தையே.''

'மகளே, அமைதி இழந்ததற்குக் காரணம் பொறுமை இல்லாததுதான். மகனே, கிணறு தோண்டியும் அதனால் அறிய வேண்டியதை அறியாது போய்விட்டாயே! நிலத்தை மண்வெட்டியும் பாறையும் கொண்டு, வெட்டியும் குத்தியும் அன்றோ கிணற்றைத் தோண்டியிருப்பாய். தோண்டப்படுகின்ற நிலத்தில் நின்று கொண்டே அன்றோ அந்த நிலத்தைத் தோண்டியிருப்பாய். 'என்னைத் தோண்டுகிறாயே' என்று அந்த நிலம் உன்னைக் கீழே தள்ளியதுண்டோ மகனே? பொறுமையை அது எப்படிப் புகட்டுகிறது பார். *தன்னைத் தோண்டுகின்றவரையும் தாங்குவது நிலத்தின் பண்பு. அதுபோலத் தம்மை இகழ்வாரையும் பொறுத்துக்கொள்வதுதான் மக்களின் தலையான பண்பு. தன்னால் தாங்கப்படுகிறவன் தன்னையே தோண்டுவதையும் அன்றோ நிலம் பொறுத்துக் கொள்கிறது! பொறுத்துக் கொண்டு அவர் விரும்பும் நீரையன்றோ சுரந்து உதவுகிறது! உன்னால் தாங்கப்படுபவர் ஆனாலும் அவர்மேல் பொறுமையிழக்கலாமா? நிலம் பொறுத்துக் கொள்வது மட்டுமன்றி அவருக்கு உதவியும் அன்றோ செய்கிறது? நீயும் அவ்வாறு உதவ வேண்டியவன் அன்றோ! பொறுமை கொள்க மகனே!

* அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை.

" தந்தையே என் தவற்றை உணர்கிறேன். ஆயி னும், அவர் எல்லை மீறி இகழ்ச்சியாகப் பேசவும், செயல் புரியவும் தொடங்கி விட்டார்."

'மகனே, தோண்டும் கிணற்றை அதிகமாகத் தோண்டத் தோண்ட அதிக நீரை, அதிலும் சுவை யுள்ள நீரைத் தந்ததோ; அன்றி உன்னைத் தள்ளி உள்ளே இழுத்துக் கொண்டதோ? பொறுமையின் மேம்பாட்டை அன்றோ நிலம் காட்டும்! மகனே, உன் உறவினர் நன்மை அல்லாததைத்தான் செய்துள்ளார். ஆனாலும் நன்றல்லது......'

கண்ணன்: 'அன்றே மறப்பது நன்று.'

'ஆம், *பிறர் செய்த எல்லை மீறிய தீமையைப் பொறுத்துக் கொள்ளுதல் நன்று. அந்தத் தீமையை மறந்து விடுதல் பொறுத்தலைவிடச் சிறந்தது ஆகும்.'

" தந்தையே, அவ்வாறே மறந்துவிட்டேன். இன்று நான் இங்கு வராது போனால் நான் என் வலிமையை அந்த எளியவர் மீது வீசியிருப்பேன்."

## வலிமையில் சிறந்த வலிமை

'மகனே, உன் வலிமையா? அது எங்கே இருக் கிறது? நீதான் பொறுமையின்மையால் அடிபட்டுக் கலங்கிப்போய், வலிமையிழந்து, அமைதி இழந்தன்றோ வந்தாய்! பொறுமை கொண்டு கலங்காமல் இருந் திருப்பாயானால் உன் வலிமை உரம் பெற்றிருக்கும். மகனே, நீ என்பால் அறிந்த கருத்துக்களிலிருந்து ஒரு

* பொறுத்தல் இறப்பினை என்றும்; அதனை
மறத்தல் அதனினும் நன்று.

தேர்வு வைக்கலாம் என்று கருதுகின்றேன். ஒரு வினா. சிறிது நுண்ணறிவுடன் விடை தரவேண்டும். வறுமையுள் வறுமை எது ?'

கண்ணன் சிறிது எண்ணியபின்: ''வறுமையுள் வறுமை விருந்தாய் வந்தவரை ஏற்றுப் போற்றாமை தான் தந்தையே.''

ஆம், *வறுமையுள் கொடிய வறுமை விருந்தை ஏற்றுப் போற்றாமல் நீக்குதல். அஃதேபோல அறிவற்றவர் சொல்லாலும், செயலாலும் உண்டாக்கும் தீமையைப் பொறுத்தல் வலிமையுள் உரம் பாய்ந்த வலிமையாகும். மகனே, அந்த வலிமையைப் பெற்று மன நிறைவு பெற வேண்டியவன் நீ. ஆகவே *மன நிறைவு உன்னைவிட்டு நீங்காமல் பெற விரும்பினால் பொறுமையைப் போற்றி ஒழுகவேண்டும்.

'' தந்தையே, அவ்வாறே இனிப் போற்றி ஒழுகுவேன். தீய சொற்களிடத்தும் பொறுமை கொள்வேன்; தீய செயல்களிடத்தும் பொறுமை கொள்வேன்.''

## பெரியவருள்ளும் பெரியவர்

'மகனே, பொறுமை கொண்டால் அதற்கு ஏற்ற பெருமை பெறுவாய். தீய சொற்களைப் பொறுக்கும் பொறுமையால் தூய்மையையும், பெருமையையும் பெறுவாய். தூய்மையில் சிறந்தவராக எவரைக் கூறுவர் ?'

'' துறவிகள் தூய்மையில் சிறந்தோர் என்பர்.''

---

* இன்மையுள் இன்மை விருந்தொரால்; வன்மையுள் வன்மை மடவார்ப் பொறை.

** நிறையுடைமை நீங்காமை வேண்டின், பொறையுடைமை போற்றி ஒழுகப் படும்.

'அவர்களும் தம்மை இழிவுபடுத்தும் சொற்களைச் சொன்னால் தங்கள் துறவு நிலையிலும் தம் வலிமையைக் காட்ட முற்படுவர். அதனால், அவர்களது மனத்தூய்மையில் மாசுபடியும். ஆனால், *எல்லைமீறி இகழ்பவருடைய கொடிய வாயிலிருந்து வரும் கொடுஞ் சொற்களைப் பொறுக்கும் இல்லறத்தவர் துன்பம் செய்யாத உள்ளத்தைப் பெறுவர். அதனால், பொறுமை கொள்பவர் துறவறத்தவரைவிடத் தூய்மையானவர் ஆவர்.

அதுமட்டுமன்று, அவரைவிடப் பெரியவரும் ஆவர். பிறர் கூறும் கொடுஞ்சொற்களைக் கேட்கும்போது உள்ளம் அவர்களைத் துன்புறுத்த வேண்டும் என்று முனைப்போடு எழும். அதனை அடக்கினால்தான் பொறுமை கொள்ளலாம். மேலும் பிறரது இழிசொற்கள் பெருகப் பெருக முனைப்பை அடக்கும் முயற்சியும் பெருக வேண்டும். இவ்வாறு பயில்வது ஒரு நோன்பேயாகும். துறவினரோ உணவு உண்ணாமல் உடலை வருத்தி நோன்பு கொள்வர். இல்லறத்தாரோ அறுசுவை உணவும் கொண்டு, உடலையும் வளப்படுத்தி அவர் பெறாத பொறுமையைப் பெறுபவர். ஆகையால், **உண்ணாமல் நோன்பு கொள்ளும் துறவி பெரியவரே. ஆனாலும் பிறர் கூறும் கொடுஞ் சொற்களைப் பொறுத்துக் கொள்ளும் இல்லறத்தார்க்கு அடுத்த பெரியவராகத்தான் அவர் அமைவர்.'

"தந்தையே, இத்தகைய தூய்மையையும், பெருமையையும் பெறாமல் நான் கெடுத்துககொள்ள இருந்

* துறந்தாரின் தூய்மை உடையர், இறந்தார்வாய்
இன்னாச்சொல் நோற்கிற் பவர்.

** உண்ணாது நோற்பார் பெரியர், பிறர்சொல்லும்
இன்னாச்சொல் நோற்பாரின் பின்.

தேன். எனக்குத் துன்பம் செய்த அவரை இன்றைக் குள் கண்டித்தே ஆகவேண்டும் என்ற எண்ணத்தோடு தான் வந்தேன்."

## பொறுமை தந்த வெற்றி

'மகனே, அவர் உன்மேல் மண்ணை வீசித் துன்பம் தந்ததால் நீ நொந்தாய் அன்றோ! அதே போல் நீ அவர்மேல் மண்ணுக்குப்பதில் சொல்லை வீசித் துன்பம் தந்தால் அவரும் அதுபோலத்தானே நோவார். அந்த நோவை எண்ணிப்பார். அது இரங்கத் தக்கது அன்றோ? *தகுதி அல்லாத துன்பங்களைப் பிறர் தனக்குச் செய்தாலும் பொறுமை இழந்து, திரும்ப அவருக்குத் துன்பம் செய்தல் கூடாது. செய்வதால் அவர் பெறும் துன்பத்தை எண்ணிப் பார்க்க வேண்டும். அதற்குத் தான் நொந்து பதிலுக்குத் தீமையைச் செய்யாது பொறுமை கொள்தலே சிறந்தது.

அவ்வாறு சொள்வதால் மதிப்புக் குறைவோ, தோல்வியோ இல்லை. மாறாகத் துன்பம் செய்தவர் நீ கொண்ட பொறுமையை எண்ணித் தலை குனிவார். அது உனக்கன்றோ வெற்றி!

**தன் முனைப்பால் மிகுதியான தீமையைச் செய்தவரையும் தாம் தமது பொறுமைத் தகுதியினால் வென்று விடவேண்டும்.'

* திறனல்ல தற்பிறர் செய்யினும், நோநொந்
அறனல்ல செய்யாமை நன்று.

** மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாம்தம்
தகுதியான் வென்று விடல்.

"தந்தையே, காலையில் நான் எண்ணியிருந்ததை உள்ளம் திறந்து சொல்கிறேன். இன்று மாலைக்குள் அவரை நிலப் பொறுப்பிலிருந்து நீக்கி வீட்டிலிருந்தும் விரட்டிப் பழிவாங்க வேண்டும் என்ற எண்ணமே கொண்டிருந்தேன்."

## உலகம் அழிந்தாலும் உன்புகழ் அழியாது

'மகனே, நீ அவ்வாறு செய்தால் அவர் செய்ததையே நீயும் திரும்பச் செய்தவன் ஆவாய். உன் செயலால் அவர் வருந்தி அலைவதைப் பார்க்கும் ஊரார் உன்னைப்பற்றி என்ன சொல்வர்? அஃதன்றித் துன்பம் தராமல் பொறுமை கொண்டு அவருக்கு மேலும் நன்மை செய்வாயானால் உன்னை எவ்வாறு மதிப்பர்? *தமக்குத் துன்பம் செய்தவரைப் பொறுக்காமல் துன்பம் தந்து வருத்தினவரை உலகோர் ஒரு பொருட்டாக மதிக்கமாட்டார், ஆனால் பொறுத்தவரையோ பொன்னைப் பொதிந்து வைப்பது போல் தம் உள்ளத்தில் வைத்துப் போற்றுவர். பொன் தன்னைச் சுட்டாலும் ஒளிவிட்டு அணிகலன் ஆவதன்றோ? சுடச்சுட ஒளிருவதன்றோ பொன்? அதனால், பொறுத்தவரும் பொன்போல் கொள்ளப்படத் தக்கவரேயாவர்.

அது மட்டுமன்று, நீ அவரை வருத்துவாயானால் அதனால் உனக்கு விளையும் மகிழ்ச்சி எத்துணை நாளைக்கு நிற்கும் மகனே? **துன்பம் செய்தவரைத் துன்புறுத்திய

* ஒறுத்தாரை ஒன்றாக வையாரே ; வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போல் பொதித்து.

** ஒறுத்தார்க் கொருநாளை இன்பம் ; பொறுத்தாக்குப்
பொன்றும் துணையும் புகழ்.

வருக்கு வருத்திய அந்த ஒருநாள் மட்டுமே மனக் களிப்பு உண்டாகும். ஆனால் பொறுமை கொண்டவருக்கோ உலகம் அழியும் வரையும் புகழ் நிலைத்து நிற்கும். புகழ், மக்கள் இறந்த பின்னரும், உலகம் உள்ள வரையும் நிலைப்பதன்றோ? மகனே, நீ ஒருநாள் இன்பத்தை விரும்புவாயா? அழியாப் புகழை விரும்புவாயா? மகனே, சொல்ல வேண்டாம். கண்ணம்மா; கண்ணனுக்கு மாறாத இன்ப மனைவியாக உள்ள நீ செல்லும். போதே எதைக் காண விரும்புகிறான் என்பதைக் கேட்டுவந்து நாளைச் சொல்க!

# பொறாமையை விடுக!

அழுக்கு ஆறு

'மகளே, கண்ணன் விரும்புவது ஒருநாள் இன்பமா; அழியாத புகழா?'

''தந்தையே, அவரும் நானும் அழியாத புகழை நோக்கிச் செல்வது என்று உறுதி கொண்டுவிட்டோம்.''

'என்ன கண்ணு, அத்தகைய உறுதி கொண்டுள்ளாய்?'

''தந்தையே நான் குறித்த அந்த உறவினருக்கு என் விளை நிலத்தில் ஓரளவும், ஒரு வீடும் வழங்குவது என்று முடிவு செய்துள்ளேன்.''

'நன்று மகனே! இந்த முடிவுக்குக் காரணம் என்னவோ!'

''தந்தையே! அவர் செல்வ வளத்துடன் வாழ்ந்தவர். அது அழிந்தது. அழியவே எங்கள் குடும்பப் பாதுகாப்பில் வந்தார். நான் இளையவனாக இருந்தும் பொறுப்புடன் செல்வ வளத்தைப் பெருக்குவது அறிந்தும், பலருக்கு உதவி புரிவதைக் கண்டும், மதிப்புடன் வாழ்வதை அறிந்தும் மனம் புழுங்குகிறார்.''

'மகனே, மனப்புழுக்கத்திற்கு நல்ல மருந்துதான் தர இருக்கிறாய். நீ வாழ்க! மனப்புழுக்கம் மன அழுக்கை

ஆருக ஓடச் செய்யும். அந்த அழுக்கு ஆறுதான் பொருமை என்று முன்னரே கண்டாய். அதைக் கொண்டவர் அடையும் சிறுமைகள் பல. உன் உறவினர் அதைக் கொண்டதால்தான் சிறுமை பெற்ருர். அந்த அழுக்கு ஆற்றை நீக்க வேண்டும். ஒழுக்க ஆற்றைத் தோற்றுவிக்க வேண்டும். பொருமை இல்லாமை ஒழுக்க ஆருகும்; அதாவது ஒழுக்க நெறியாகும். *ஒருவன் தன் உள்ளத்தில் என்றும் பொருமையில்லாத தன்மையைத் தன் ஒழுக்க நெறியாகக் கொள்ள வேண்டும்.

'மகனே, ஒழுக்கம் பலவகைப் பண்புகளின் தொகுப்பு என்று அறிந்தாய். பொருமை இல்லாமை என்னும் இந்தப் பண்பு பலவகைப் பண்புகளிலும் இன்றியமையாத பண்பாகும். இன்றியமையாத பண்பு இணையில்லாத பயனையும் தரும். ஆகையால், **எவரிடத்தும் பொருமை கொள்ளாமையாகிய ஒழுக்கத்தைப் பெறவேண்டும். பெற்ருல் பிறஒழுக்க நெறிகளால் பெறும் சிறந்த பேறுகளுக்குள்ளும் இதனுல் பெறும் பேற்றுக்கு ஒப்பானது இல்லை.

மகனே, பொருமை நீக்கப்பட வேண்டிய ஒன்றென்பதை அறிவாய். அந்தப் பொருமை நீங்கினுல்...?'

"தந்தையே, பிறர் பொருளைக் கவரும் அவா நீங்கும்; சினம் நீங்கும்; கடுஞ்சொல் நீங்கும். இவற்றின் நீக்கத்தால் குற்றமற்ற உள்ளம் நிலைக்கும். குற்றமற்ற உள்ளமே அறமாகையால் அறமே நிகழும்."

* ஒழுக்காருக் கொள்க, ஒருவன்தன் நெஞ்சத்
தழுக்கா றிலாத இயல்பு.

** விழுப்பேற்றின் அஃதொப்ப தில்லை,யார் மாட்டும்
அழுக்காற்றின் அன்மை பெறின்.

' அறம் நிகழ்ந்தால்...?'

'' ஆக்கம் பெருகும் தந்தையே. அறத்தைவிடச் சிறந்த மேம்பாடு இல்லை என்றன்றோ அறிந்துள்ளேன் !''

' ஆம், அத்தகைய *அறத்தால் பெறும் மேம்பாட்டை விரும்பாதவன்தான் பிறரது ஆக்கம் கண்டு மகிழாது பொருமை கொள்வான். பிறரது ஆக்கம் கண்டு தாமும் மகிழும் பெருந்தன்மை எங்கே? அது கண்டு மனம் புழுங்கும் சிறுமை எங்கே?

'' தந்தையே பொருமை கொள்பவன் அறத்தையே வெறுப்பவன் ஆவானே ! தன்னை வேண்டாது வெறுத்தவரை அறம் வருத்துமே! ஆகையால் பொருமை கொண்டவன் அறத்தைப் பகைத்துக் கொண்டவன் ஆவான்.''

## தப்பாத பகை

' ஆம் மகனே, பகைத்துக் கொண்டவனே. அந்தப் பகைக்கு மூலமாவது பொருமை அன்றோ ! ஆகையால், பொருமையே அவனுக்குப் பகை. இந்தப் பொருமை கொண்டு செய்யும் செயல்களால் பிற பகைவரும் அமையலாம். ஆனாலும் அந்தப் **பகைவர் துன்பம் தரத் தவறினும் தவறுவர்; பொருமை என்னும் பகை தவருது. ஆகையால் அந்தப் பொருமையே அதைக் கொண்டவன் கெடுவதற்குப் போதுமான பகையாகும்.

* அறனாக்கம் வேண்டாதான் என்பான் பிறனாக்கம்
பேணு தழுக்கறுப் பான்.

** அழுக்கா றுடையார்க் கதுசாலும், ஒன்னார்
வழுக்கியும் கேடீன் பது.

மகனே, துன்பத்தைத் தப்பாமல் செய்வதுதானே கொடிய பகை. கொடிய பகையை உடனே களைய வேண்டும். இல்லையேல் விரைவில் அது முற்றிவிடும். முற்றிப் போனால் பிறர் பெறும் சிறு உயர்வையும் கண்டு புழுங்கச் செய்யும். பிறரது மேம்பாடு கண்டு புழுங்கு வதில் தொடங்கிய பொறாமை பிறர் துன்பம் கண்டு மகி ழும் அளவிலும் செல்லும். அதனால் பிற யாவரும் ஏழ் மையை அடையக்கூடாதா என்ற வேண்டாத எண்ணம் எழும். அந்த எண்ணமும் முற்றினால் ஏழ்மை பெற்ற வர்கள் அந்த ஏழ்மையிலேயே துன்புற வேண்டும்; அவர் பிறர் உதவி பெற்று முன்னேறக் கூடாது என்று எண்ணவும் செய்யும். செல்வம் உள்ளவர் மனம் உவந்து ஏழ்மையில் உள்ளவர்க்குக் கொடுக்க முன் வந் தாலும் அதைத் தடுக்கத் தூண்டும். கொடுக்கும் நல்ல உள்ளம் படைத்தவர் தடுத்தலை அறிந்தால் தடுப்பவரது சிறுமை கண்டு வெறுப்பர். தடுத்ததால் உதவியைப் பெறாதவரும் வெறுப்பர். இவ்வாறு எல்லோரது வெறுப் பையும் ஏற்பவர் தமக்கு எவர் உதவியையும் பெற முடி யாமல் வாழ்வில் தாழ்வர். அவர் வாழ்வு தாழ்ந்தால் அவரைச் சார்ந்த சுற்றம் என்ன ஆகும்? *செல்வம் அற்றவர்க்குச் செல்வம் பெற்றவர் கொடுத்து உதவுவதைக் கண்டு பொறாமைக் கொள்பவனது சுற்றத்தார் உண்ண உணவும், உடுக்க உடையும் இல்லாமல் கெடுவர்.

## ஒப்பற்ற பாவி

"தந்தையே பொறாமை தம்மைவிட்டு நீங்காமல் குடிவைத்துக் கொண்டவர் தோற்றத்திலும் பொலிவு அற்றவராகத்தான் காணப்படுகிறார்."

* கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றிக் கெடும்.

'ஆம், மகனே. பொருமை என்பது பிறரைப் பற்றியே நினைக்க வைப்பது அன்றோ! அதனால் அவன் தன்னைப் பற்றியும் தன் வாழ்வைப்பற்றியும் எண்ணாமலும், முயற்சி கொள்ளாமலும் புழுங்குவான். அதனால்தான் முன்னர் பெற்றிருந்த வாழ்வையும், பொலிவையும் இழப்பான். பொலிவு போனால் நலிவுதான் வரும். பொலிவு இளமை எழிலை உடையது. நலிவோ முதுமைத் தளர்வை உடையது. முன்னரே இல்லப் பொலிவைச் செய்யவள் என்று பேசினோம். அதன்படி பார்த்தால் நலிவு பொலிவுக்கு மூத்ததாகிச் செய்யவளுக்கு மூத்தவள் ஆகும். இவ்வாறு உருவகமாகக் கூறினால் *பொருமை கொண்டவனைப் பொலிவு என்னும் செய்யவள் வெறுப்பாள். வெறுத்து நலிவு என்னும் தன் மூத்தவளுக்கு அவனைக் காட்டிவிட்டு நீங்குவாள்.'

"தந்தையே பொருமை இவ்வளவு தீமை செய்வதாகிறது."

'மகனே, தீமை செய்பவர் யார்?'

"பாவி"

'ஆம், பொருமையும் ஒரு பாவியே. ஆனால், மக்களுள் பாவிக்கு மற்றொரு பாவியை ஒப்புக் காட்டலாம். ஆனால் பொருமை என்ற பாவி ஒப்பில்லாத பாவி. ஏனென்றால் **பொருமை என்று கூறப்படும் ஒப்பற்ற பாவி தன்னைக் கொண்டவனுடைய செல்வம், பெருமை முதலியவற்றைக் கெடுத்துத் தீய நெறியில் செலுத்திவிடும்.'

* அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும்.

** அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி உய்த்து விடும்.

" தந்தையே, தாழ்விலும் தாழ்வைத் தரும் பொருமையை அறிவற்றவர்தான் மேற்கொள்வர்."

'உண்மை மகனே. அறிவுள்ளவர் அந்த அறிவைக் கொண்டு ஆராய்வர். —பொருமை கொள்வது ஒழுக்க நெறியிலிருந்து தவறுவதாகுமே; ஒழுக்க நெறியிலிருந்து தவறுவது இழுக்க நெறியாயிற்றே; அதனுல் உள்ளம் கலங்குமே; உள்ளக் கலக்கம் உடலையும் வாட்டுமே; உள்ளக் கலக்கமும் உடல் வாட்டமும் வாழ்வில் துன்பத்தை தருமே -- என்றெல்லாம் ஆராய்ந்து தெளிவர். அதனுல் *பொருமை கொள்தல் என்னும் இழுக்க நெறியினுல் துன்பம் உண்டாவதை அறிவுடையவர் அறிந்து பொருமை கொள்ளார். கொண்டு தீயவைகளைச் செய்யமாட்டார். அறமே செய்து மேம்போடு அடைவர்.

**நினைக்கப்படும்**

" தந்தையே; ஒரு ஐயம். சில பொருமைக்காரர்கள் மேம்பாடு பெற்று வாழ்வது எவ்வாறு? அஃதேபோல் பொருமையற்ற சிலர் வறுமையுற்று வருந்துவது ஏன்?"

'மகனே. அது நினைத்துப் பார்க்கத்தக்க ஒன்று. அவ்வாறு மாறுபாடாக நேர வழி இல்லை. நேர்ந்ததனுல் அது சிந்தித்து முடிவு காணத்தக்க ஒன்ருகும். ** பொருமை கொண்டவர் பெற்ற செல்வ வளமும், செவ்வையான உள்ளம் கொண்டவர் அடைந்த கேடும்

---

* அழுக்காற்றின் அல்லவை செய்யார், இழுக்காற்றின் ஏதம் படுபாக் கறிந்து.

** அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும், செவ்வியான் கேடும் நினைக்கப் படும்.

வேறு எவற்ருல் ஏற்பட்டன என்று சான்ருேரால் நினைக்கப்படும்.

ஆனால் இதுவரை *பொருமை கொண்டவராய் மேம்பாடு அடைந்தவரும் இல்லை. அந்தப் பொருமை இல்லாதவராய் மேம்பாட்டைப் பெருதவரும் இல்லை. ஆகவே வேறு காரணம் அமையும். அத்தோடு பொருமை கொண்டவன் பெற்ற ஆக்கம் உண்மையான ஆக்கமாகாது. வந்த வழியே அழிவது. அதேபோல் பொருமை அற்றவன் பெற்ற கேடும் ஒருகேடு ஆகாது, அஃதும் நிலைக்காமல் விரைவில் அழியும். ஆகவே, இந்த மாறுபட்ட நிலைகளை நினைத்து ஆய்ந்து உண்மை காணவேண்டும்.

மகனே, நீயோ உனக்கு உரிய செல்வத்தையும் உன்மேல் பொருமை கொண்டர்க்கு உரிமை செய்ய உறுதி கொண்டவன். மகளே, நீ அந்த உறுதிக்குத் துணை நிற்பவள். ஆகையால், உங்கட்கு மேம்பாடு காத்திருக்கிறது. சென்று உறுதியை நிறைவேற்றிக் காத்திருக்கும் மேம்பாட்டைப் பெறுக!

* அழுக்கற் றகன்ருரும் இல்லையஃ தில்லார்
பெருக்கத்தில் தீர்ந்தாரும் இல்.

# பிறர் பொருளை விரும்ப வேண்டாம்

குடிகெடும் ;

குற்றம் படும்

'மக்காள், இன்று உங்களோடு மற்றொரு நண்பரை யும் காண்கிறேனே! மிக மகிழ்ச்சி.'

''தந்தையே, இவர்தான் எங்கள் உறவினர்; எங் கள் குடும்பத்தின் நிலப் பொறுப்பைக் கொண்டுள்ளவர். என்மேல் தற்போது அன்புகொண்டுள்ளவர். என் னுடன் தங்களைக் காணவிரும்பினர்; அழைத்து வந் தேன்.''

உடன் வந்தவர்; சான்றாண்மை வாய்ந்த ஐயா! தம்பி கூறுவது அவனது பெருந்தன்மையைக் காட்டுவ தாகும். நான் நேற்று வரை அவனுக்குத் தீயன எண் ணியவன். இன்று தம்பியின் பெருந்தன்மையால் திருந்தியவன். அதற்கு வாய்ப்பளித்த தங்களின் வாழ்த் தைப் பெறவே வந்தேன்.

'நன்று, ஐயா! தன் தவற்றை உணர்ந்தவர்களைக் காண்பதே ஒரு பேறு ஆகும்.'

''செல்வ வளத்தை இழந்த நான். எனது பெரு மைக் குணத்தால் பிறரைக் கெடுத்தாலே வாழலாம்

என்று முனைந்து நின்றேன். பிறர் பொருளைக் கவர்ந்தால் வருத்தமின்றி வாழலாம் என்று பிறர் பொருள் மேல் அவாக் கொண்டு அலைந்தேன். எனக்கு உதவி செய்துவந்த தம்பியின் பொருளையும் கவர முனைந்தேன். அத்தகைய எனக்குத் தம்பி பேருதவி செய்து என்னைத் திருத்தியுள்ளான். இல்லையேல், என் அவா எல்லை மீறி யிருக்கும். என்ன கொடுமை செய்திருப்பேனோ !''

'பிறருக்கு உரிய பொருள்மேல் அவாக்கொண்டால் எதையும் செய்யத்தான் தூண்டும். பயனும் கொடுமை யானதாக அமைந்துவிடும் மக்காள், செல்வம் என்பது மக்கள் வாழ்விற்கு நன்மை கொடுக்கும் ஒன்றுதான். ஆயினும், அந்தச் செல்வம் நேர்மையோடு சேர்க்கப்பட வேண்டும் அன்றோ ? 'இச்செல்வம் நமக்குச் சேர்தற்கு உரியதா அல்லது பிறருக்கு உரியதா' என்று நடுநிலை யில் நின்று ஆராய்ந்து சேர்க்கப்பட வேண்டும். அவ்வா றன்றி * நல்ல வழியில் வந்து நன்மையைத் தருவது பொருள். அது பிறரது ஆயின் நடுவு நிலை தவறிக் கவரக் கூடாது. கவர்ந்தால் நன்மையைச் செய்யும் செல்வமே குடியைக் கெடுத்துக் குற்றத்தையும் அந்த நேரத்திலேயே தரும்.

'மகனே, நடுவுநிலை தவறுதல் எத்துணை இழிவு என்பதை முன்னரே அறிந்துள்ளாய் அன்றோ !'

''ஆம் தந்தையே ! நடுவுநிலை தவறிப் பெறும் செல் வத்தை அந்த நேரத்திலேயே கைவிடுதல் வேண்டும் என்று அறிந்தேன். அதுபோலவே நடுவுநிலையின்றிப் பெறப்படும் செல்வம் அந்த நேரத்திலேயே குடியைக் கெடுப்பது ஆகிறது.''

* நடுவின்றி நன்பொருள் வெஃகின், குடிபொன்றிக்
குற்றமும் ஆங்கே தரும்.

'மகனே, *நடுவுநிலை அல்லாததைக் கண்டு அஞ்சுபவர் பிறர் பொருளைக் கவர்வதால் உண்டாகும் பயனை விரும்பிப் பழியை உண்டாக்கும் செயலைச் செய்யார். அவர் மட்டுமன்று :

**நிலைத்த இன்பத்தை வேண்டுபவர் பிறர் பொருளைக் கவர்வதால் உண்டாகும் சிறிது கால இன்பத்தை விரும்பி, அறம் அல்லாதவற்றைச் செய்ய மாட்டார்.

## நுண்ணறிவால் என்ன பயன் ?

'பிறர் பொருளைக் கவர்ந்து வாழ்வதைவிட வறுமையோடு வாழ்தல் மேம்பட்டதன்றோ !'

''ஆம் தந்தையே, மேம்பட்டதே. ஆனால் இந்த எண்ணம் எல்லாரிடமும் அமைவதில்லை,''

'அமையாதுதான். அமையவேண்டுமானால் அவாக்களுக்கு அடிமையாகாதிருக்க வேண்டும். அதிலும் ஐந்து புலன்களை அவைகளின் விருப்பப்படி விடாது கட்டுப்படுத்தும் வல்லமை பெற்றவராக ஆகவேண்டும். இவ்வாறு ***ஐந்து புலன்களையும் அவற்றின் போக்குக்கு விடாமல் நெறிப்படுத்தி வென்ற சிறுமையற்ற அறிவுடையவர் நாம் வறுமை அடைந்து விட்டோம் என்று பிறர் பொருளைக் கவர விரும்பார். புலன்களின் அவாவை அடக்கியவர் செல்வத்தின் மேலா அவாக் கொள்வர் ?

* படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்,
நடுவன்மை நாணு பவர்.

** சிற்றின்பம் வெஃகி அறனல்ல செய்யாரே,
மற்றின்பம் வேண்டு பவர்.

*** இலமென்று வெஃகுதல் செய்யார், புலம்வென்ற
புன்மையில் காட்சி யவர்.

**நுட்பம் பெற்று விரிவடைந்த அறிவைப் பெற்றவர் பிறர் பொருள்மேல் அவாக்கொண்டு யாரிடத்தும் அறிவற்ற செயலைச் செய்யார். செய்தால் அவர் பெற்ற அறிவால் என்ன பயன்?'*

## செல்வத்தை விரும்ப வேண்டாம்

' மகனே, இல்லறத்தார் பலரையும் காக்கும் பொறுப்பும் அன்பும் கொண்டவர்; அன்பு கனிந்த அருளோடு துன்பப்படும் உயிரையும் காத்து உதவும் கடமை பெற்றவர். பிறருக்குச் செல்வத்தால் உதவி அவரைத் துன்பம் அணுகாமல் அவர் காத்தல் வேண்டும். துன்பம் கண்டால் அருள் கொண்டு ஓடி உதவ வேண்டும். இதுவே இல்லறம். இவ்வாறு ***அருளை விரும்பி இல்லற நெறியிலே நின்றவன் பிறர் பொருளை விரும்பிப் பொல்லாத செயல்கள் செய்ய எண்ணுவானுனல் கெடுவான்.* ஆகவே, பிறர் பொருளைக் கவர்தல் எத்துணை தீதென்று கருதி எத்தகையவரெல்லாம் ஒதுக்குவர் என்று அறிகிறீர்கள் அன்றோ!'

'' ஆம், தம்மையே! நடுவு நிலையை விரும்புபவர், நிலைத்த இன்பம் வேண்டுபவர், அறிவுத் தெளிவு பெற்றவர், அருளை மேற்கொண்டவர் ஆகிய எவரும் பிறர் பொருள்மேல் அவாக் கொள்ளார்.''

'' மக்காள், இத்துணை நல்ல பண்பினராலும் விரும்பப்படாத பிறரது செல்வம் சேரின் எத்துணை கொடுமை

* அஃகி அகன்ற அறிவென்னும், யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின்.

** அருள்வெஃகி ஆற்றின்கண் நின்றான் பொருள்வெஃகிப்
பொல்லாத சூழக் கெடும்.

யைத் தரும்? *அவாவால் பெற்ற பிறரது செல்வம் பயன் தரும்போது நன்மைக்கே வழியில்லையாகும். ஆகையால், பிறர் பொருள்மேல் அவாக் கொண்டு உண்டாகும் செல்வ வளத்தை விரும்ப வேண்டாம்.'

## செல்வம் குறையாமைக்கு வழி

"ஐயா, இந்த அளவு தீமையுள்ள அவாவிற்கு நானே சரியான எடுத்துககாட்டாய் விளங்கினேன். அதனால் எனக்குரிய செல்வத்தையும் இழந்தேன். இப் பொழுதே தெளிவு பெற்றேன்"—என்றார் உடன் வந்தவர்.

'நன்று! **பெற்ற செல்வம் குறைவுபடாதிருக்க வழி யாது என்றால் பிறருடைய கைப்பொருள்மேல் அவாக் கொள்ளாதிருத்தலேயாகும். பெற்ற செல்வம் குறை யாமை மட்டுமன்று; பெருகுவதற்கும் அந்த அவா வின்மை உதவும். ***இல்லறத்தில் பொருள் சேர்த்தற்கு உரிய அறத்தை அறிந்து பிறன் பொருளை விரும்பாத அறிவு உடையவரை அவரது தகுதி அறிந்து இல்லப் பொலிவு தானே போய்ச் சேரும்.'

## வாழ்வின் வைற்றி

'மக்காள், தானே வரும் இல்லப் பொலிவை அன்றோ அவாவின்மையால் வரவேற்க வேண்டும். அவ்வாறன்றி, அவாக்கொண்டால்......?

* வேண்டற்க வெஃகியாம் ஆக்கம் ; விளைவயின்
மாண்டற் கரிதாம் பயன்.

** அஃகாமை செல்வத்திற் கியாதெனில், வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள்.

*** அறனறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேரும்
திறனறிந் தாங்கே திரு.

"உள்ள செல்வமும் போகும்; வந்த செல்வமும் போகும் தந்தையே."

'மகனே, போகும் போக்கில் குடும்பத்தைக் கெடுத்து விட்டுப் போகும். இத்தகைய விளைவைத் தருவது அவா வால் பெறும் செல்வம். இவற்றை எல்லாம் இல்லறத் தில் அமைந்தவர் எண்ணிப் பார்த்தல் வேண்டும். *எண்ணிப் பார்க்காமல் பிறர் பொருள்மேல் அவாக் கொண்டால், அந்த அவா கேட்டைத் தரும். ஆனல், அவாக்கொள்ளாமை என்னும் பெருமிதம் வாழ்வின் வெற்றி யைத் தரும்.

மக்களே—ஐயா, நீங்களும் அவாக் கொள்ளாமல் என்றும் பெறுமிதத்தைக் கொள்க! அதனல் வாழ்வின் வெற்றியைப் பெறுக!'—என்ருர் தந்தை.

"பெரியீர், தம்பி வாழ்வின் வெற்றிப் பாதையில் பெருமிதத்தோடு நடப்பவன். நானே தவறியவன். ஆயினும், உங்களாலும், உங்கள் வாழ்த்தைப் பெற்ற தம்பியாலும் திருந்தியவன். என்னையும் மதித்துத் தாங் கள் வாழ்த்தியதை எண்ணி மிகமிகப் பூரிக்கிறேன். அந்தப் பூரிப்பு குறையாமல் ஒழுகுவேன். இந்த அன் புச் செம்மல்களுக்கு உற்ற துணையாய் அமைந்து செயல் புரிவேன்."—என்று உறுதி கூறினர் உடன் வந்தவர்.

'நன்று, வாழ்க! கிணற்று வேலை முடிந்துவிட்டதா?'

"தந்தையே நாளைக் காலை முடித்து விடுவோம்."

'உங்களுக்கு இனி என்ன குறை; செல்க! சென்று வருக!

---

* இறலீனும் எண்ணுது வெஃகின் ; விறலீனும்
வேண்டாமை என்னும் செருக்கு.

# புறங்கூறுதல் தீது

முன்னே சொல்லுக ;
பின்னே சொல்லற்க !

'மக்காள், இன்று உங்களுடன் உங்கள் உறவினர் வரவில்லையோ ?'

'' இல்லை, தந்தையே. எனது வேலைகள் சிலவற்றை இன்று அவரே மேற்கொண்டுள்ளார். தங்களைக் கண்டு மகிழ்ந்து தங்கள் வாழ்த்தினைப் பெறவே நேற்று வந்தார். அவர் முன்புபோல் இல்லை. பொறுப்போடு செயல் புரிகிறார். என்னிடம் பேரன்பும், பெருமதிப்பும் கொண்டு பழகுகிறார். வரும்போது அவர் கூறிய இன்னுரைகளை எண்ணி மகிழ்ந்தவாறே வந்தேன்.''

'மகனே, உன் உறவினரைப் பற்றிய நல்ல செய்திகளை நீ கூறக்கேட்டு மிக மகிழ்கிறேன். நேற்றைய முன்நாள் அவரைப்பற்றிய குறையை நீ கூறக்கேட்டபோது என் உள்ளம் அதை முழுமையோடு ஏற்கவில்லை. ஏனென்றால் அது பிறரைப் பற்றிய குறை. அதிலும் அவர் இல்லாதபோது சொல்லப்பட்டது. ஆனால் உனக்குப் பொறுமையூட்டுவதையே அன்று கருத்தாகக் கொண்டிருந்ததால் அதனைச் சுட்டிக் காட்டாமல் விட நேர்ந்தது.'

" தந்தையே, நானும் அமைதியின்மையால் தெளிவற்று அவ்வாறு கூறிவிட்டேன். அஃதொடு நேற்றும் அவரை முன்னர் வைத்துக் கொண்டே அவரைப்பற்றிய குறையையும் குறிப்பாகக் கூறினேன். அவற்றையும் இப்போது நினைந்து வருந்துகிறேன்."

'மகனே, அதுவும் கூடாததே. ஆனால் பிறரது *கண்ணெதிரே நின்று அவரைப்பற்றிக் கண்ணோட்டமில்லாமல் சொன்னாலும் சொல்லுக; அவர் முன் இல்லாது பின்புறத்தே பயன் கருதாத சொற்களைச் சொல்லாது விடுக! அவ்வாறு கூறப்படுவதுதான் புறங்கூறல் எனப்படும். அது தவறு.

ஒருவருக்கு முன்னே நின்று அவரைப்பற்றிச் சொல்லத் தயங்குபவர்தான் புறத்தே சொல்வர். அதை அவருக்கு முன்னே சொல்லத் தயங்குவானேன்? அந்தத் தயக்கம் தன்னால் கூறப்படும் குறையில் நேர்மையில்லை என்பதையன்றோ குறிக்கிறது! நேர்மையில்லாததைச் சொல்பவன் அறம் அல்லாததைச் சொல்பவன் ஆவான். ஆகையால் புறங்கூறுதல் ஒரு இழிந்த தன்மையாகும். இதனால் ஒன்று அறியப்படும். **ஒருவன் அறத்தைச் சொல்லுகின்ற உள்ளத்தைப் பெருதவன் என்னும் தன்மை, அவன் புறங்கூறுகின்ற இழிந்த தன்மையால் அறியப்படும்.

### இவன் புறங்கூருதவன்

" தந்தையே, நான்......!"

* கண்நின்று கண்ணறச் சொல்லினும், சொல்லற்க
முன்இன்று பின்னோக்காச் சொல்.

** அறஞ்சொல்லும் நெஞ்சத்தான் அன்மை, புறஞ்சொல்லும்
புன்மையால் காணப் படும்.

'மகனே, நீ உன் உறவினர் இல்லாதபோது சொல்லியவற்றையே அவர் முன்னரும் குறித்ததால் நேர்மையுள்ளவனுவாய். ஆகையால், நீ கவலை கொள்ளாதே. மகனே, புறங்கூறுதல் என்னும்போது அது பிறரைப் பற்றிய பேச்சு ஆகிறது. மக்களின் நல்ல இயல்பு பிறரைப்பற்றிய நல்ல செய்திகளைக் கூறுவதுதான். அதிலும், அவர் இல்லாதபோது அவரைப் பற்றிப் பேச நேர்ந்தால் அவர் செய்த அறச்செயல்களைக் கூறிப் புகழ்வதும், மகிழ்வதும் நன்று. அதற்கு மாருக *ஒருவன் *பிறரது அறச்செயல்களை எடுத்துக் கூருதவனுய், அறம் அல்லாத தீமைகளைச் செய்தல் கூடாது. அவ்வாறு செய்பவனுனுலும் 'இவன் புறங்கூருதவன்' என்று உலகோரால் சொல்லப்படுவது சிறந்தது.*

## முகத்தில் பொய்

'மகனே, சிலர் தனக்கு வேண்டாதவரைப்பற்றி அவர் இல்லாதபோது—அவர் பொய்யர், தீமை செய்தவர்; அருள் அற்றவர்; அவரைக் காண்பதும் வெறுப்பைத் தரும்—என்பர். அந்நேரத்தில் அவரே வந்துவிட்டால்—வருக; வருக! உங்களைக் கண்டு பல நாட்களாயின; தற்போதாவது காண நேர்ந்ததே; உடல் இளைத்துள்ளதே—என்று மகிழ்ச்சியை வரவழைத்துக் கொண்டு பேசுவர். இது மிகத் தீது. **பிறர் *செய்த அறச்செயல்களைத்தான் அழித்து மேலும் அவர்க்குத் தீயவை செய்தல் தீது. அதைவிட, ஒருவரைக் காணுத*

* அறங்கூருன் அல்ல செயினும், ஒருவன்
புறங்கூருன் என்றல் இனிது.

** அறனழீஇ அல்லவை செய்தலின் தீதே,
புறனழீஇப் பொய்த்து நகை.

*இடத்து இழிவுபடுத்திப் பேசி, கண்ட இடத்துப் பொய் யாக முகம் மலர்ந்து பேசுதல் தீது. இந்தச் செயல்* வாயில் பொய்யைக் கொள்வதோடு முகத்திலும் பொய் யைக் கொள்வதாகும்.

*இவ்வாறு *காணுத இடத்துப் புறங்கூறிக் கண்ட இடத்துப் பொய்யாக மகிழ்ந்து பேசி உயிர் வாழ்வதை விடப் புறங்கூருமல் வறுமைபெற நேர்ந்து சாதல், இல் லற நூற்கள் கூறும் மேம்பாட்டைத் தரும்.*

அயலவரிடம் என்ன செய்வாரோ ?

' மகனே, அவன் இறந்தால் உலகோர் அவன் எத ஞல் இறந்தான் என்பர் ?'

" வறுமையால் இறந்தான் என்பர் "

' அஃதொடு என்ன கூறுவர் ?'

" வறுமை பெற்றபோதும் பிறரைப் பற்றிப் புறங் கூருத பெருந்தன்மை மிக்கவன் என்று புகழ்ந்து கூறுவர்."

' ஆகையால், இல்லறத்தின் மேம்பாடான புகழை அன்ரூே பெறுகிருன் ! இல்லறப் பயனும் புகழைத் தரு வனவற்றுள் புறங்கூருமை ஒன்று. மகனே, இதற்கு மாருன புறங்கூறுதலோ......?'

'' மிகத் தீயது தந்தையே ''

' தீயதைக் கூறுபவர் எதைச் செய்வர் ?'

'' தீமையே செய்வர்."

* புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலின் சாதல்
அறங்கூறும் ஆக்கம் தரும்.

'மக்களே, அத்தீமை எத்தகையது என்பதும் அறியத் தக்கது. *யாவரும் மகிழ்ச்சி கொள்ளுமாறு நட்புக் கொள்ளுதலைத் தெளிவாக அறியாதவர் தமது உறவினரும் தம்மைவிட்டுப் பிரியுமாறு புறங்கூறிப் பிரிப்பர். இதனல் தம் உறவைப் பிரித்த தீமை செய்தவராவர்.

நட்பினரைத் தேடிக்கொள்ளத் தெரியாதவர் கிடைத்த நட்பைக் காத்துக் கொள்ளவா செய்வார்? தமது புறங்கூறும் தன்மையால் தம்மோடு கூடியவரையும் அவர் இல்லாதபோது தூற்றுவர். **தம்மோடு கூடிப் பழகும் தம்மவரது குற்றத்தையே புறங்கூறித் தூற்றும் வழக்கத்தை உடையவர் தொடர்பில்லாத அயலாரிடத்து என்ன செய்வாரோ?'

**கண்ணன்:** உள்ள குறைகளை அதிகப்படுத்தித் தூற்றியவர்; இல்லாத குற்றத்தையும் இருப்பதாகப் பழி சொல்லித் தூற்றுவர்.

### தன்னைத்தானே காட்டிக்கொடுப்பவன்

'நன்று சொன்னுய் மகனே! புறங்கூறிப் பழி தூற்றுபவன் மூன்றுமவர் ஒருவரிடந்தானே சொல்லவேண்டும்? அவ்வாறு சொல்பவன் ஒருவரிடம் சொல்வதோடு விடுவான? பலரிடமும் சொன்னல் அன்றே பழி தூற்றியதாகும். ஆகையால் பலரிடமும் சொல்வான். அதனல், பலரும் அவனது புறங்கூறும் தன்மையை அறிவர். அறிந்தவர்—இவன் ஏன் இவ்வாறு புறங்கூறித் திரி

* பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர், நகச்சொல்லி
நட்பாடல் தேற்று தவர்.

** துன்னியார் குற்றமும் தூற்றும் மரபினர்
என்னைகொல் ஏதிலார் மாட்டு!

கிருன்—என்று அவனைப் பற்றி ஆராய்வர். ஆராய்ந்தால், அவனது பழிச் செயல்களையும் காண்பர். கண்ட நல்லவர் அவனிடமே அவன் கைக்கொண்ட பழிச்செயல்களை இடித்துக் கூறுவர். *பிறனது பழியை அவனைக் காணுத இடத்துக் கூறுபவன் தான் செய்த பழிகளுக்குள்ளும் திறன் வாய்ந்த பழியைக் கூறுவான். அதனைக் கேட்கும் பிறர் ஆராய்ந்து இவன் செய்தவை எனத் தெளிவர். தெளியப்பட்டது அவனிடமே கூறப்படும்.

"தந்தையே, ஆகவே, புறங்கூறுபவன் தன் பழிகளைத் தானே காட்டிக் கொடுப்பவன் ஆவான்."

'ஆம் மகனே, காட்டிக் கொடுப்பவன்தான். ஆனுல் பிறர் தன் பழிகளைத் தெரிந்து இடித்துக் கூறுவதைவிட அவனே தன் குற்றங்களை நினைத்துப் பார்த்துத் திருந்திஞல் எத்துணை நன்மை பெறலாம்! அயலாருடைய குற்றங்களைக் காணச் செலவு செய்யும் நேரத்தையும் முயற்சியையும் தனக்குத்தானே செலவு செய்வானுனல் பிறருக்கும் தீமை செய்யாதவன் ஆவான். ஆகையால், **புறங்கூறுவதற்காக அயலாரது குற்றத்தைக் காண்பது போலவே தன் குற்றத்தையும் காணுதல் வேண்டும். கண்டால் நிலைபெற்ற உயிர்களுக்கு ஒருவனுல் தீமை நேருமோ, மகனே?'

"நேராது தந்தையே."

'தன் குற்றத்தை எண்ணி அறிந்தவன் அக்குற்றம் தனக்குத் துன்பம் தந்ததையும் அறிவான். தன் துன்

* பிறன்பழி கூறுவான் தன்பழி யுள்ளும்
திறன்தெரிந்து கூறப் படும்.

** ஏதிலார் குற்றம்போல் தன்குற்றம் காண்கிற்பின்
தீதுண்டோ மன்னும் உயிர்க்கு?

பத்தை அறிந்தவன் அதற்காகக் கலங்குவான். பிற உயிர்களுக்கும் இதுபோல்தானே கலக்கத்தைத் தரும் என்ற நல்ல உள்ளம் கொள்வான். அதனால் பிற உயிருக்குத் துன்பம் செய்வதனின்றும் நீங்குவான். இவ்வாறாகப் புறங்கூறாமை பிற உயிர்களுக்கும் நன்மை செய்வது ஆகும்.'

### நிலத்துக்குச் சுமை

கண்ணன்: தந்தையே, இதனை அறியாமல் பிறர் எப்போது முகம் திரும்புவார் என்று பார்த்திருந்து அவர் முதுகுப் புறத்தைக் கண்டதுமே அவரைக் குறை கூறும் மக்களும் உள்ளனரே!

கண்ணம்மா: அவரும் மக்களுள் ஒருவரெனத் திரிகின்றனர். அவர்களையும் இந்த நிலமும் தாங்குகிறது!

'மக்காள், *ஒருவரைக் காணாத உடனே அவரைப் பற்றிய இழி சொல்லைச் சொல்பவனது உடல் நிலத்துக்கு ஒரு சுமைதான். அந்தச் சுமையையும் தாங்குவதே தனக்கு அறம் என்று கருதி நிலம் அவனையும் தாங்குகின்றது போலும்!

கண்ணன்: புறங்கூறுதலால் நிலத்துக்கும் சுமையாகி விடுகிறான்.

தந்தை: அத்தகைய இழிந்த புறங்கூறுதல் உங்களிடம் இல்லை. இனியும் அது உள்ளத்தை அண்டாத வாறு வாழ்க!

---

* அறன்நோக்கி ஆற்றுங்கொல் வையம், புறன்நோக்கிப் புன்சொல் உரைப்பான் பொறை!

கண்ணன் : தந்தையே, எங்களிடம் இதுபோன்ற தீய தன்மைகள் இல்லாது போனாலும் மேலும் நெருங்காமல் இருக்க எங்களுக்குச் சொல்ல வேண்டியவற்றைச் சொல்லியருளுக!

'மகனே, அவ்வாறு அதிகம் இல்லை. இன்னும் இதுபோன்ற இரண்டை மட்டும் உங்கட்கு விளக்கிப் பின் நல்லன சிலவற்றை அறிவுறுத்துவேன்.

# பயன் உள்ளவை சொல்க!

மாசற்ற அறிஞர் ஆகுக!

" தந்தையே, எனக்கொரு இளையவன் உள்ளான். கல்வி கற்று வருகிறான். பல நேரங்களில் பயனில்லாத செயல்களில் ஈடுபடுகிறான். பொறுப்பற்றவனாகத் திரிகிறான். அவனது மேம்பாடு கருதி நான் அடிக்கடி பலவற்றைச் சொல்வதுண்டு. அன்பாகச் சொல்வேன். இனிமையாகச் சொல்வேன். ஆயினும், தவறுவதை அவன் விடுவதில்லை. அந்நேரங்களில் கண்டிப்பு வகையில் கடுமையாகச் சொல்லவேண்டி நேர்ந்துவிடுகின்றது. அக்கடுஞ் சொல்லால் ஓரளவு திருத்தமும் காண முடிகிறது. இவ்வகையில் கடுஞ்சொல்லைக் கொள்ளலாமா?''

'மகனே, இனிமை அல்லாத சொற்களைச் சொல்லாதிருப்பதுதான் நல்லது. ஆயினும், இனிய சொல்லின் நன்மையை அறியாதவரிடம் கடுஞ்சொல்லைச் சொல்ல நேர்வது இயல்பே. அவ்வாறு சொல்வதால் பெரும் பயன் விளைதல் வேண்டும். மகனே, நீ இல்லறச் சான்றோனாகத் திகழவேண்டியவன். ஆகையால் *சான்றோர் *இனிமை அல்லாத சொற்களைச் சொன்னாலும்*

* நயனில சொல்லினும் சொல்லுக ; சான்றோர்
பயனில சொல்லாமை நன்று.

*சொல்க! ஆனால், பயனில்லாதவற்றைச் சொல்லாதிருக்கும் தன்மை சிறந்தது என்பேன்.*

மக்காள், சொல் என்பதே ஏதேனும் ஒரு பொருளைக் கொண்டதாகும். பொருள் பயன் தந்தால்தானே அது பொருள் எனப்படும். அந்தப் பயனும் பெரும் பயனாக அமைவதே சிறந்தது. அறிவில் சிறந்த சான்றோர் எல்லாவற்றிலும் அருமையான பயன்களையே நாடி நிற்பர். **அருமையான பயன்களை நாடி நிற்கும் அறிஞர் பெரும் பயனைத் தராத சொற்களைச் சொல்ல மாட்டார்.*

மகனே, அறிஞரினும் தெளிந்த அறிஞர் உண்டு. அவர் எதையும் தெளிவோடு நோக்கும் திறன் படைத்தவர். தம் கருத்துக்களை வாழ்வியலோடும், உலகியலோடும் ஒட்டிப் பார்ப்பர். பார்த்து அவற்றின் தீமைகளை ஆராய்ந்து முடிவு காண்பர். அம்முடிவால் உள்ளத்தில் ஐயமும், கலக்கமும் இல்லாத நிலை பெறுவர். அந்த நிலைதான் மயக்கம் அற்ற நிலை. மயக்கமற்ற அறிஞர் குற்றமற்ற அறிவினராவர். ***மயக்கத்தினின்றும் தெளிவுபெற்ற குற்றமற்ற அறிஞர் பயனில்லாத சொற்களை மறந்தும் சொல்லமாட்டார்.* அறிஞரும், சான்றோரும் பயன் தரும் சொற்களைச் சொல்லுதலை இயல்பாகக் கொண்டவர்கள். நீங்களும் கொள்க!

பயனுள்ளவற்றைச் சொல்பவர் சான்றோர் என்று குறித்த நான் பயனில்லாதவற்றைச் சொல்லுவோர் எத்

* அரும்பயன் ஆயும் அறிவினர் சொல்லார்,
பெரும்பயன் இல்லாத சொல்.

** பொருள்தீர்ந்த பொச்சாந்தும் சொல்லார், மருள்தீர்ந்த
மாசறு காட்சி யவர்.

தகையவர்; எவற்றைப் பெறுவர் என்பனவற்றையும் சொல்லவேண்டும் அன்றோ?'

"சொல்லியருளுக தந்தையே!"

## பயனற்றன தருபவன் பயனற்றன பெறுவான்

'மகனே, பயனில்லாதவற்றைப் பேசுபவன் வெற்றுப் பேச்சுக்காரன். அவன் தன் பேச்சால் மற்றவரையும் வெற்று ஆட்களாக ஆக்குபவன். அதனால், நல்லவர்கள் பலரும் அவனை வெறுப்பர். *பலரும் வெறுப்பு அடையுமாறு பயனில்லாத சொற்களைச் சொல்லுபவன் எல்லாராலும் இகழப்படுவான்.

'கண்ணு, தன்னோடு நட்புக்கொண்டவர் நண்பர் தானே என்று நன்மையல்லாத செயலைச் செய்யலாமா?'

"கூடாது தந்தையே. நட்பு நன்மைக்கே. நண்பர்க்கே தீமை செய்தால் மற்றவர்க்கு எதையும் செய்யலாம் என்று ஆகிவிடும். ஆகையால், நண்பரிடத்தில் நன்மை அல்லன செய்தல் தீதுதான்."

'மகனே, **நன்மை அல்லாதவற்றைத் தன்னோடு நட்புக்கொண்டவரிடம் செய்தல் தீது. பலருக்கு முன்னர் பயனில்லாத சொற்களைச் சொல்லல் அதைவிடத் தீது. மேலும் ஒருவனது ஒரு தன்மையைக் கொண்டு மற்ற சில தன்மைகளையும் அறிந்து கொள்ளலாம். ஒருவன்

* பல்லார் முனியப் பயனில சொல்லுவான்
எல்லாரும் எள்ளப் படும்.

** பயனில பல்லார்முன் சொல்லல், நயனில
நட்டார்கண் செய்தலின் தீது.

ஒரு தன்மையை மிகுதியாக வெளிப்படுத்துவானானால் அந்தத் தன்மையே அவனது பிற தன்மைகளை அறிவிக்கும் அன்றோ?'

"ஆம், தந்தையே. புறங்கூறும் இழிந்த தன்மை இவன் அறம் சொல்லும் உள்ளம் இல்லாதவன் என்பதைக் காட்டும் என்று நேற்று அறிந்தேன்."

'அதாவது காட்டிற்று. சில தன்மைகள் வாய் திறந்து பேசுவது போன்று சொல்லும். பயனில்லாத பேச்சு அவ்வாறு சொல்லுவது. பயனில்லாது பேசுபவன் ஆராய்ந்து எண்ணிப் பார்த்துப் பேசுபவன் அல்லன். வாய்ப் போக்கில் வெற்றுப் பேச்சு பேசுபவன். அந்தப் பேச்சின் இடையே அவன் உள்ளத்து எண்ணங்களைக் காட்டும் சொற்களும் அவனையறியாமல் வந்து விழும். அச் சொற்கள் எதைச் சொல்லும்? *பயன் இல்லாதவற்றை விரிவாகச் சொல்லும் சொற்கள் 'இவன் நன்மை யில்லாதவன்' என்பதைச் சொல்லும். என்ன மகளே சிரிக்கிறாய்?'

"தந்தையே, ஒருவரால் பேசப்படுவதே சொல். அந்தச் சொல்லையும் பேசவைத்து விட்டீர்களே என்று நினைத்தேன்; மகிழ்ந்தேன். அதிலும் ஒருவர் ஒன்றுமில்லாததைச் சொல்ல அவர் வாய்ச் சொல்லோ அவருக்குப் புறம்பாக அவர் கொண்ட தீய தன்மையைச் சுட்டுவதை எண்ணினேன்; சிரிப்பு வந்தது.'

கண்ணன்: அந்தப் பயனில்லாதவற்றையும் விரிவாகச் சொல்லப் புகுந்தது கேடு அன்றோ என்று நினைத்தால் நகைப்பாய் கண்ணம்மா.

---

* நயனிலன் என்பது சொல்லும், பயனில
பாரித் துரைக்கும் உரை.

'மக்காள், *பயன் சாராதது பண்பு இல்லாத சொல். அதைப் பலரிடத்தும் சொல்லுதல் அவனை இனிமை சாராத நன்மையினின்றும் தள்ளிவிடும். இவ்வாறு நீக்கு வதை அறிந்தால் என்ன கொள்வாய் மகளே ?'

"தந்தையே. அவருக்காக இரக்கப்படுவோம்."

'பண்பு இல்லாத சொல்லைச் சொல்பவர் பெறும் தீமைக்கு இரக்கப்படுவீர்கள். **நன்மைப் பண்பு உடைய வர் பயனில்லாத சொற்களைச் சொன்னால் அவரிடமிருந்து இல்லறவளம் தான்மட்டுமன்றி இல்லறப் புகழோடும் நீங் கும். அத்தகையவரைப்பற்றி என்ன கொள்வீர்களோ?'

கண்ணன்: அவருக்காகக் கவலைப்படுவோம்.

## மனிதக் கருக்காய்

'மகனே. அவ்வாருயின், பயனில்லாதவைகளைச் சொல்வதால் அடைகின்ற துன்பங்களை எல்லாம் எண்ணி ஞல் அவனை எத்தகையவன் என்று சொல்வாய் ?'

"அவன் மக்கள் பெறவேண்டிய பயனைப் பெருத வன் ஆவான். ஆகையால், அவன் மக்கள் இனத்தைச் சேர்ந்தவன் என்று சொல்ல மாட்டேன்."

'நன்று. 'சொல்' என்பதற்கு வேறு பொருளை நீ அறிந்ததுண்டா ?'

"உண்டு, தந்தையே. நெல் என்று ஒரு பொருள் உண்டு என்று படித்திருக்கிறேன்."

* நயன்சாரா நன்மையின் நீக்கும், பயன்சாராப்
பண்பில்சொல் பல்லார் அகத்து.

** சீர்மை சிறப்பொடு நீங்கும், பயனில
நீர்மை உடையார் சொலின்.

'நெல் எனப்படுவது எது ?'

'' உள்ளே மணிபிடித்து முற்றியது.''

'அதாவது பயனுள்ளது. மணிபிடிக்காமல் முற்றியது எது ?'

'' கருக்காய் என்னும் பதர் தந்தையே.''

'அதாவது பயனில்லாதது. மணி போன்று பயன் தராத சொற்களைச் சொல்பவனை எவ்வாறு கொள்ளலாம் ?'

'' அவனும் பதர்போன்றவனே என்னலாம். மணியில்லாத நெல்லும் பதர். பயனில்லாத சொல்லும் பதர். நெல்லும் சொல்லும் ஒரு பொருளை உடைமையாலும் இது பொருந்தும் தந்தையே.''

'ஆம், *பயனில்லாத சொற்களை மேலும் மேலும் சொல்கின்றவனை மக்கள் இனத்து மகன் என்று சொல்லுதல் கூடாது. நெல்லுள் பதர்போல் மக்கள் இனத்துப் பதர் என்று சொல்லல் வேண்டும்.'

கண்ணன் : தந்தையே, அத்தகையவர் நிலை மிக இரங்கத்தக்கது. காற்றில் தூற்றப்பட்டு அடுப்புக்கும், குப்பைக்கும் செல்லும் பதரைப் போல ஊரார்ரால் தூற்றப்பட்டுத் துன்பத்திலும் இழிவிலும் தள்ளப்படும் நிலையையன்றோ பெறுவர்.

'மகனே, கண்ணம்மா உன்னை குறும்புக் குறிப்புடன் பார்ப்பதை அறிந்தாயா ?'

சிறிது சிந்தித்த கண்ணன் : அறிந்தேன். பயனில்லாத சொற்களைத் தாங்கள் விளக்கும்போது ஆண்களைக்

* பயனில்சொல் பாராட்டு வானை மகனெனல்;
மக்கள் பதடி எனல்.

குறிக்கும் சொற்களையே இட்டுச் சொல்வதை எண்ணி அவ்வாறு பார்க்கிருள் போலும். ஆண்கள் மட்டுந்தான் பயனில்லாது பேசுபவர்கள் என்பது கண்ணம்மாவின் முடிவு. எனக்கு இதுபோது யாரோ ஒருவர் சொன்ன தாகச் சில தொடர்கள் நினைவுக்கு வருகின்றன.—'ஆண்கள் புற உலகிலும் உலவும் வாய்ப்பில் அமைந்தவர்கள். ஆகவே, பெரும் பகுதி கருதியே சில இடங்களில் மகன் என்று குறித்துள்ள தங்கள் கருத்தையும் குறிப்பாக உணர்ந்து கொண்டேன்'—என்று மக்கட்பேற்றின் விளக்கத்தின்போது சொன்னூர்கள் போலும். கண்ணம்மா தானே அவர்! என்று கூறி நகைத்தான்.

அவளும் திரும்பிக்கொண்டு நகைத்தாள்.

தந்தை: மக்காள், நீங்கள் பெற்றுள்ள தெளிவை எண்ணி மகிழ்கிறேன். உங்கள் இருவருக்குமே சொல்கிறேன்: *எவற்றையேனும் சொல்ல நேர்ந்தால் பயனுடைய கருத்துக்களையே சொல்லுக! (அவ்வாறு சொல்லும்போது) சொற்களில் பயனில்லாத சொற்களைச் சொல்லாது விடுக!

"தந்தையே, பயனற்ற சொற்களால் அடையும் இழி நிலையைக் கேட்கும்போது அதை எண்ணி அஞ்சுகின்றோம்."

'அஞ்சுவது நன்றேயாகும். தீய சொல்லுக்கு அஞ்சுவது போன்றே தீய செயலுக்கும் அஞ்சவேண்டும். இன்றே எல்லா அச்சங்களையும் கொள்ளவேண்டாம். நாளை ஒரு அச்சத்தைக் கொள்ளலாம். இப்போது வேறு அச்சமின்றிச் சென்று வருக!'

* சொல்லுக சொல்லின் பயனுடைய; சொல்லற்க
சொல்லில் பயனிலாச் சொல்.

## தீய செயலுக்கு அஞ்சுக !

### தீய வினை ஒரு செருக்கு

'மக்காள், அச்சமின்றிச் சென்று வந்தீர்க ளன்றோ ?'

" தந்தையே, அச்சம் எங்களை நெருங்கவும் அஞ்சு கிறது. தங்களது தொடர்பு கொண்டு செல்லும் எங் களைப் பயனில்லாத சொல் நெருங்க அஞ்சுகிறது. அதேபோல் தீய செயலும் எங்களை நெருங்க அஞ்சு கிறது. அஞ்சத்தக்கவை எல்லாம் எங்களைக் கண்டு அஞ்சுவதை எண்ணிப் பெருமிதத்தோடு வந்தோம்."

'மகனே, அஞ்சத்தக்கன எல்லாம் அஞ்சுவதை எண்ணிப் பெருமிதம் கொண்டீர்களா? பெருமிதத்தி லும் அஞ்சத்தக்க பெருமிதம் உண்டு என்பதை அறிவீர் களோ ? மகனே, பெருமிதம் என்றால் என்ன ?'

" தந்தையே, உள்ளம் களிப்பால் நிறைந்து விம் முதல் பெருமிதமாகும்."

'அதனைச் செருக்கு என்ற சொல்லாலும் குறிக்க லாம். அச்செருக்கில் நல்ல செருக்கும் உண்டு ; தீய செருக்கும் உண்டு. நல்ல செருக்காக நீ அறிந்தது உண்டே ?'

"ஆம் தந்தையே. பிறர் பொருளை விரும்பாமை என்னும் பெருமிதம்—செருக்கு வெற்றியைத் தரும் என்று இரண்டு நாட்களுக்கு முன்னர் அறிந்தேன்."

'ஆம், பிறர் பொருளை விரும்பாமையால் செருக்கு உண்டாகும். அது நல்ல செருக்கு ஆகும். அஃதே போல்—யாம் வள்ளல் தன்மை உடையோம்—என்னும் தன்மையால் செருக்கு உண்டாகும். மற்றவர்க்கு விருப்பத்தோடு உதவும் ஆண்மையால் செருக்கு உண்டாகும். நட்பால் அடையும் நன்மையால் செருக்கு உண்டாகும். அன்போடு இணைந்து வாழும் காதல் வாழ்வால் செருக்கு உண்டாகும். இவையெல்லாம் செருக்குகளே. ஆயினும் நன்மையால் விளைந்தவை.—யான் மேம்பட்டவன்; எனது பொருள் சிறந்தது—என்னும் எண்ணங்களால் உண்டாகும் செருக்கு உண்டு. யாம் ஒளி பொருந்திய அறிவு பெற்றுள்ளோம்—என்னும் எண்ணத்தால் உண்டாகும் செருக்கு உண்டு. இவைகள் தன்முனைப்பால் விளைந்த செருக்குகள் ஆகும். இத்தகைய செருக்குகள் தீமையையே விளைவிக்கும். இவைபோன்றே பிறனுக்கு இத்தகைய தீமையைச் செய்து விட்டோம் என்று செருக்குக் கொள்வோரும் உண்டு. இவைகளை எல்லாம் கருதித்தான் அஞ்சத்தகும் பெருமிதம் உண்டு என்றேன்.

ஆகவே, தீயசெயல் எனப்படும் செருக்கு அஞ்சத்தக்க ஒன்று. இத்தகைய *தீயசெயல் எனப்படும் செருக்கைக் கண்டு தீயசெயலினர் அஞ்சமாட்டார். மேம்பட்ட சான்றோர் அஞ்சுவர். நீங்கள் மேம்பட்ட இல்லறச்

* தீவினையார் அஞ்சார்; விழுமியார் அஞ்சுவர்,
தீவினை என்னும் செருக்கு.

சான்றோராக வேண்டியவர்கள். ஆகவே தீய செயலுக்கு அஞ்சுக!'

## மேம்பட்ட அறிவு

'மகனே, முன்னரும் தீச்சொல் தீ போன்ற சொல்; தீயினும் கொடியது என்று அறிந்தாயன்றோ? அஃதே போல் தீய செயலும் தீயைவிடக் கொடியதே யாகும். தீயோ, தான் பெற்றுள்ள ஒளியால் விளக்க மாகத் தோன்றும். அஃதேபோது தன்னகத்தே சுட்டுத் தீய்க்கும் கொடுமையையும் கொண்டிருக்கும். தீய செயலும் செய்வோருக்கு விருப்பத்தைத் தந்து நன்மை போன்று தோன்றும். அஃதேபோது தன்னகத்தே தீமைப் பயனை அடக்கிக் கொண்டிருக்கும். தீ பற்றினால் பரவும்; தீய செயலும் பற்றிக்கொண்டால் பெருகும். தீ தான் பற்றிய பொருளைத் தீய்க்கும். தீய செயலும் தான் பற்றியவனை அழிக்கும். தீயைக் கண்டு அஞ்சுவோம். ஆனால் அது நன்மைக்கும் பயன்படும். தீய செயலோ நன்மைக்குத் துணை நிற்காது. *தீய செயல்கள் துன்பங்களையே தருபவை. ஆகையால், அவை சான்றோரால் தீயை விடக் கொடுமையானவையாக அஞ்சப்படும். சான்றோர் எந்நிலையிலும் தீய செயலைக் கொள்ளமாட்டார். எவர்க்கும் தீய செயலைச் செய்ய மாட்டார். தம்மைத் துன்புறுத்துவோர்க்கும் தீய செயலைச் செய்யமாட்டார். **தம்மைப் பகைத்துத் துன்புறுத்துவோர்க்கும் தீயனவற்றைச் செய்யாது விடுதலே தாம்

* தீயவை தீய பயத்தலால் தீயவை
தீயினும் அஞ்சப் படும்.

** அறிவினுள் எல்லாம் தலையென்ப, தீய
செறுவார்க்கும் செய்யா விடல்.

*பெற்ற அறிவு யாவற்றிலும் மேம்பட்ட அறிவு என்று சான்றோர் கூறுவர். சான்றோர் கூற்றாகிய இக்கருத்தை முன்னரும் குறிப்பாக நீவிர் அறிந்ததுண்டு.'*

''ஆம், தந்தையே. பிறர் பொருளைக் கவருதல் அறிவற்ற செயல். அதனைச் செய்வதால் ஒருவன் பெற்றுள்ள நுட்ப அறிவும் பயனற்றுப் போகும் என்று முன்னர் அறிந்துள்ளோம்.''

## வறுமைக்கு வறுமை

'மக்காள், *மறந்தும் பிறனுக்குக் கேடுதரும் தீய செயல்களை எண்ணாது விடுக! எண்ணினால் எண்ணிய அவனுக்குக் கேட்டைத்தர அறம் எண்ணும். மறந்தும் எண்ணாது விடுக என்றேன். ஏனென்றால் மறந்து எண்ணக்கூடிய நிலை ஏற்படலாம். ஒருவன் வறுமையால் துன்புற நேரலாம். அதுபோது அதைத் தீர்த்துக் கொள்ளும் முனைப்பால் தீமையைச் செய்யலாம் வறுமை தீர வேண்டுமே; துன்பத்திலிருந்து விடுபட வேண்டுமே—என்னும் துடிப்பால் தன்னால் செய்யப்படுவது நன்மையா, தீமையா என்று ஆராயாமலே செய்ய முனைவான். அந்த நிலையிலும் செய்தல் கூடாது. **யான் வறுமை பெற்றுள்ளேன்—என்று கலங்கி அதைத் தீர்த்துக் கொள்ள வேண்டிப் பிறர்க்குத் தீயன செய்யக் கூடாது. செய்தால் மீண்டும் வறுமையையே பெற்றவன் ஆவான். தன் தீய செயலால் நன்மை விளைவதுபோல்

* மறந்தும் பிறன்கேடு சூழற்க ; சூழின்
அறஞ்சூழும் சூழ்ந்தவன் கேடு.

** இலனென்று தீயவை செய்யற்க ; செய்யின்
இலனாகும் மற்றும் பெயர்த்து.

தோன்றலாம். வறுமை போகலாம். வறுமை போயிற்றே என்று மீண்டும் மீண்டும் அத்தீமையையே செய்ய முனை வான். அந்த முனைப்பால் அவனது தீச்செயல் வெளிப் படும்; வந்த செல்வமும் அடியோடு போக, மீண்டும் நிலைத்த வறுமையையே பெறுவான்.'

"தந்தையே, வறுமையை நீக்கப் போய் வறுமை யைப் பெறுவது மட்டுமன்றித் தீய செயல் செய்த பழி யால் துன்பமும் நேர்ந்து விடுகிறது. அதனால் வறுமை யைப் போக்க விரும்பிய விருப்பம் துன்பத்தை விரும்பிய விருப்பமாக அன்றோ ஆகிவிடும்!"

'மகனே, மக்கள் தம் இயல்போ துளியளவு துன்பத் தாலும் வருந்துவதை விரும்புவதில்லை. அதற்கேற்ப ஒழுகினால் அந்த விருப்பம் நிறைவேறும். உண்மை யாகவே, *துன்பப் பகுதிகளில் எதுவும் தன்னை வருத்து வதை விரும்பாதவன் தீய செயல்களைத் தானும் பிறரிடம் செய்யாது விடுதல் வேண்டும். விடாது போனால் அவனே துன்பத்தை விரும்பி வரவேற்பவன் ஆவான்.'

### நிழலாய்த் தொடரும்

மகனே, தீய செயல் ஒரு பகை. மக்களால் நேரும் பகை மாறவும் மாறலாம். ஆனால், தீவினையாகிய பகை மாறாது; குறையாது. **எவ்வகையான பெரிய பகை யைப் பெற்றவரும் அப்பகையினின்று மீள்வர். ஆனால், தீய செயலாகிய பகை தான் நீங்காமல் செய்தவனைத் தொடர்ந்து சென்று அழிக்கும்.

* தீப்பால தான்பிறர்கண் செய்யற்க, நோய்ப்பால
தன்னை அடல்வேண்டா தான்.

** எனைப்பகை உற்றாரும் உய்வர்; வினைப்பகை
வீயாது பின்சென் றடும்.

மகனே, நீங்காமல் தொடர்ந்து சென்று அழிக்கும் என்பது உறுதி. தொடர்ந்து செல்லும் என்பதற்கு உவமையாக நிழலைக் கூறலாம். ஒருவனது நிழல் அவனைத் தொடர்ந்து செல்வதைப் பார்த்திருப்பாயே. நிழல் எவ்வளவு தொலைவு நீண்டாலும் அவனோடு தொடர்பு அற்றுப் போகாதது. காலடியில் தொடர்பு கொண்டிருக்கும். மறைந்தாலும் காலடிக்குள் மறைந்து நிற்கும். ஒளிவந்த காலத்தில் அங்கிருந்து வெளிப்பட்டுத் தோன்றும். தீய செயலும் அத்தகையதே. ஆகையால் *தீய செயல்களைச் செய்தவன் கெடுதல் நிழல் ஒருவனை நீங்காது அவனது காலடியில் தங்கிய தன்மையைப் போன்றதாகும். ஒளிக்குமுன் நிழல் காலடியினின்றும் வெளிப்பட்டுத் தோன்றுமன்றோ. அஃதே போல் தக்க காலத்தில் அவனது தீய செயல் உடன் வெளிப்பட்டு அவனைக் கெடுக்கும்.'

### கேடே இல்லாதவன்

மகனே, வாழ்வில் கேட்டை வரவேற்று வாழ்பவர் இல்லை. எவரும் நன்றாக வாழவேண்டும் என்று விரும்பியே வாழ்வர். அவ்வாறு, **ஒருவன் தனக்குரிய நன்மையை விரும்பி வாழ்பவனாயின் தீய செயல்களில் எந்தச் சிறிய அளவும் தன்னை நெருங்க விடாமல் நீக்க வேண்டும். ஆகவே, நன்மையினின்று தவறாமல் ஒழுக வேண்டும்; நன்மையிலிருந்து தவறும் செயல்களில் ஈடுபடவே

* தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை
வீயா தடியுறைந் தற்று.

** தன்னைத்தான் காதலன் ஆயின் எனைத்தொன்றும்
துன்னற்க தீவினைப் பால்.

கூடாது. இவ்வாறு, *தவருன செயல்களில் ஈடுபட்டுத் தீவினை செய்யாது வாழ்வானுனல் அவன் கேடே இல்லாதவன் என்று அறிந்து கொள்க!

மக்காள், நீங்கள் தீவினை செய்யாதவர்கள். வாழ் நாளில் என்றும் அவ்வெண்ணத்திற்கும் இடம் கொடாது நல்லனவற்றிற்கே இடம் கொடுத்து மன்பதைக்கு நல்லவர்களாய் வாழ்க!'

''அவ்வாறே வாழ்வோம் தந்தையே. மன்பதைக்கு நல்லவர்களாய் என்று குறித்தமையால் நாளை அது பற்றிய கருத்து பெற உள்ளோம் என்னும் மகிழ்வுடன் சென்று வருவோம் தந்தையே.''

---

* அருங்கேடன் என்ப தறிக, மருங்கோடித்
தீவினை செய்யான் எனின்.

# ஒப்புரவு செய்க !

## மழை காட்டும் உண்மை

'மக்காள், மழைத்தூறலிலா வந்தீர்கள் ? நனைந்து போனீர்களோ ?

கண்ணன் : இல்லை தந்தையே. சிறுதூறல்தான். நனைப்பு இல்லை. பெருமழையாகப் பெய்து நனைந்திருந்தாலும் மகிழ்ச்சிதான் கொண்டிருப்போம்.

' மழைப்பயிர் விட்டிருக்கிறாய் போலும் !'

''ஆம், தந்தையே. நல்ல மழை பெய்தால் நல்ல விளைவு கிட்டும். இதுபோது நல்ல மழை தேவை. நேற்றிரவு பெய்த மழையும் மகிழ்வைத் தந்தது.''

'உன் தேவைக் கேற்பத்தான் மழை பெய்துள்ளது. அந்த மழைக்கு நீ ஏதேனும் கைம்மாறு செய்ய வேண்டாமோ ?'

கண்ணன் சிரித்தான்.

'என்ன மகனே சிரிக்கிறாய் ?'

'' தந்தையே, மழைக்கு யாரால் என்ன கைம்மாறு செய்ய முடியும் ? செய்தாலும் செய்யும் கைம்மாறு ஈடாகாதே.''

'ஈடாகும் கைம்மாற்றைச் செய்தால் மழை ஏற்றுக் கொள்ளும் என்று கருதுகிருயோ மகனே ?'

''இல்லை தந்தையே. கைம்மாறு கருதி மழை பெய்வதில்லை என்பதை அறிவேன்.''

'மகனே, மழை அறிவிக்கும் உண்மை ஒன்று உண்டு. கைம்மாறு கருதாத மழையால்தான் உலகமே இயங்குகிறது. மக்களும் மழையின் செயலை எண்ணிப் பார்த்துக் கைம்மாறு கருதாத உதவியைப் பிறர்க்குச் செய்து பொது வாழ்வை இயங்க வைக்க வேண்டும் என்ற உண்மையையே மழை தன் செயலால் அறிவிக்கிறது எனலாம். *உலகோர் தமக்கு ஏற்ற காலத்தில் பெய்த மழைக்குக் கைம்மாருக ஏதும் செய்யமுடியாது. அஃதேபோன்று மாந்தருக்கு ஏற்ற காலத்தில் ஒத்த உதவியைச் செய்வது ஒரு கடப்பாடாகும். அந்தக் கடப்பாடும் கைம்மாறு வேண்டுவதன்று. மக்களது பொது வாழ்வின் இயக்கமும் கைம்மாறு கருதாத கடப்பாட்டால் அமைவது. மன்பதை எனப்படும் மக்கட் கூட்டத்தின் வாழ்வே ஒருவர் மற்றவருக்கு உதவி செய்து கூட்டுறவு கொள்ளும் வாழ்வாகும். அதனை எந்த அளவு செய்ய வேண்டும் என்பதையும் மழையே விளக்குவதுபோல் செயல்புரிகிறது. மகனே, மழையின் செயல்களை அறிவாயே ?'

''அறிவேன் தந்தையே. மழை முயன்று கடல் நீரை ஆவியாக்கி முகந்து ஒன்று சேர்க்கிறது. சேர்த்த ஆவியை நீராக்கி யாவர்க்கும் ஒப்பப் பெய்கிறது; காலமறிந்து பெய்கிறது.''

---

* கைம்மாறு வேண்டாக் கடப்பாடு மாரிமாட்
டென்னாற்றுங் கொல்லோ உலகு.

'அது மட்டுமன்று, தான் சேர்த்த நீரை எல்லாம் எஞ்சுதல் இன்றித் தந்து உதவுகின்றது. இத்தகு மழையைப் போன்றே மக்களும் பெருமுயற்சியால் பொருளை ஈட்ட வேண்டும். அவ்வாறு *பெருமுயற்சி எல்லாம் செய்து ஈட்டிய பொருளெல்லாம் உதவி பெறத் தகுதி உடையவருக்கு உற்ற உதவி செய்தற் பொருட்டே யாகும், என்பதனை உணரவேண்டும். பிறருக்கு உதவு வது தம் கடமை என்று உணரவேண்டும். அதனால் தான், அவ்வுதவிக்குக் கடப்பாடு என்ற சொல்லைக் குறித்தேன். இதைவிடப் பொருள் நிறைந்த சொல் ஒன்று உண்டு. அதுதான் ஒப்புரவு என்பது. மாந் தர்க்கு உதவி செய்யக் கடமைப்படுவது; கைம்மாறு கருதாது உதவுவது; பிறரது இன்றியமையாத தேவை யறிந்து உதவுவது; தடையின்றி உதவுவது; பிறருக்கு வளம் தந்து உதவுவது; துன்பம் போக்க உதவுவது; தன் துன்பத்தையும் பாராது உதவுவது; மக்களது பொதுவாழ்வின் இயக்கத்திற்கு ஒத்த நிலையறிந்து உதவுவது — என்னும் இத்துணைக் கருத்துகளையும் கொண்டு விளங்குவது ஒப்புரவு என்னும் சொல்.

**கண்ணம்மா :** தந்தையே, உற்ற காலத்தில் உத வும் பொருளுதவி, செயலுதவி முதலியவற்றைச் செய்வ தால் ஒப்புரவு செய்தவராகலாம் அன்றோ ?

'ஆம் மகளே, ஆயினும் பொருள் உதவிதான் இவற்றுள் பெரும் உதவியாகும். அவ்வுதவியைச் செய் வதாகக் கண்ணை மூடிக்கொண்டு வாரி வழங்க லாமா ?'

* தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு

கண்ணன் : ஆகாது தந்தையே. அதைக் குறிக்கத்தான் தாங்கள் 'தகுதியுடையவருக்கு' என்று ஒரு சொல்லை மேலே அமைத்துச் சொன்னீர்கள்.

'ஆம் உள்ளவருக்குக் கொடுப்பது உதவியாகாது. வேண்டாத வேளையில் கொடுப்பதும் உதவியாகாது. உதவியைப் பெறுபவர் அவ்வுதவிக்கு உரியவராய், அவ்வுதவியைச் சிதைக்காமல் பயன்படுத்துபவராய் அமைவாராயின் அவரே தக்கவர். அவருக்கு உற்ற காலத்தில் செய்யப்படுவதே ஒப்புரவு ஆகும். ஒப்புரவைச் செய்வோரும் மன இன்பம் பெறுவர். பெறுவோருக்கும் வாழ்வின்பம் உண்டு. இவ்வாறு இருவருக்கும் ஒத்து நிற்கும் இன்பம் தருவது ஒப்புரவு. ஆகையால் *ஒப்புரவைப் போன்று நன்மையைத் தரும் பிற எவற்றையும் மேலவர் உலகத்தும் பெற முடியாது; இந்த உலகத்தும் பெற முடியாது. இந்த ஒப்புரவின் சிறப்பை அறிந்து வாழ்பவனே வாழ்வை அறிந்தவன். **ஒப்புரவின் நன்மையறிந்து வாழ்பவனே உயிரோட்டமுள்ள வாழ்க்கை வாழ்பவனுவான். அதனை அறியாத மற்றையவன் செத்தவருள் வைக்கப்படுவான். அவன் வாழ்வு உயிரோட்டமற்ற வாழ்வாகும்.

## ஓர் ஊருணியும் இரு மரங்களும்

'மகனே, ஒப்புரவின் சிறப்பையும், இன்றியமையாமையையும் இயற்கைகளே அறிவிப்பவை. இதனை

* புத்தேள் உலகத்தும் ஈண்டும் பெறலரிதே
ஒப்புரவின் நல்ல பிற.

** ஒத்த தறிவான் உயிர்வாழ்வான் ; மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும்.

மழையைக் கொண்டு யான் அறிவித்ததால் உணரலாகும். மழையைக் கொண்டு ஒப்புரவின் தன்மையை அறிந்ததைப் போன்று வேறு பல இயற்கைகளைக் கொண்டே ஒப்புரவின் மேம்பாட்டைக் காண்போம். மகனே, ஊர் மக்களால் உண்ணப்படும் நீரைக் கொண்ட ஊருணியை அறிவாய். அது ஊர் மக்கள் யாவருக்கும் நீரைத் தருவது. மக்கள் தன்பால் நீரை வேண்டி வரும்போது எவ்விதத் தடையும் இன்றி நீரை வழங்குவது. ஒப்புரவாளனும் இந்த ஊருணி போன்றவன் ஆவான். ஒப்புரவாளன் உலக நன்மையை விரும்புபவன். எவ்வெவ் வகைகளிலெல்லாம் உலக மக்களுக்கு உதவலாம் என்று எண்ணிப் பார்த்து உதவுபவன். எத்தகையவருக்கு எவ்வாறு உதவ வேண்டும் என்று அறிவால் ஆய்ந்து ஆய்ந்து உதவுபவன். இவ்வாறு *உலக மக்களது நல்வாழ்வை அவாவும் பேரறிவாளனாகிய ஒப்புரவாளன் பெற்ற செல்வம் ஊராரால் உண்ணப்படும் ஊருணி நீரால் நிறைந்தது போன்று யாவர்க்கும் பயன்படும். நீரை மக்கள் அவரவர் தேவைக்கேற்ப வேண்டும்போதெல்லாம் பெற்றுப் பயன்பெறுவது போலவே ஒப்புரவாளன் செல்வத்தாலும் பயன் பெறுவர். ஊருணி இசைந்து நிற்பது போலவே ஒப்புரவாளனும் இசைந்து உதவுவான்.'

"தந்தையே, ஊருணி நீர் ஊரவருக்கு இன்றியமையாத பொருள். அதை உவமைகூறி விளக்கினமையால் ஒப்புரவு மற்றவருக்கு இன்றியமையாத உதவியை அடிப்படையாகக் கொண்டது என்பதை அறிகிறேன்."

---

* ஊருணி நீர்நிறைந் தற்றே, உலகவாம்
பேரறி வாளன் திரு.

கண்ணம்மா: ஒப்புரவாளன் தன் செல்வத்தைக் கொண்டு ஊருணி போன்ற இன்றியமையாத பொது அமைப்புக்களைச் செய்து உதவுவதும் ஒப்புரவின் செயலே என்பதையும் குறிப்பாக அறிய முடிகிறது.

தந்தை: ஆம், மக்காள். ஓர் ஊரில் இன்றியமையாத ஊருணி மட்டுமோ அமைந்துள்ளது. சுவை தரும் கனி மரங்கள் இல்லையா? அவை 'தாம் இன்றியமையாத பொருள்கள் அல்ல' என்று காய்க்காமல் பழுக்காமல் இருந்து விடுவதில்லை. அவைகளும் 'துணை உதவிகளாக மக்களுக்கு அமைவோம்' என்று காய்க்கின்றன; பழுக்கின்றன. பழுக்கும் மரங்கள் பயன்பட வேண்டுமானால் அவற்றின் பழங்கள் பறித்து உண்பதற்குத் தக்கனவாக அமைய வேண்டும். வருந்திப் பறிக்கும் படியான தடைகள் இல்லாமல் அமைய வேண்டும். பயனுள்ள மரம் ஒருவனுக்கே உரிமை உடையதாகாமல் பொதுவானதாக அமையவேண்டும். அது தொலைவில் கண்ணுக்குப் படாத செறிவில் அமைந்தால் பயனில்லை. ஆகவே, பழுமரம் ஊர் நடுவே பொதுவானதாய்த் தடையற்றதாய் அமைவதுதான் நலம். ஒப்புரவாளன் இத்தகைய பழுமரத்தைப் போன்றவன் ஆவான். ஒப்புரவாளன் செல்வம் பழுத்த பழம் போன்றது. அவன் அன்பு என்னும் பண்பால் அச் செல்வத்தைப் பொதுமையாக்கிப் பயன் படச் செய்வான். தன் செல்வம் தக்கார் பிறருக்குப் பயன் படுவதற்கே உள்ளது என்று அறிவிப்பதுபோல் உதவுவான். *ஒப்புரவாளனாகிய நல்ல தன்மை உடையவனிடத்துச் செல்வம்அமையுமானால்அச்செல்வம் பயனுள்ள பழங்களைத் தரும் மரம் ஊரின் நடுவே பழுத்ததைப் போன்று தேவைப் பட்டோர்க்கு மகிழ்ச்சியை அளிக்கும்.

* பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால், செல்வம்
நயனுடை யான்கண் படின்.

"தந்தையே, பயனுள்ள மரத்துப் பழம் ஊர் மக்களுக்குச் சுவை தந்து மகிழ்விப்பது. அதனை உவமைகூறி விளக்கினமையால் ஒப்புரவு மற்றவருக்கு மகிழ்ச்சியூட்டும் உதவியைத் துணையாகக் கொண்டது என்று அறிகிறேன்."

கண்ணம்மா: செல்வத்தைக் கொண்டு மக்கட்கு மகிழ்ச்சியூட்டும் கல்வி, கலை முதலிய பொது நிறுவனங்களை அமைப்பதும் ஒப்புரவின் பாற்படும் என்பதையும் குறிப்பாக அறிய முடிகிறது.

தந்தை: நன்று மக்காள். கனிமரம் மட்டும் ஒரு ஊரில் அமைந்தால் மகிழ்ச்சி நிறைந்துவிடுமா? நோய்த் துன்பம் வருந்தும்போது சுவைக்கனி அந்த வருத்தத்தைப் போக்காதே! நோய்த்துன்பத்தைப் போக்க அதற்குரிய மருந்துப் பொருள்களைத் தனது பலவகை உறுப்புக்களிலும் கொண்ட மரம் வேண்டும். அஃதும் எல்லாரும் அறியும் இடத்தில் அமைய வேண்டும். பொதுச் சொத்தாக அமைந்து எவரது தடையும் அற்றதாக வேண்டும். அப்போதுதான் மருந்துமரம் பயன்படும். ஒப்புரவாளன் இத்தகைய மருந்து மரம் போன்றவன் ஆவான். ஒப்புரவாளன் செல்வம் வறுமை நோய் கொண்டோருக்கு மருந்து போன்றது. மருந்து மரம் தன் பட்டையைச் சீவுவோருக்கும், இலை, பூ, காய் முதலியவற்றைப் பறிப்போருக்கும், வேரைக் கல்லுவோருக்கும் தன் துன்பத்தைப் பாராது பயன் தருவதைப்போல அவனும் தன் வறுமை, துன்பம் முதலிய எவற்றையும் நோக்காமல் தான் வருந்தியும் உதவுவான். அந்த அளவு பெருந்தன்மையாளன் ஆவான் ஒப்புரவாளன்.

'ஒப்புரவு என்னும் பெருந்தன்மை கொண்டவனிடம் செல்வம் அமையுமாஞல் அச் செல்வம், தன் உறுப்புக்கள் எல்லாம் மருந்தாக அமைந்து எளிதில் பயன்படத் தவருத மரம் போன்று துன்புற்றவர்க்குப் பயன்படும்.

கண்ணன்: தந்தையே, மருந்துமரம் நோய்த் துன்ப மடைந்தவர்க்குத் தன் சிதைவையும் பாராது உதவுவது, அதனை உவமை கூறி விளக்கினமையால் ஒப்புரவு துன்புற்ருேருக்கு உற்ற துணையாய், வருந்தியும் உதவும் தன்மையது என்று அறிகிறேன்.

கண்ணம்மா: மக்களது நோய்த்துன்பம், இடையூறு முதலியவற்றைப் போக்கும் மருத்துவ நிறுவனங்களை அமைப்பதும் ஒப்புரவின்பால் படும் என்பதையும் குறிப்பாக அறிய முடிகிறது.

தந்தை: இவற்ருல் ஒப்புரவின் விளக்கத்தையும், ஒப்புரவாளரது பெருந்தன்மையான உள்ளத்தையும் உணரலாம்.

கண்ணன்: இத்துணை மேம்பாடுடைய ஒப்புரவை எந்த நிலையிலும் கைக்கொள்ள வேண்டும் என்பதை உணர்கிறேன் தந்தையே.

'மகனே, **ஒப்புரவு என்னும் கடமையை நன்ருக அறிந்து தெளிந்த அறிவினர் தம் வளமான செல்வம் இல்லாத காலத்தும் ஒப்புரவு செய்வதற்குத் தளரமாட்டார்.'

"தந்தையே, தாங்கள் முன்னர்த் தந்துள்ள கருத்துரைகளை ஒன்றுகூட்டி நோக்கினுல் ஒப்புரவு முதலிய

* மருந்தாகித் தப்பா மரத்தற்ருல், செல்வம்
பெருந்தகை யான்கண் படின்.

** இடனில் பருவத்தும் ஒப்புரவிற் கொல்கார்
கடனறி காட்சி யவர்.

நல்ல பண்புகளைக் கைக்கொண்ட வாழ்வினருக்கு வளமான செல்வம் இல்லாமல் போக வழியில்லை என்பதை உணர முடிகிறது."

**தன்னை விற்றும்**

**கேட்டை வாங்குக**

'நன்று சொன்னாய் மகனே. ஒப்புரவு என்னும் நல்ல தன்மையைப் பெற்றவன் வறுமையாளன் ஆதல் இல்லை. மாறாக *ஒப்புரவாளன் வறுமையாளன் ஆதல், அவன் செய்யவேண்டிய ஒப்புரவுத் தன்மைகளை இயல்புக் கேற்பச் செய்யாது வருந்துகின்றமையால் வந்ததாகும். ஆகவே, முறையாகச் செய்யப்படும் ஒப்புரவால் வறுமை வந்து எய்துவதில்லை. வறுமை மட்டுமன்று, எவ்விதக் கேடும் வருவதில்லை. மகனே, ஒப்புரவாளன் ஊரார்தம் வாழ்விற்கு இன்றியமையாத உதவியைச் செய்பவன்; மகிழ்ச்சி தரும் உதவியைச் செய்பவன்; துன்பம் போக்கும் உதவியைச் செய்பவன்; பொது நலமே தன்னலமாக வாழ்பவன். அத்தகையவன் கேடு பெற்றால் அவனை அந்த ஊரார் அந்தக் கேட்டிலேயே வைப்பார்களா என்ன? கேடுவர வகையில்லை. மாறாகக் கேடு வந்தது என்றால் அது உறுதியாகக் கேடு அன்று. கேடுபோல் தோன்றும் பெருக்கமே ஆகும். ஆகையால் **ஒப்புரவினால் கேடு உண்டாகும் என்றால், அந்தக் கேடு விலை கொடுத்தும் பெறத்தக்கது. ஒருவன் தன்னை விலைக்கு விற்றாவது அதற்கு விலையாகக் கொடுத்துப் பெற்றுக்கொள்ளும் அளவு பெருமையை உடையது ஆகும்.

* நயனுடையான் நல்கூர்ந்தா னாதல், செயும்நீர
செய்யா தமைகலா வாறு.

** ஒப்புரவி னால்வரும் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோள் தக்க துடைத்து.

மக்காள், ஆகவே, நீங்கள் ஒப்புரவு கொண்டு மன்பதைக்கு நல்லவர்களாக வாழ்க!'' இன்று பொது மக்களாம் ஊரவருக்கும் உலகத்தாருக்கும் செய்யவேண்டிய பொதுநல உதவி பற்றி அறிந்தீர்கள். நாளை சிறப்பான ஈகைபற்றி அறிவீர்கள்.

# ஈகை கொள்க!

## மேலுலகத்தினும் மேம்பட்டது

"தந்தையே, இன்று சற்று நேரமாகிவிட்டது. தங்களைக் காக்க வைத்துவிட்டோம்; பொறுத்தருள்க!"

'அதனால் குறையில்லை மகனே. உன் பண்பறிந்த யான் நல்ல செயலுக்கே அந்த நேரத்தை நீ செலவிட்டிருப்பாய் என்று அறிவேன்; அப்படித்தானே?'

"தந்தையே இன்று நண்பகல் உணவு முடிந்து நான்கைந்து நாழிகை ஆனபிறகு ஒரு அன்பர் எம் இல்லம் நாடி வந்தார். கந்தல் உடை உடுத்த அவர் மெலிந்த உடலினராய், இரங்கும் தோற்றத்தினராய், ஏழ்மையின் முழு உருவாகக் காணப்பட்டார். உள்ளத்தை உருக்கும் அவரது பார்வையையே என்னால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. கண்ணம்மாவோ உணர்வு இழக்கும் அளவு கலங்கிவிட்டாள். 'பசி' என்று சொல்லவும் நா எழாது பற்களைக் காட்டும் குறிப்பையே அவரால் தர முடிந்தது. மிக விரைவில் உடன் உதவியாகக் கண்ணம்மா ஆவின் பாலை அருந்தக் கொடுத்தாள். அவரும் பருகினார்; களைப்பாறினார். பின் விரைந்து அமைத்த சுவை உணவை அவருக்குப் படைத்தோம். உண்ட

அவர் முகம் மலர்ந்தார். நாங்களும் உள்ளம் குளிர்ந்தோம். பின் அவர் ஓய்வெடுத்துக்கொள்ள ஏற்பாடு செய்துவிட்டு வந்தோம்.'

'மக்காள், நீங்களே நிறைந்த இல்லறத்தவர். நிறைந்த இல்லறம் இது போன்ற உள்ளம் நிறைந்த கொடையைக் கொண்டதாகும். உள்ளம் நிறைந்த கொடைதான் ஈகை எனப்படும். இதுபோன்று *ஒன்றும் அற்ற வறியவருக்கு அவர் விரும்பும் ஒரு பொருளை உள்ளம் உவந்து கொடுப்பதே ஈகையாகும். பிற கொடைகள் எல்லாம் அளந்து கொடுத்துத் திரும்பவாங்கும் பண்டமாற்றுத் தன்மையை உடையதாகும்.

"தந்தையே, இதன்படி நோக்கினுல் இவ்வகை ஈகை அல்லாத பிற சிறந்தன அல்ல என்று ஆகின்றன. இது கொண்டு எனக்கொரு ஐயம் எழுந்துள்ளது. தந்தையே, என் முயற்சியால் நான் ஈட்டித் தொகுத்துள்ள செல்வத்தைக் கொண்டு ஒரு பொதுநல ஏற்பாடு செய்ய இன்று காலை திட்டமிட்டுள்ளேன். அது இந்த ஈகையில் அடங்குவது ஆகாதே?"

'மகனே, நேற்று நீ பெற்ற ஒப்புரவின் விளக்கத்தை நடைமுறையில் செய்ய முனைந்துள்ளாய். அது ஒப்புரவு. இன்று உணவிட்டமை ஈகை. ஒப்புரவு பொதுவாகச் செய்வது. ஈகை சிறப்பாகச் செய்வது. ஒப்புரவு காலத்து உதவி அன்று. ஈகை உடனடியான உதவி. ஒப்புரவைப் பெறுவோர் அந்த ஒப்புரவைப் பெருமலே வாழ்ந்துவிட முடியும். ஈகையைப் பெறுவோர் அதனைப்

* வறியார்க்கொன் றீவதே ஈகை ;மற் றெல்லாம்
குறியெதிர்ப்பை நீர துடைத்து.

பெருமல் வாழ முடியாத நிலையினர். ஒப்புரவு உலக மக்களது தேவையறிந்து தானே முன்வந்து உதவுவது. ஈகை ஒன்றும் அற்றவர் தன்பால் வந்து 'இல்லை' என்று இரக்கும்போது உதவுவது. ஒப்புரவினுல் மகிழ்ச்சியைக் காலஞ் செல்லச் செல்லப் பெறலாம். ஈகை அந்நேரத்திலேயே உவப்பைத் தருவது. ஒப்புரவு செல்வத்தால் மட்டும் செய்யப்படுவது அன்று ; உடல் உதவி போன்ற உதவிகளாலும் அமைவது. ஈகை விரும்பிய பொருளைக் கொடுப்பதால் அமைவது. இவை இரண்டுமே இல்லறத்தார் கைக்கொள்ள வேண்டியன. ஒப்புரவை எல்லாரும் மேற்கொண்டு ஒழுகும்போது பிறரது ஒப்புரவால் நீங்களும் பயன்பெற நேரும் ; பெறலாம். ஆனுல் ஈகை பிறருக்குச் செய்யத்தக்க ஒன்றே அன்றிப் பிறரிடமிருந்து பெற்றுக்கொள்ளக்கூடிய ஒன்று அன்று. *எவ்வகை மேலான வழியில் வருவதாக இருந்தாலும் பிறர் ஈய இல்லறத்தார் பெற்றுக் கொள்வது தீமையாகும். ஆனுல் பிறர்க்கு ஈவதால், மேம்பட்ட நிலையைத் தரும் உலகம் இல்லாமல் போனுலும் ஈதலே சிறந்ததாகும். ஆகவே, மேலுலகத்திலும் மேம்பட்டது ஈகை. ஈகையால் பெறும் இவ்வுலக மேம்பாடே மேம்பாடு !

## இனிய முகம் காணல்

'மகனே, பொதுநலத்திற்கு உன் செல்வத்தை ஒதுக்கத் திட்டமிட்டிருப்பதால் அது பயன் கருதாததே ஆகும். ஆகையால் அஃதும் சிறந்ததே. மக்காள், என் கருத்துரைகளைப் பெறும் நீங்கள் அவற்றைக் கொண்டு செலுத்தும் பண்புடையவர்களாக விளங்குவது அறிந்து

* நல்லா றெனினும் கொளல்தீது ; மேலுலகம்
இல்லெனினும் ஈதலே நன்று.

மகிழ்கிறேன். இப்பண்பு உங்களுக்கு இயல்பாக வந்துள்ள குடிப்பண்பால் அமைந்தது. * 'யான் ஈவதற்குப் பொருள் இல்லாதவன்'—என்று கூறுதல் துன்பம். அந்தத் துன்பத்தைக் கூருமையும், ஈதலும் சிறந்த குடியைச் சேர்ந்தவனிடம் உள்ளனவாகும். நீங்கள் இருவரும் அத்தகைய நல்ல குடியினர். ஆதலால் 'இல்லை' என்னுது ஈகை புரிந்துள்ளீர்கள்.'

''தந்தையே, 'இல்லை' என்று சொல்லி வருவோரது நிலையையும் அவரது மனத் துன்பத்தையும் பார்க்கும் போதும், எண்ணும் போதும் நம் உள்ளம் படும் பாட்டைச் சொல்லால் சொல்ல முடியவில்லையே. அந்நிலையில் அவர்க்கு 'இல்லை' என்று சொல்லவும் மனம் கூடுமோ? 'இல்லை' என்று இரத்தல் மிகக் கொடுமையே யாகும். அதைவிட இரப்பவரைக் காணும்போது பெறும் உள்ளக் கலக்கம் மிகக் கொடுமையாக ஆகிவிடுகின்றது.''

மகனே, அது உண்மையே. ஆயினும் 'இல்லை' என்று இல்லாதவர் கூறக் கேட்பதால் உண்டாகும் துன்பம் நிலைத்திருப்பது அன்று. **இல்லை என்று கேட்டவர் அவர் வேண்டியதைப் பெற்றபின் மலர்கின்ற இனிய முகத்தைக் காணும் வரையில்தான் இரக்கப்படுதல் துன்பமாகும். அதற்குப் பிறகு அஃதே இன்பமாக மாறிவிடும்.

* இலனென்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலனுடையான் கண்ணே உள.

** இன்னு திரக்கப் படுதல், இரந்தவர்
இன்முகம் காணும் அளவு.

## இல்லறத்தார் முன்னே
## துறவறத்தார் பின்னே

கண்ணம்மா: தந்தையே, இரப்பவர் விரும்பும் உணவு, உடை, பொருள் முதலிய பலவற்றையும் ஈகைப் பொருள்களாகக் குறிக்கலாம் அல்லவா?

'ஆம், மகளே. ஆயினும், சிறப்பாக உணவிடுதலே மேம்பட்ட ஈகையாகும். பசியைப்போன்று வருத்து கின்ற துன்பம் வேறு ஒன்று இல்லை; தாழ்த்துகின்ற கொடுமையும் வேறு ஒன்று இல்லை. அத்தகைய கொடிய பசியைப் போக்குதல் இல்லறத்தாருக்கு மிகமிக இன்றி யமையாத முதல் கடமையாகும். அதனால் அவர் பெறும் பெருமை சாலச் சிறந்தது. அத்தகைய சிறந்த பெருமை துறவறத்தார்க்கும் அமைவதில்லை. *துறவறத்தாரது ஆற்றல் தமக்கு ஏற்படும் பசியைப் பொறுத்துக் கொள்வ தாகும். அந்த ஆற்றலும் பிறர் பசியை உணவு கொடுத் துப் போக்குகின்ற இல்லறத்தாரது ஆற்றலுக்குப் பிற் பட்டதேயாகும்.'

கண்ணன்: ஆம், துறவறத்தார் தம் பசியைப் பொறுத்துக்கொள்ளும் ஆற்றல் கொண்டவரே யன்றிப் பிறர் பசியைப் போக்கும் செயல் கொள்பவர் அல்லர்.

கண்ணம்மா: இல்லறத்தாரோ தம் பசியையும் அடக்க வேண்டுவதில்லை. அடக்காமலே பிறர் பசியை யும் போக்குபவர்.

கண்ணன்: ஆகையால், பசியைப் போக்குதலாகிய ஈகை துறவறத்தார் ஆற்றலைவிடச் சிறந்து நிற்கும் பெருமையைப் பெறத் தகுதியுள்ளதாகின்றது.

---

* ஆற்றுவார் ஆற்றல் பசியாற்றல், அப்பசியை
மாற்றுவார் ஆற்றலின் பின்.

**வறிஞன் வயிறே**

**வளமான பெட்டகம்**

'மக்காள், அதுமட்டுமோ ; பசியைப் போக்குவதால் தம் செல்வத்தைச் சேர்த்து வைக்கும் வளமான பெட்ட கத்தையும் பெறலாம். ஒன்றும் அற்ற வறியவர்களைப் பசி பிடித்தால் அவர்களை மேலும் மேலும் கலக்கும்; கரைக்கும் ; அழிக்கவும் அழிக்கும். இவ்வாறு அழிவைச் செய்யும் பசியை அழிபசி என்று சொல்லலாம். அதனைத் தீர்த்துவைக்கக் கொடுக்கப்படும் பொருளோ வீண் செல வுப் பொருள் அன்று. அது அழிபசியை அழிப்பது. பசியைப் பெற்றவனது வயிறு அதனால் நிறையும். வயிறு நிறைந்தால் உள்ளம் நிறையும். உள்ளம் நிறைந்தால் முகம் மலரும். அம்மலர்ச்சியைக் கண்டால் பொருளைக் கொடுத்தவரது உள்ளம் உவக்கும். செல்வம் என்பது உவப்பைத் தருவதற்குத்தானே பயன்பட வேண்டும்? வீணே சேமித்து வைக்கப்படும் செல்வம் இந்த உவப் பைத் தருமோ?'

கண்ணன்: தராது தந்தையே.

'ஆகவே, செல்வத்தைப் பேழையிலே நிறைக்கா மல் பசித்தவன் வயிற்றிலே உணவாக நிறைத்து வைப் பதே உவகை தரும் சேமிப்பு ஆகும். ஆகையால், *வறுமை பெற்றோரது அழிபசியைத் தீர்த்து வைத்தல் வேண்டும். அஃதே செல்வம் பெற்ற ஒருவன் தன் செல் வத்தை வைக்கும் சேமிப்பு இடமாகும்.'

---

* அற்றார் அழிபசி தீர்த்தல் ; அஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி.

*கண்ணன் :* செலவு செய்வதே சேமிப்பாக அமைவதும் ஒரு வியப்புத்தான்.

*கண்ணம்மா :* வறியவன் வயிறே செல்வத்தைச் சேமித்து வைக்கும் வளமான பெட்டகம் ஆவது வியப்பினும் வியப்பு.

*கண்ணன் :* ஆகவே, வியப்பான சிறப்பையும் ஈகை தருவதாகிறது.

தீப்பசி போக்கினுல்

தீப்பிணி தீண்டாது

'மக்காள், இவை மட்டுமோ ! பசியைப் போக்குபவனைப் பசி நெருங்காது. இல்லறத்தான் இயல்பாகவே பகுத்துக் கொடுத்து உண்பவன். அவன் 'இல்லை' என்று பிறர் தன்பால் வரும்போது தனியாக உண்பானே ? அவரை இன்முகங்காட்டி இன்சொற் கூறி அமரச் செய்து அவர் இன்முகம் காட்டும் வரை உண்டி கொடுத்து உதவி, அதனுல் உள்ளம் நிறைந்து மகிழ்பவன் ஆவான். அந்த மகிழ்ச்சியின்போது இவனுக்குப் பசியும் வருமோ ? உள்ள நிறைவு தோன்றிவிட்டால் எல்லா நிறைவும் நிலைத்துவிடுவது மக்கட்கு இயல்பு. எல்லா நிறைவும் நிலைக்கும்போது பசி என்னும் குறைவு தென்படுமோ என்ன ? ஆகையால், *பசி என்று வந்தவருக்குத் தம் உணவைப் பகுத்துக்கொடுத்து உண்ணும் இயல்பைப் பொருந்தியவனைப் பசி என்னும் தீய பிணி தீண்டுதல் இல்லை.'

* பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னும்
தீப்பிணி தீண்டல் அரிது.

கண்ணன் : பிறரது பசியைப் போக்குவதால் தன் பசியைக் காணமல் செய்யும் வியத்தகு செயலைச் செய்கிறது ஈகை.

கண்ணம்மா : பிறரது தீய பிணியைப் போக்கும் மருத்துவன் தன்பால் தீய பிணியை அண்டவோ விடுவான்? அதனால்தான், பசிப்பிணியைப் போக்குபவனை அத்தீய பிணி தீண்டவும் அஞ்சுகிறது.

கண்ணன் : தீண்டல் என்ற சொல்லமைப்பால் பசி நச்சரவம் போன்ற கொடியது என்ற குறிப்பும் தென்படுகிறது.

## இன்பத்தை அறியாதவர்

கண்ணன் : தந்தையே, 'இல்லை' என்று இரப்போர்க்குச் சிலர் தம்பால் பொருளை வைத்துக்கொண்டே இல்லை என்கின்றனர்; மேலும் பொருளைச் சேமிக்கின்றனர். இறுதியில் அப்பொருளால் பயனடையாமலே இழக்கவும் இழக்கின்றனரே, ஏன்?

'மகனே, *பொருளைச் சேர்த்து வைத்து இறுதியில் இழந்துவிடும் அருளற்றவர் எளியோருக்குக் கொடுத்து அதனுல் உவப்படையும் இன்பத்தை அறியாதவர் போலும்! அத்தகையவர் செல்வச் சேமிப்பிலேயே கருத்துடையவர். சேமித்து நிரப்பிக் கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தினர். நிரப்புவதற்காக எவருக்கும் எத்துணை சிறிதும் ஈய மாட்டார். தாமே உண்ண வேண்டும் என்ற கொள்கையைக் கடைப்பிடிப்பார். அத்தகையவர்

* ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல், தாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்.

ஈகையால் உண்டாகும் உவப்பை இழப்பது மட்டுமன்று; இல்லறப் பொலிவையும் இழந்தவர் ஆவார்; இல்லற நெறியையும் அறியாதவர் ஆவார். அத்தகையவர் இரங்கத்தக்க நிலையினர். அவர்தம் உள்ளம் பொருளைச் சேர்க்க அலையும் உள்ளமாகி அமைதியின்றித் துன்புறும் அவர் துன்பமே பெறுவர். ஆகவே. *செல்வத்தைச் சேர்த்து நிரப்பிக் கொள்வதற்காக 'இல்லை' என்போர்க்கு ஈயாமல் தானே தனித்தவராக இருந்து உண்ணுதல் இல்லை என்று இரப்பதைவிடத் (உறுதியாக) துன்பமாகும்.

## இறப்பு இனியது

முடிவாகச் சொன்னல், ஈகையின்றேல் இல்லறம் இல்லை எனலாம். இல்லறத்தின் முடிந்த முடிபான தொண்டு ஈகையேயாகும். அந்த ஈகையைச் செய்யக் காத்து நிற்க வேண்டும். ஈகைக்கு வேண்டிய செல்வத்தை முனைந்து, முயன்று ஈட்ட வேண்டும். இல்லை என்ற சொல்லைக் கேட்காமலே உவந்து நின்று குறிப்பறிந்து ஈய வேண்டும். அந்த ஈகை அமைந்த வாழ்வே வாழ்வு. ஈகை அமையாத வாழ்வு ஒரு தாழ்வு. தாழ்வு மட்டுமன்று, ஒரு பெருந் துன்பமும் ஆகும். மகனே, துன்பங்களில் எல்லாம் இறுதித் துன்பமாக மக்கள் எதனைக் குறிப்பர்?

"தந்தையே, சாதலையே கொடிய துன்பமாக எல்லோரும் குறிப்பர்."

---

* இரத்தலின் இன்னுது மன்ற, நிரப்பிய
தாமே தமியர் உணல்.

*'ஆம், *சாதலைவிடத் துன்பமானது வேறு ஒன்றும் இல்லை. ஆனால், வறியவர் விரும்பிய பொருளைக் கொடுக்க இயலாத இழிந்த நிலையில் அந்தச் சாதலும் இனியதே ஆகும்.'*

கண்ணன் : தந்தையே, முன்னரும் புறங்கூறி வாழ்வதைவிடச் சாதல் ஆக்கத்தைத் தரும் என்றமையும் இங்கு நினைவிற்கு வருகிறது. இல்லறம் என்றால் இல்லாதவர்க்கு ஈய வேண்டும். இல்லாது போனால் இறப்பதே மேல் என்ற முடிந்த முடிபான நிலையை உணர்கிறோம். அந்த நிலை ஏற்படாதபடி முயற்சியோடு வாழ்வோம்.

'மகனே, அந்த வாழ்வுதான் இல்லறத்தின் மணிமுடியாகிய பயனைப் பெறும்.'

கண்ணம்மா : இல்லறத்தின் மணிமுடியாவது எது தந்தையே ?

தந்தை : மகளே, மகனே ; அது அத்துணை எளிதான தன்று. ஒரு நாளில் பெற்று விடுவதன்று. இருப்பினும் நாளை விளக்குவேன்.

---

* சாதலின் இன்னாத தில்லை ; இனிததூஉம்
ஈதல் இயையாக் கடை.

# புகழ் பெற்று வாழ்க !

**உயிருக்கு ஊதியம்**

'மக்காள், இன்று மணிமுடி சூடி மகிழ வந்துள்ளீர்கள் அன்றோ ?'

கண்ணம்மா : தந்தையே, இல்லறத்தின் மணிமுடியாகத் தாங்கள் அறிவிப்பதை உணரும் ஆர்வத்தோடு வந்துள்ளோம்.

கண்ணன் : தாங்கள் மணிமுடியை விளக்கினாலும் பேறு பெற்றவர்கள் ஆவோம் ; எந்த முடியை சூட்டினாலும் பேறு பெற்றவர்கள் ஆவோம்.

தந்தை : கண்ணனுக்கு மணிமுடியைச் சூடிக் கொள்வதில் உள்ள ஆர்வம் வெளிப்படுகிறது. மகனே, நான் குறிக்கின்ற மணிமுடி பிறரால் எளிதில் செய்து சூட்ட முடியாதது ; தாங்களாகவும் எடுத்துச் சூட்டிக் கொள்ள முடியாதது ; தானே வந்து அமைவது. இந்த வியப்பான முடி உடலிலுள்ள தலைக்குச் சூட்டப்படுவதன்று. உயிருக்குச் சூட்டப்படுவது.

கண்ணம்மா : அவ்வாறாயின் எங்களுக்கு இரண்டு முடிகள் தேவைப்படா.

தந்தை : ஒருயிராய் வாழும் உங்களுக்கு ஒரு முடி போதுமானதே. நீங்கள் விரும்பினாலும் இரண்டு முடிகள் கிட்டா. ஏனென்றால் அம்முடி பொன்னால் செய்து வைரமும் மணியும் பதிக்கப்பட்டு முத்து தொங்க விடப்பட்டுச் செய்யப்படுவது அன்று. ஈகையால் உருப் பெற்று ஒப்புரவு, நல்லொழுக்கமும், அறம் முதலியவற் றால் அழகு செய்யப்படும் புகழ் என்னும் முடியாகும் அது. ஆகையால் அதனைத் தலையில் சூட முடியாது. உயிருக்குத்தான் அது உகந்தது; சிறந்தது. அதனை நீங்கள் பெறத் தகுதி பெற்றவர்கள். *இல்லாதவர்க்கு ஈதலால் புகழ் உண்டாகுமாறு வாழ்தல் வேண்டும். அந் தப் புகழ் அல்லாது உயிருக்கு வேறு ஒரு ஊதியம் இல்லை. இந்தப் புகழே இல்லறத்தின் மணிமுடியாகும். மக்காள் அதனைப் பெறுக !

கண்ணன் : தந்தையே, இல்லறத்தின் முடிந்த முடிபான பயன் புகழ் பெறுதல்தான் என்றாகிறது.

கண்ணம்மா : அந்தப் புகழை அடையும் வழி ஈதலே என்று அறிவித்து அதனை எங்களுக்கு எளிதாக்கி யிருக்கிறீர்கள், தந்தையே

'மகளே, எளிதாகத் தோன்றினாலும் அது சிறந் ததே. **உலகத்தில் நன்னெறிகளை உரைக்கும் சான்றோர் சிறப்பித்து உரைப்பன எல்லாம் 'இல்லை' என்று இரப் போர்க்கு ஈபவர்மேல் நிலைக்கின்ற புகழையேயாகும்.

* ஈதல் இசைபட வாழ்தல் ; அதுவல்ல
ஊதியம் இல்லை உயிர்க்கு.

** உரைப்பார் உரைப்பவை எல்லாம், இரப்பார்க்கொன்
றீவார்மேல் நிற்கும் புகழ்.

**பொன்ருததது புகழ்**

கண்ணன் : தந்தையே, பிற எல்லாவற்றினும் புகழ் சான்ரேரால் இவ்வாறு சிறப்பிக்கப்பட வேண்டிய காரணம் என்ன ?

'மகனே, பிற எல்லாம் என்று எவற்றைக் குறிக்கிருய் ?

"பொன், பொருள், உயர்நிலை முதலியவற்றை எண்ணினேன்."

'மகனே, இவையெல்லாம் ஒன்றைக்கொண்டு மற்ருென்றைப் பெற்றுக்கொள்ளப் பயன்படுவன. ஒன்றுக்கு ஒப்பாக மற்ருென்றைச் சொல்லிவிடலாம்; கொள்ளவும் கொள்ளலாம். புகழ் இத்தகையது அன்று. புகழ் ஒப்பற்ற ஒன்று. மேற்சொல்லப்பட்ட பொன், பொருள் முதலியன எல்லாம் எத்துணைக் காலத்திற்கு நிலைக்கும்? அவை அழிவன. புகழ் ஒப்பற்ற ஒன்ருய் அழியாதது. ஆகையால்தான், புகழ் மேம்பட்டதாகச் சான்ரேரால் உரைக்கப்படுவதாயிற்று. இத்தகைய *மேம்பட்ட புகழ் அல்லாமல் உலகத்தில் ஒப்பற்ற ஒன்ருக அழிவின்றி நிலைத்திருப்பது வேறு ஒன்றும் இல்லை.'

கண்ணம்மா : தந்தையே இந்த உலகத்தில் பெற வேண்டியதாக ஒன்றே ஒன்றைக் குறிப்பதென்ருல் புகழ் ஒன்றையே குறிப்பிடலாம் என்ருகிறது.

'ஆம் மகளே, அதிலென்ன ஐயம்? புகழ் ஒன்றுதான் இல்லறத்தார் பெறவேண்டியது. அவர் கடைப்

* ஒன்ரு உலகத் துயர்ந்த புகழல்லால்
பொன்ருது நிற்பதொன் றில்.

டிக்கும் இல்லறப் பண்புகள் எல்லாம் ஒன்றுகூடிப் கழைத்தான் தரும். அந்தப் புகழும் நெடுங்காலம் லைத்து நிற்கும் புகழாக அமையவேண்டும். இல்லறப் ண்புகளைவிடாது வாழ்நாள் முழுவதும் கடைப்பிடிக்க வண்டும். இவ்வாறு *நிலவுலகின் எல்லையில் நெடுங் ாலம் நிலைத்து நிற்கும் புகழைச் செய்தால், மேம்பட்ட ான்றோர் உலகமும் புலவரைப் போற்ருது ; புகழ்பெற்ற ல்லறத்தாரையே போற்றும்.'

ளர்க்கின்ற கேடும்
லைக்கின்ற சாக்காடும்

கண்ணன் : தந்தையே, ஈகை செய்வதால் பெறப் டும் புகழ் இத்துணைச் சிறப்பு உடையதாகிறதே !

'மகனே, நீங்கள் இருவரும் ஈகைக்குரிய நல்ல உள்ளத்தை இயல்பாகப் பெற்றுள்ளீர்கள். அதனால், ங்கட்கு எளிதாகத் தோன்றுகின்றது. உண்மையை நாக்கினல் புகழ்பெறுதல் என்பது எல்லோர்க்கும் ளிதன்று ; மிக அரிதாகும்.'

கண்ணன் : எவ்வாறு தந்தையே ?

தந்தை : புகழ்பெற வேண்டுமாயின் வாழ்வில் தன் நலத்தைப் பெரிதாகக் கருதுதல் கூடாது. தன் நலத் தைக் கருதாததுமட்டுமன்று ; தன் வாழ்வில் கேடு அமைந்தாலும் கலங்கக்கூடாது. அந்தக் கேட்டிலும் புகழைப்பெறும் செயலில் ஈடுபட்டால்தான் புகழ் வள

* நிலவரை நீள்புகழ் ஆற்றின், புலவரைப்
போற்ருது புத்தேள் உலகு.

ரும். அவ்வாறு கேட்டிலும் புகழுக்கு ஈடுபடுவது என்பது எல்லார்க்கும் எளிதன்று. கேட்டைப் பெற்று வளர்த்த புகழை நிலைக்கச் செய்ய வேண்டுமென்றால் அதற்கு இறக்கும் வரை செயலாற்ற வேண்டும். அதனால், இறப்பு நேர்வதாயினும் செயலாற்ற வேண்டும். இஃதும் எல்லார்க்கும் எளிதன்று. அருமையான செயல் திறமையும் மன உரமும் பெற்றார்க்கே இவைகள் எளியனவாகும். ஆகையால், *புகழின் வளர்ச்சிக்காக நேரும் வாழ்வின் கேடும், புகழ் நிலைத்து நிற்பதற்கு ஆகும் சாக்காடும் அருமையான செயல் திறமையும், மன உரமும் வாய்ந்த வித்தகர்க்கே எளிதாகும் ; அவரல்லாராம் மற்றவர்க்கு அரிதாகும்.

கண்ணன் : தந்தையே, கேடு வளர்ச்சியைத் தருவதும் சாக்காடு நிலைப்பதும் ஒரு புதுமையே. இப்புதுமையால் புகழுடையோரின் சிறப்பை நன்றாக அறிய முடிகிறது.

புகழோடு வெளிப்படுக !

இகழோடு நொந்துகொள்க !

'மக்காள், நீங்களும் அத்தகைய சிறப்புடையவராக வேண்டுமன்றோ ! அதற்கு இல்லறத்தில் எத்துறையிலும் முனைந்து நின்று திறமையாகச் செயலாற்ற வேண்டும். இல்லறம் பலவகைப் பண்புச் செயல்களாகிய துறைகளைக் கொண்டது என்பதை அறிவீர்கள்.

* நத்தம்போல் கேடும் உளதாகும் சாக்காடும்
வித்தகர்க் கல்லால் அரிது.

ஆகவே, *இல்லறத்துறையில் முனைந்து வெளிப்படுவதானால் புகழோடு வெளிப்பட வேண்டும். அந்தப் புகழுக்குரிய செயல் இல்லாதவர் இல்லறத்தாராய்த் தோன்றுவதை விட வெளிப்படாதிருப்பதே நன்று. அவ்வாறன்றி வீணுக்கு வெளிப்படுவதால் என்ன கிட்டும்? அவனைச் சான்றோர் புகழ்ந்தா உரைப்பர்?'

கண்ணன்: இல்லை, தந்தையே. புகழ்ச்சிக்கு மாறுபாடான இகழ்ச்சியையே பெறுவர்.

'ஆம், சிலர் இவ்வாறு இகழ்ச்சியையே பெறுவதுண்டு. அத்தகையவர் தம்மை இகழ்பவரை வெறுத்துப்பேசி நோகச் செய்வதும் உண்டு. அது மக்கள் தன்மையன்று. தாம் பெற்ற இகழ்ச்சியால் அவர் உணரத்தக்கது ஒன்று உண்டு. தாம் ஏன் இகழ்ச்சியைப் பெற்றோம் என்று எண்ணி உணர்வதே அது. அவ்வாறு உணர்வதால் தாம் செய்த தவறுகளை உணரலாம். உணர்ந்தால் தமக்குத் தானே நொந்து கொள்ள வேண்டும். அந்நோவால் மீண்டும் தவற்றைச் செய்யாமல் நீக்கி நல்லன செய்து புகழ்பெற்று வாழ முனையலாம். இவ்வாறு **புகழ் உண்டாகுமாறு வாழ முனையாதவர் தம் முடியாமைக்குத் தம்மைத்தாமே நொந்து கொள்ளாதவராய்த் தம்மை இகழ்வாரை நொந்து கொள்வது ஏனோ?'

* தோன்றிற் புகழொடு தோன்றுக; அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று.

** புகழ்பட வாழாதார் தம்நோவார், தம்மை
இகழ்வாரை நோவ தெவன்?

வையத்தார்க்கு எல்லாம் வசை

'மக்காள், அத்தகையவர் இல்லறத்தின் உண்மைப் பயனை அறியாதவர்கள். எப்பயன் அழிந்தாலும் புகழ்ப் பயன் அழியாதது என்பதை மறந்தவர்கள். மக்களது வாழ்நாளுக்குப் பின் எஞ்சி நிற்பது புகழ் அல்லது பழியன்றோ !'

கண்ணன் : ஆம், தந்தையே. ஒருவரது தகுதியும், தகுதியின்மையும் அவர்க்குப்பின் எஞ்சும் புகழாலும் பழியாலும் அறியப்படும் என்று முன்னரும் குறித்துள்ளீர்கள்.

தந்தை : அத்தகைய எச்சமாகிய புகழும், பழியும் ஒன்றுக்கொன்று மாறுபட்டவை. புகழ் அமைந்தால் பழி வராது ; பழி வந்தால் புகழ் அமையாது. இல்லற வாழ்வினர் புகழ் பெறாது போனால் அஃது இல்லறத்திற்கே இழுக்காகும். அத்தகையோரால் இல்லறம் பழியைப் பெறுவதால் இல்லறத்தார் யாவருமே பழிக்குரியவராகக் கருதப்படவும் கூடும். ஆகவே, ***மக்களது வாழ்விற்குப் பின்னே எஞ்சி நிற்பதாகிய புகழ் என்னும் எச்சத்தைப் பெறாது விட்டால், அது வையத்து வாழும் இல்லற மாந்தர்க் கெல்லாம் பழி என்பர் சான்றோர்.**

கண்ணம்மா : ஒருவர் தாம் செய்யும் தவற்றால் இல்லறப் பகுதிக்கே இழிவைத் தந்தவராகிறார்.

கண்ணன் : ஆம் இல்லறத்தார் பழியைப் பெற்றார் என்று பொதுவாகத்தானே பேசப்படும். அப்பேச்சு

* வசையென்ப வையத்தார்க் கெல்லாம், இசையென்னும் எச்சம் பெறாஅ விடின்.

இல்லறப் பழியைப் பெற்றது என்ற பொருளைத் தந்து இல்லறத்தார்க்கெல்லாம் வசையைத் தந்துதான் தீரும்.

### நிலம் விளையாது

'மக்காள்' அதுமட்டுமோ! புகழற்ற இல்லறத் தானைத் தாங்கும் நிலமும் குறையைப் பெறும்.'

கண்ணன்: முன்பும், புறங்கூறும் புன்சொல் கொண்டவனை நிலம் அறம் நோக்கித் தாங்கும் என்று தாங்கள் குறித்தமை நினைவிற்கு வருகிறது தந்தையே.

தந்தை: மகனே, அஃதாவது அவன் நிலத்துக்குச் சுமை என்ற அளவோடு அவன் குறையாக அமைந்தது. புகழ் பெருதவனல் நிலமே குறையப் பெறும். நிலம் வளமெல்லாம் சுரக்கும் அன்னை. தன்பால் அமைந்துள்ள வளங்களைப் பெருமல் சோம்பிக் கிடப்பாரைப் பார்த்தாலே அவ்வன்னை—என்னிடம் இருக்கும் வளங்களைப் பெருமல் ஏங்கிக் கிடக்கிருனே—என்று நகைப்பவள். அவ்வாறு, முயலாதவர்க்கு நகைப்பைத் தந்து முயல்வோர்க்கு வளத்தைத் தருவது நிலத்தினது இயல்பு. உழைப்போர் தம் முயற்சிக்கு ஏற்பக் குறையின்றி வழங்கும் தன்மையைக் கொண்டது நிலம். அத்தகைய நிலம் புகழற்ற உடலைத் தாங்குவதால் தன் இயல்பினும் மாறுபடும். *புகழ் இல்லாத உடலைத் தாங்கும் நிலம் குறைவில்லாத வளப்பத்தையுடைய விளைவு இல்லாமல் குன்றிப் போகும்.

* வசையிலா வண்பயன் குன்றும், இசையிலா
யாக்கை பொறுத்த நிலம்.

கண்ணம்மா : புகழ் இல்லாத இல்லறத்தார் நிலத்துக்கும் கேடு தந்தவர் ஆவார்.

கண்ணன் : கண்ணம்மா புகழ் இல்லாதவரை உயிரும் உடலும் இணைந்தவராகக் கூறுது. 'உடலைத் தாங்கும் நிலம்' என்று உயிரற்றவராகவே தந்தையவர்கள் குறித்ததை நோக்கினையா ?

கண்ணம்மா : ஆம், அவன் உடலும் மண்ணுக்குக் கேடு என்ற குறிப்பு அதிலுள்ளது. வாழும்போது மட்டுமன்று, இறந்த பின்னரும் அவன் உடலும் கேடு தரும் என்ற கருத்தும் பொருந்தியுளது. உடல் மண்ணில் மக்கினல் உரம் ஆகும் என்பர். சிற்றூர்களில் '' நாயை அடித்து நாரத்தைக்குப் போட்டால் நல்ல உரம் ஆகும் ; நன்ருகக் காய்க்கும்' என்பர். புகழ் பெருதவன் உடலோ உரத்திற்கும் பயன்படாமல் நாயினும் கீழாய் கேட்டுக்கே பயன்படும் என்பதை எண்ணும்போது நகைப்புதான் தோன்றுகிறது. அஃதொடு புகழ் பெருதவன் ஈகை. ஒப்புரவு முதலிய இல்லறப் பண்புகள் இல்லாதவன். ஒப்புரவை அறியாதவன் செத்தாருள் வைக்கப்படுவான் என்று முன்னர் தந்தையவர்கள் குறித்தமையும் இங்கே பொருந்துகிறது.

கண்ணன் : தந்தையவர்கள் அன்பை விளக்கும் போதும் உயிருக்கும் உடலுக்கும் உள்ள தொடர்பு அன்பால் அமைவதாகும் என்ருர்கள். அன்பை உள்ளத்தில் பெருத வாழ்க்கை உயிர் பெருத பட்ட மரம் என்ருர்கள். அன்பின்வழிச் செல்வதுதான் உயிர்நிலை என்ருர்கள். அத்தகைய அன்பில்லாதவர் தானே ஒப்புரவு கொள்ளார் ; ஈகை செய்யார் ; இகழ்ச்சியையும் பெறுவார். அவர் உயிரற்ற வெற்றுடல் போன்றவர்தானே !

**உண்மை வாழ்க்கை**

'மக்காள், நீங்கள் பெற்றுள்ள உள்ளத்தெளிவை எண்ணி மகிழ்கிறேன். நீங்கள் இதுபோது நினைவு படுத்திக் கொண்டதற்கு ஏற்ப, முடிந்த முடியாகப் புகழற்றவர் உயிர் வாழ்க்கை அற்றவர் என்றே கூறிவிட லாம். ஆகையால், *தம் இல்லற வாழ்வில் புகழ் இன்றி வாழ்பவரே உண்மை வாழ்க்கை வாழாதவர் ஆவார். பழி இன்றி வாழ்பவரே உண்மை வாழ்க்கை வாழ்பவ ராவார்.

'மக்காள், புகழுக்குரிய பண்புகளை எல்லாம் அறிந் துள்ளீர்கள். அறிந்து தெளிவு பெற்றுள்ளீர்கள். தெளி வொடு செயலாற்றும் உள்ள உரமும் கொண்டுள்ளீர் கள். இவைகளே வாழ்வாங்கு வாழும் வகை. இவ் வகையைப் பெற்றுள்ள நீங்கள் வானுறையும் தெய்வங் கள் அன்றோ!'—என்றார் வள்ளுவத் தந்தையார்.

அமர்ந்திருந்த பெண் தெய்வம் அண்மையிலிருந்த ஆண் தெய்வத்தைத் தொழுதது. ஆண் தெய்வம் அருந் தெய்வமாம் வள்ளுவத் தந்தையைத் தொழுதது. பெண் தெய்வமும் இணைந்து தொழுதது.

ஆண் தெய்வம் பேசவும் தொடங்கிற்று: தந் தையே, தங்கள் அறிவுரைகளாலும், வாழ்த்தாலும் எல் லாத் தகுதிகளும் பெறுவோம். எங்கள் மேல் இத் துணைப் பரிவு கொண்டு பேருரைகளை நல்கியமை எங் களைப் பெறும் பேறு பெற்றவர்களாக ஆக்கியுள்ளது.

* வசையொழிய வாழ்வாரே வாழ்வார்; இசையொழிய வாழ்வாரே வாழாதவர்.

'மக்காள்; இவை யாவும் உங்களுக்கு மட்டும் அன்று. உங்கள் வாயிலாக உலக இல்லறத்தார் யாவர்க்கும் நான் அறிவிக்கும் கருத்துரைகள் இவை. உலகோரும் பெற்றுப் புகழ் பெறுக! மக்காள், உங்களோடு சில நாட்களாக அளவளாவியதை எண்ணி உவக்கின்றேன். அவ்வுவப்போடு உங்களை வாழ்த்துகிறேன். நிறைந்த வாழ்வுறுக! நீடு புகழ்பெறுக! சென்று செயல் புரிக!

கண்ணன்: தந்தையே உங்களது உவப்பான வாழ்த்தால் மகிழ்ந்து பூரித்து நிற்கும் எங்களது உளமார்ந்த நன்றியை ஏற்றருள வேண்டும்.

இருவரும்: வணக்கம் தந்தையே.

வள்ளுவர்: வாழ்க! வாழ்க!!

# மேடைத் தமிழ்.

**இயற்றமிழில் ஒரு புதிய தோற்றம்.**

*கவிஞர் கோவை. இளஞ்சேரனரின்*

## புதுமைப் படைப்பு.

முறையோடு கூட்டத்தை இயக்க –
துறைதோறும் சொற்பொழிவாற்ற –
நிறைவாகச் சுவைக்க –
வகை கூட்டும் **முதன்மை நூல்.**

பலவகைக் கூட்டங்களை அமைத்து மேடையை இயக்கும் ஆட்சித் திறனுக்கு இலக்கணம் வகுக்கும் இயக்கப் பால், பலமுனைச் சொற்பொழிவுகட்குச் செப்பங் காட்டி இலக்கணங் கூட்டும் பொழிவுப் பால், கேட்போர் சுவைஞராய்த் திகழ்தற்குரிய அமைதியையும், நிகழ்ச்சியால் விளையும் பயனையும் வகுக்கும் விளைவுப் பால் என முப்பால்களைக் கொண்ட நூல்.

இனிய உரைநடையில் விரிவுரையான கருத்து விளக்கம் பெற்று, அவ்வக்கருத்தின் ஈற்றீற்றில் ஒவ்வொரு நூற்பாவாக 300 சிந்தியல் வெண்பாக்களால் ஆகிய புதுமை நூலாக

விரைவில் வெளிவர உள்ளது.

# கலைக்குடில் வெளியீடுகள்.

*ஆசிரியரின் பிற நூற்கள்:*

★ கோவை. இளஞ்சேரன்
கவிதைகள். ரூ. 4 – 00

★ மணியான பேச்சு ரூ. 3 – 00

★ நகைச்சுவை
நாடகங்கள் ரூ. 1 – 25

*அச்சில்:*

★ அக்கரை வானொலியில்
இக்கரை இலக்கியம். ரூ. 2 – 50

❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖

விற்பனை உரிமை:
*மாரியப்பா ஏஜன்சி,*
22, நடுவர் கீழத்தெரு,
நாகப்பட்டினம்.

